கல்கி

குவிஸ் போட்டி

பங்கேற்பது எளிது;
பரிசோ மிகப் பெரிது!

அடுத்த இதழில் (5.11.2000)
ஆரம்பமாகிறது.

குளுகுளு, ஜிலுஜிலு கனவுகளுடன்
சூட்கேஸைத் தயார் செய்யுங்கள்

முதல் பரிசாக அமெரிக்க பயணம்

இரண்டாவது, மூன்றாவது பரிசுகளும் உண்டு!

அழைக்கிறது அமெரிக்கா!

ROUTE 66

கல்கி இண்டர்நெட் முகவரி : www.kalkiweekly.com ஈ மெயில் : kalkiweekly@vsnl.com

சென்னை எழும்பூரில் உள்ள கோ-ஆப்டெக்ஸ் நிறுவனத்தின் தில்லையாடி வள்ளியம்மை பட்டு விற்பனை நிலையம். மின் விளக்குகள் ஜொலிக்க, விழாக்கோலம் பூண்டிருந்த ஷோரூமில் பெண்கள் கூட்டம் அலை மோதிக் கொண்டிருந்தது. ஷோரூமுக்கு வெளியே இருந்த அறிவிப்பு பலகையில், நடப்பாண்டில் அறிமுகப்படுத்தப்படும் புதிய புடைவைகளின் பெயர் எழுதப்பட்டிருந்தது. இன்ப ஆச்சர்யம், 'கல்கி' என்ற பெயரிலும் ஒரு பட்டுப்புடைவை ரகம் அறிமுகப்படுத்தப்

# கல்கி பெயரில் புடைவை!

பட்டிருந்தது!

ஆவலாக உள்ளே நுழைந்தோம். நம்மைக் கடந்து போன பல பெண்கள், கைகளில் விதவிதமான மெஹந்தி போட்டிருந்தனர். கோ-ஆப்டெக்ஸ் வரும் பெண்கள் கையில் மருதாணி போட்டுக் கொண்டுதான் வர வேண்டும் என்று ஏதாவது 'ரூல்' போட்டிருக்கிறார்களா என்று குழம்பி, அருகிலிருந்த ஊழியரிடம் கேட்டோம்.

"இது விழாக்கால கொண்டாட்ட நிகழ்ச்சியில் ஒன்று. காலை பத்து மணி முதல் இரவு எட்டு மணி வரை பட்டுப்புடைவை வாங்க வரும், மகளிருக்காகப் பலபல டிசைன்களில் இலவச மெஹந்தி இடுகிறோம். இது தவிர, புகழ் பெற்ற அழகுக் கலை நிபுணர்களைக் கொண்டு புடைவை வாங்க வரும் பெண்களுக்கு, அழகுக் குறிப்பு மற்றும் கூந்தல் பராமரிப்பு போன்றவற்றில், இலவச ஆலோசனை வழங்குகிறோம். பொம்மைகளுக்குப் புடைவை கட்டும் போட்டியும் உண்டு. போட்டியில் வெல்பவர்களுக்குப் பட்டுப் புடைவை பரிசும் உண்டு" என்று சொன்னதும், அரசு நிறுவனத்திலேயே இத்தனை கலக்கல் ஐடியாக்களா? சபாஷ் சரியான போட்டி என்று எண்ணியபடி, கல்கி பட்டுப் புடைவைகள் விற்பனைக்கு வைக்கப்பட்டிருந்த முதல் தளத்திற்குச் சென்றோம்.

கண்ணை உறுத்தாத வண்ணங்களில், மிக எடை குறைவாக இருந்தன கல்கி பட்டுப்புடைவைகள். பழைமையும் புதுமையும் இணைந்த டிசைன்களில் பாரம்பரியத்தின் தொனி. சேலம் கைத்தறி தொழிலாளர்கள் தயாரித்துள்ள கல்கி புடைவை ரகம் தவிர, ஸ்வாதி, ஈஸ்வரா, ராஜம், பல்லவி போன்ற புதிய ரகங்களும் இந்தத் தீபாவளிக்கு அறிமுகப் படுத்தப்பட்டிருக்கின்றன. இந்தப் புடைவைகள் அனைத்தும் நடுத்தர மக்கள் வாங்கும் விலையில் ரூபாய் ஆயிரத்து நானூற்று ஐம்பது முதல் ரூபாய் ஒன்பதாயிரம் வரை விலை நிர்ணயம்



செய்யப்பட்டு அதில் இருபது சதவீத தள்ளுபடியும் தருகிறார்கள். கூடவே தினசரிகளில் வரும் விளம்பரத்தைக் கத்தரித்து எடுத்து வருபவர்களுக்கு ஐந்து சதவித தள்ளுபடி அதிகமாம். கல்கி உட்பட புதிய அறிமுகங்களில் ஐயாயிரம் புடைவைகள் தீபாவளிக்கு விற்பனையாகி இருக்கின்றன என்கிறார்கள். நாம் பார்வையிடச் சென்றிருந்தபோது

கல்கி புடைவையை வாங்க வந்திருந்தார் லலிதா சுதாகரன்.

"பாரம்பரிய டிசைனில் ஃபேன்சியான லுக்குடன் கல்கி புடைவை வந்திருப்பதாகத் தோழி சொன்னாள். குறிப்பாக வெயிட் லெஸ், விலைகுறைவு, தரமான ஜரிகை ஆகிய விஷயங்கள் என்னைக் கவர்ந்து விட்டன" என்றார் சேலையைத் தோளில் போட்டுப் பொருத்தம் பார்த்தபடி.

கைத்தறிப்பட்டுப் புடைவைக்குக் கல்கியின் பெயர் வைக்கப்பட்ட கதையைச் சொன்னார் தில்லையாடி வள்ளியம்மை பட்டு நிலைய மேலாளர் கிருஷ்ணமூர்த்தி (அட! இவருக்கும் கல்கியின் பெயர்)

"காஞ்சிபுரம், சேலம், ஆரணி, திருப்புவனம், கோவை போன்ற ஊர்களின் கைத்தறிப் பட்டு நெசவாளர்களை வைத்து புடைவை உற்பத்தி செய்கிறோம்.



ஒவ்வொரு ஆண்டும் நிர்வாகக் குழு கூடி அறிமுக ரகங்களுக்குப் பெயர்களை முடிவு செய்வார்கள். கடந்த ஆண்டு கல்கியின் நூற்றாண்டு விழா என்பதால் அதை நினைவு கூறும் வகையில்தான் பட்டுப் புடைவைக்குப் பெயர் வைத்திருக்கிறோம்"

என்றவர், "நடுத்தர மக்கள் அதிகம் விரும்பும்வண்ணம் அதை வடிவமைத்து உருவாக்கியிருக்கிறோம்" என்கிறார்கள்.

அந்த ஷோரூமில் கோ-ஆப்டெக்ஸ் வரலாற்றிலேயே இல்லாத புதிய வழக்கம் ஒன்றையும் ஆரம்பித்து வாடிக்கையாளர்களைக் குஷிப்படுத்தி வருகிறார்கள். பட்டுப்புடைவை வாங்கும் ஒவ்வொரு தாய் குலத்திற்கும் வெள்ளிக் குங்குமச் சிமிழோடுதான் புடைவையை டெலிவரி செய்கிறார்களாம். ஷோரூமை விட்டு வெளியே வரும்போது நம் கண்ணில் இன்னொரு விஷயமும் தென்பட்டது. ஒவ்வொரு மாதத்திலும் உள்ள முகூர்த்த நாட்களை டைம்டேபிள் போல பெயிண்டில் எழுதி வைத்திருந்தார்கள். கோ-ஆப்டெக்ஸின் வெற்றிக்கு இது போன்ற சின்னச் சின்ன விஷயங்களும்கூட பெரிய பங்காற்றி இருப்பதைப் புரிந்து கொள்ள முடிந்தது.

**- சக்கரத்தாழ்வார்**

படங்கள்: **ராஜன்**

• கல்கி புடைவை!

# சுகி

## சூப்பர்மார்க்கெட்

மூச்சைப் பிடிச்சுக்கிட்டு கமி சகாப்தம் 'டூ'வுக்கு ரெடியாகியிருக்கிற ரசிகர் மன்ற ரத்தினங்களுக்கு எ வெரி வார்ம் வெல்கம் – எஸ்பெஷலி ஃபார் மிஸ்டர் கொடுவேரி.

பெப்ஸி உமா ஸ்டைல்ல முதல்ல கேட்டுடறேன் – இவ்ளோ நாளா என்ன பண்ணிட்டிருந்தீங்க...? ஒ தெரியுமே! எப்பவும் போல ஆபீஸ் போய் புதன்கிழமை கல்கி படிச்சு, 'சே நோ கமி!'ன்னு அலுத்துக்கிட்டு, குரோர்பதியில் 'ஹர்ஷ்' அமிதாப் கையால செக்கும் ஆலிங்கனமும் வாங்கறதைப் பார்த்து ஏங்கி, தீபாவளி போனஸ்ல செலவு போக மிச்சம் பிடிச்ச துக்கினியூண்ட எதுல இன்வெஸ்ட் பண்றதுன்னு தெரியாம கன்ஃப்யூஸ் ஆகி... இதானே?

வெளிய எந்தத் திட்டத்துலயும் சேர்ந்து ஏமாறாம பொண்ணு கல்யாணத்துக்கு சேஃபா சேமிக்க ஒரு திட்டமிருக்காம். வேற ஒண்ணுமில்லே... ஆண்டுக்கு நாலுமுறை – மனைவியின் பர்த்டே, வெட்டிங் டே, பொங்கல், நியூ இயர்னு – தலா ஒரு சவரன் வாங்கி பேங்குல லாக்கர்ல வைச்சுடணுமாம். (வசதிப்படி ½ அல்லது கால்சவரன் கூட வாங்கலாம்) – இந்த 'ஸெல்ஃப் சேவிங்' (சிலேடை எப்படி!) ஸ்கீமை சிபாரிசு செய்யறது யாருன்னு தெரிஞ்சா அதிசயப்படுவீங்க!

காலஞ்சென்ற தமிழ்ப் பேராசிரியர் சி. பாலசுப்ரமணியம்! அவரைப் பற்றி ஒரு புக்– அவர் மகனே – சி.பா. சேரன் - எழுதியிருக்கார் – 'சீர்மிகு. சி.பா.' **(இனிய காவியா பதிப்பகம், சென்னை - 29, விலை ரூ. 75)** அப்பாவைப் பத்திப் பையன் எழுதறார்ன்றது தெரியாம பண்ணியிருக்கறது நல்ல டெக்னிக் – அதுலதான் வரது இந்த சவரன் சமாசாரம்.

அதுல பெண்ணுரிமை பத்தி சி.பாவோட ஒரு கவிதைல இரண்டு வரி பாருங்க.

*'தன்னுரிமை பிறரெடுத்துத் தருவதல்ல; அதுவே*
*தன்னுள்ளத்தில் பூப்பதுவாம்..'*

வெரிகுட்! ஆனா சி.பா 'பெண்கள் வேலைக்குச் செல்வதை விரும்பாதவர்' என்றும் அதே புக்ல வருது... ஸோ மச் ஃபார் லிபரேஷன்!

நம்ம வயல்காட்டுல பெண்கள் வேலைக்குப் போகாம இருந்துட்டா வயிறு ரொம்புமா...?

ரசிகர் மன்ற உறுப்பினர்கள் இதுக்கு ரியாக்ட் பண்ணினா என் காலம்லே சேர்த்துக்குவேன்.



• சி.பா



• பாரதிதாசன்

## நெருக்கம் பழகிய

நெருங்கிப் பழகின ஒரு பெரிய மனிதர்கிட்டே ஏற்படக்கூடிய பிரமிப்பு மாறாம எழுதப்பட்டிருக்கு இன்னொரு புக்– 'பாரதிதாசனோடு பத்து ஆண்டுகள்' **(விழிகள் பதிப்பகம், சென்னை – 41, விலை ரூ.60)**. ஈரோடு தமிழன்பன் எழுதினது. பிரமிப்பு காரணமாக உண்மைகளை மறைச்சுடலைன்றது இந்த புக்கோட பெரிய பிளஸ் பாயின்ட்...

பாரதிதாசனோட 'கொள்கையே தமிழ் நாட்டில் எல்லோரும் கவிஞர்களாக வேண் டும்' என்பதுதானாம். (நல்ல காலம் அது நிறைவேறல்ல!) அப்படிப்பட்டவருக்குத் தப்பு தப்பா தமிழ் எழுதினா சகிச்சுக்க முடியுமா...? தப்பா எழுதினவங்களை எப்படி திட்டினார்னு ரொம்ப டீடெய்லா விவரிக்கிறார் தமிழன்பன்! வேடிக்கை என்னன்னா சுருட்டுப் பத்த வைக்க மாட்ச் பாக்ஸ் கிடைக்கலைன்றதுக்கும் அதே மாதிரி தீவிர கோபம் வந்திருக்கு கவிஞருக்கு! (ரௌத்திரம் பழகுன்னு பாரதியார் சொன்னதை எப்படி சீரியஸா எடுத்துக்கிட்டாரு!)

அகிலனுக்கு சாகித்ய அகடமி பரிசு வரணும்னு ஆசைப்பட்டவர் சுத்தானந்த பாரதியை பிடி பிடின்னு பிடிச்சுருக்கார். அதுக்கான காரணம் அப்போதும் இப்போதும் எப்போதும் புரியவில்லையென்றார் தமிழன்பன்!

பாரதிதாசன் எதிர்பார்த்த லெவல்ல கவிஞரான தமிழர் ஈரோடு தமிழன்பன். அதனால தான் இந்த உரைநடை புக்லயும் பல இடங்கள்ல அவரை அறியாம பொயட்ரி ஃப்ளோ ஆகுது!

# பாரதிதாசன்!

'நம்பர் ஒன் தமிழ் வார இதழ்'ல யார் யாரு சுந்தர ராமசாமியோட கட்டுரை படிச்சீங்க? 'என் வாழ்க்கைல எல்லா தாழ்வுகளுக்கும் மனைவிதான் காரணம்'னு லெட்டர் எழுதின ஜி. நாகராஜனோட போட்டலா ஒரு நிமிஷத்துல ஃப்ரெண்ட்ஷிப்பை கட் பண்ணியிருக்கார் சுந்தரராமசாமி!

நாகராஜனோட குட் ஃப்ரெண்ட்தான்; அவர் அசீவ்மெண்ட்ஸை கண்டு பிரமிச்சவர்தான்; அவர் எழுத்தை ரொம்ப மதிச்சவர்தான். அப்படியும் அவரால ஓவர்நைட் தொடர்புகளைத் துண்டிக்க முடிஞ்சிருக்கு. நல்ல வைராக்கியம். ஆனா நாகராஜன் அவருக்குத் தனிப்பட்ட முறையில எழுதின லெட்டரை சு.ரா. இப்படி ஓபனா போட்டு உடைக்கலாமா?

இலக்கிய கூட்டம் போர்ந்து வெளியில வா கபி, ஒரே சஃபகேட்டிங்கா இருக்குன்னு சில ரீடர்ஸ் மனசுல பேசிக்கிறது கேக்குது. வந்தாச்!

மதுரை மீனாட்சி கோயில்ல இருந்த நாயக்கர் கால பெயின்டிங்ஸையெல்லாம் திரும்ப டச் அப் பண்ற வேலையை எடுத்துச் செய்துகிட்டிருக்கார் வினோத்ன்னு ஒரு பெயின்டர். 'கேரளக்காரர். தாந்திரீகத்துல ஈடுபாடு உண்டாம். எந்த கெமிகலும் யூஸ் பண்ணாம, எல்லாமே இயற்கை பொருள் கொண்டு பண்ணியிருக்கார். ஒரு பெயின் டிங்கை முடிக்க ஆறு மாசம் ஆயிருக்கு' பரமசிவனோட 64 திருவிளையாடலையும் இவர் 'டச் அப்' பண்ணியாகணும். நெக்ஸ்ட் இயர்



சித்திரைத் திருவிழாவுக்கு முன் னாடி முடிச்சுடுவேன்றாரு... தட்ஸ் எ தாந்த்ரிக் ஃபார் யூ!

ஓ.கே. ஃபைனலா ஜோக். மியூசிகல் ஜோக். ஒரு பாடகர் கச்சேரி பண்ணிட்டிருந்தார். முதல் மூணு பாட்டும் வேட்டை நாய் ஸ்பீட்ல ஓடியாச்சு. நாலாவதை ஆரம்பிச்சப்ப மிருதங்ககாரர் 'வாஸ்தவம்! வாஸ்தவம்!'னு கையெடுத்துக் கும்பிட்டாராம். அது என்ன பாட்டுன்னு கெஸ் பண்ண முடியுமா...?

'சாந்தமு லேகா சௌக்யமு லேது!' பாவம் தியாகராஜர் அஞ்ட் கோ. சரி அந்தப் பாடகர் யாருன்னு கெஸ் பண்ண முடியுமா...?

கீப் கெஸ்ஸிங்!

— கபி

கோயமுத்தூரில் நடந்த கோல்டு மேளாவில் ஒரு கலக்குக் கலக்கி, சமீபத்தில் சென்னை ஆழ்வார்பேட்டையில் புத்தம் புதிய ஷோ ரூம் திறந்திருக்கும் கீர்த்திலால் காளிதாஸ், கோவையி லேயே அறுபது வரு டங்களுக்கு மேல் வியாபாரம் செய்து காலூன்றியவர்கள்.



• அஜித் டி. மேத்தா

"நீங்கள் நடத்திய கோல்டு மேளா எப்படி இருந்தது?'' என்று கேட்டோம்.

''வழக்கமான வியாபாரத்தைவிட அதிகமா இருந்தது. ஒரு இம்பாக்ட் உண்டாக்க முடிஞ்சுது!'' என்றார் அலுவலர்களில் ஒருவரான ஜி.கே. கோபாலகிருஷ்ணன்.

''சென்னையில்தான் ஏற்கெனவே நிறைய தங்க-வைரக் கடைகள் இருக்கிறதே, கோவையிலிருந்து இங்கே வர என்ன காரணம்?''

"அறுபது வருடங்கள் பூர்த்தியானதைத் தொடர்ந்து, தெற்கே முக்கிய நகரங்களில் கிளைகள் திறந்து எங்கள் சேவையை விரிவுபடுத்த விரும்பினோம். அதனால்தான் சென்னைக்கு வந்தோம். விரைவிலேயே ஹைதராபாத், பெங்களூர், கொச்சி என்று சில கிளைகள் திறக்கப் போகிறோம். இங்கே யெல்லாம் கூட எங்களோட ரெகுலர் கஸ்டமர்ஸ் இருக்காங்களே!''

இவர்களுக்கு டிசைனர் டீமே இருக்கிறதாம். சுமார் 25 பேர் அதில் இருக்கிறார்களாம். எல்லோருமே பயிற்சி பெற்றவர்கள்.

"சாதாரணமா இப்போ மார்க்கெட்ல போற எல்லா வகையான ஜுவல்லரிகளும், டிரெடிஷனலா செய்யற ஜுவல்லரிகளும் எங்ககிட்ட இருக்கு!'' என்கிறார் கோபாலகிருஷ்ணன். இயந்திரங்களில் உருவாக்கப்படாமல், கைகளால் தயாரிக்கப்படும் இவர்களின் நகைகள் புகழ் வாய்ந்தவையாம். அமெரிக்க, ஆஸ்திரேலிய, துபாய் வாடிக்கையாளர்கள் இவற்றை விரும்பி வாங்குகிறார்களாம்.

"அப்படியானால் இயந்திரத் தயாரிப்புக்கள்?''

"பதினைந்து வருடங்களுக்கு முன்பே எங்கள் நிறுவனத்தில் காஸ்ட்டிங், கட்டிங் என்று எல்லாவற்றுக்கும் இறக்குமதி செய்யப்பட்ட இயந்திரங்களைக் கொண்டு வந்து விட்டோம். ஐம்பது சதவிகித கோல்டுஸ்மித் வொர்க் இவற்றில் நடைபெறுகிறது!''

நியூயார்க்கிலும், பெல்ஜியத்திலும், துபாயிலும் இவர்களுக்கு அலுவலகங்கள் இருக்கிறதாம்.

# நிறம் ஒரு பொருட்டல்ல!

முப்பது, நாற்பது வருட அனுபவம் மிக்க டிசைனர்களும் பரம்பரைப் பொற்கொல்லர்களும் இருந்தாலும்கூட, அவர்களின் எம்.டி. சாந்தகுமார், புதிது புதிதாக ஐடியா கொடுப்பாராம். புதிய புதிய டிசைன்களை உருவாக்கிப் பயிற்சியும் கொடுப்பாராம்.

இங்கே பெரும்பாலும் 22 காரட் நகைகளுக்கே டிமாண்ட் இருக்கையில், பம்பாய் முதலிய நகரங்களில், 14 காரட், 18 காரட் நகைகளுக்குக் கூட நல்ல வரவேற்பு இருக்கிறது என்கிறார் கோபாலகிருஷ்ணன். அவர்கள் நகையின் நிறத்தைப் பற்றி அதிகம் கவலைப்படுவதில்லை என்கிறார்.

தங்கத்தில் ஃபிலிகிரி ஒர்க் செய்வதாகவும், கோவையிலேயே இதற்கு ஆதரவு இருப்பதாகவும் கூடுதல் தகவல் தந்தார்.

சென்னைக் கிளைக்குப் பொறுப்பேற்றிருப்பவர் கீர்த்திலாலின் பேரன் அஜித் டி.மேத்தா. இளைஞர். மூன்றாம் தலைமுறை பிஸினஸ்மேன்!

# தமிழ்நாடு அரசு நிதி நிறுவனம்

# பவர்ஃபைனான்ஸ்

நடத்தும்

## டெபாசிட் திரட்டும் முகாம்

உள்ளூர் காசோலை ஏற்றுக்கொள்ளப்படும்

| திண்டுக்கல் | தேனி |
|---|---|
| **ஹோட்டல் குறிஞ்சி**<br>ஸ்பென்ஸர் வளாகம், முதல் தளம்,<br>பஸ் நிலையம் அருகில்,<br>திண்டுக்கல் - 624 003.<br>தொலைபேசி :<br>427017 / 421056 / 421057<br>நாள் :<br>2 & 3 நவம்பர், 2000 | **ஆதித்யா ஹோட்டல்**<br>முதல் தளம், 840, மதுரை ரோடு,<br>பஸ் நிலையம் அருகில்,<br>தேனி - 625 531.<br>தொலைபேசி :<br>72607, 72437, 75911<br>நாள் :<br>4 நவம்பர், 2000 |

**நேரம் : காலை 9 மணி முதல் மாலை 7 மணி வரை**

| 12.12% | 16.34% |
|---|---|
| 12 மாதங்களுக்கு காலாண்டு வட்டி 10.59%.<br>24 மாதங்களுக்கு காலாண்டு வட்டி 11.10%<br>36, 48, 60 மாதங்களுக்கு மாதந்திர வட்டி 12.00%,<br>காலாண்டுக்கு வட்டி 12.12%. | 60 மாதங்களுக்கு<br>(மாதாந்திர கூட்டுவட்டி<br>ஆண்டுக்கு 12.00%) |




*மேலும் விபரங்களுக்கு தொடர்பு கொள்ளவும் :*

**தமிழ்நாடு மின்விசை நிதி மற்றும்**
**அடிப்படை வசதி மேம்பாட்டு நிறுவனம் (பவர்ஃபின்)**

(தமிழ்நாடு அரசு நிதி நிறுவனம்)

பதிவு அலுவலகம் : எண் 84, டிடிகே சாலை, ஆழ்வார்பேட்டை, சென்னை - 600 018.
தொலைபேசி : 4997689, 4996648, ஃபேக்ஸ் : 044-4982834.

30-9-2000 தேதியிட்ட எகனாமிக் டைம்ஸ் இதழில் வெளியிடப்பட்ட முந்தைய விளம்பரத்தின் தொடர்ச்சியாக இந்த விளம்பரம் வெளியிடப்படுகிறது.

Visit us at : www.tn.gov.in / www.chennaionline.com / www.aaraamthinai.com / www.southindia.com / www.webulagam.com

“நேட்டோ விமானத்தையே கடத்திட்டாங்களா? அமைதியா இருங்க சீஃப். நான் இருக்கேன். பாண்ட்... ஜேம்ஸ் பாண்ட்” சீன்கானரிக்கு ஓய்வு கொடுத்த, இந்நாள் ஜேம்ஸ்பாண்ட், பியர்ஸ் பேசுகிற ஸ்டைலான தமிழுக்குத் தியேட்டரில் விசில் பறக்கிறது. அஜானுபாகுவான ஹாலிவுட் சூப்பர் ஸ்டார் அர்னால்ட் ஸ்வாஸ்நேகர் மட்டும் என்ன? “யார் உரிமையை யார் பறிச்சாலும் இந்த கமாண்டோ அங்கே ஆஜர். மைண்ட் இட்”- கமாண்டோ படத்தில் ஆயாசமாக மெஷின்கன் சுழற்றியபடி தமிழ் டயலாக் பேசும் இவருக்கு, ஜாக்கி சானைப் போல எண்பதுகளிலேயே இங்கே ரசிகர் பட்டாளம் உண்டு. ஒரே ஒரு மாற்றம். ஐந்து ஆண்டுகளுக்கு



• மிஷன் இம்பாஸிபிள் படத்தில்...

– ஒரு சினிமா சர்ச்சை

# தமிழ்பேசும் ஹாலிவுட்! தடைபோடும் கோலிவுட்!!



• ரங்கராஜன்



• ராமன்

முன்புவரை மெட்ரோ நகரங்களில் மட்டுமே இருந்த ரசிகர்கள் இன்று கிராமங்கள்வரை. காரணம், ஹாலிவுட் படங்கள் தமிழ் பேசத் தொடங்கியிருக்கின்றன.

தமிழ் சினிமா வரலாற்றில் முதல் முறையாக கடந்த 1997ஆம் ஆண்டு முப்பத்தைந்து படங்கள் ஆங்கிலத்திலிருந்து, தமிழுக்கு டப்செய்யப்பட்டன. அதில் இருபதுக்கும் அதிகமான படங்கள், பி.சி. சென்டர்களில் திருப்திகரமாக வசூல் செய்ததைத் தொடர்ந்து, ஆங்கில மொழிமாற்றுப் படங்களின் எண்ணிக்கை அதிகரித்தது. கடந்த ஆண்டு இந்த எண்ணிக்கை மேலும் உயர்ந்து தொண்ணூற்று நான்கைத் தொட்டபோது அரைத்த மாவையே அரைத்து வரும் பல தமிழ் சினிமாக்காரர்கள் வயிற்றிலும் வாயிலும் அடித்துக் கொண்டு பதறினர். இப்படியொரு சூழ்நிலையில் தென்னிந்திய திரைப்பட சபையின் புதிய தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கும் கேயார், க்ளைமாக்ஸ் வேகத்தில் ஒரு 'அபாய அறிக்கையே' விட்டிருக்கிறார்.

"ஆங்கில மொழி மாற்றுப்படங்களின் அதிகரிப்பால், நேரடித் தமிழ்த் திரைப்படங்கள் தயாரிப்பது குறைந்துவிட வாய்ப்புள்ளது. ஏற்கெனவே பலகோடி நஷ்டத்தை சந்தித்துள்ள தமிழ்த் திரையுலகம் காப்பாற்றப்பட வேண்டும். எனவே ஹாலிவுட் படங்கள், ஹிந்தி, தெலுங்கு, தமிழ் உள்ளிட்ட பிராந்திய மொழிகளில் மொழியாக்கம் செய்யப்படுவதைத் தடை செய்ய வேண்டும் எனக்கோரி, மத்திய செய்தி ஒளிபரப்பு அமைச்சர் சுஷ்மா சுவராஜிடம் புகார் செய்ய உள்ளோம்" என்று தொடங்குகிறது அவரின் அறிக்கை. பனை மரத்தில் தேள்கொட்ட, தென்னை மரத்தில் நெறிகட்டும் என்பதைப் போல இருக்கிறதே இந்த அறிக்கை என்று வாசகர்கள் (ரசிகர்கள்) கடிதம் நமக்குப் பறந்து வர, களத்தில் இறங்கினோம். உண்மையில் தமிழ் பேசும் ஹாலிவுட் படங்களால் தமிழ் சினிமாவுக்குச் சரிவா?

"பெப்சி-படைப்பாளி பிரச்னையால் படுத்துக் கொண்ட தமிழ்த் திரையுலகம், பட எண்ணிக்கையில் பின் தங்கியபோது, வழியின்றி ஆங்கிலப்படங்களுக்குத் தாவினோம். ஆங்கிலப்பட வாசனையே அறியாத ரூரல் தியேட்டர்களில் கூட நேரடி ஆங்கிலப் படங்கள் ஒருவாரம் ஓடியதைத் தொடர்ந்து, தமிழில் டப்செய்தால் என்ன என்று கேட்கத் தொடங்கினோம். எங்கள் எதிர்பார்ப்பைப் புரிந்து கொண்டு, டைட்டானிக், ஜுராஸிக் பார்க் என்று உலகம் முழுவதும் வசூல் குவித்த படங்கள் தமிழில் டப் செய்யப்பட, இன்று இந்த இரு படங்களையும் பார்க்காத கிராமத்து ஆட்களே இல்லை" என்கிறார் திருச்சி அருகேயுள்ள பொன்மலை பட்டியில் தியேட்டர் ஒன்றை குத்தகைக்கு நடத்திவரும் பால்ராஜ். இதை உறுதி செய்வது போல இருக்கிறது டுவென்டியத் சென்சுரி ஃபாக்ஸ் நிறுவனத்தின் தென் மண்டல மேலாளர் ரங்கராஜனின் கருத்து.

"ஆங்கிலப் பட ரசனை என்பது தமிழ் ரசிகர்களுக்குப் புதிய ஒன்றல்ல. ஆனால் தரமான படங்கள் தமிழில் டப் செய்யப்படும் போது, கிராமத்து ரசிகர்கள், கடுமையான ஆங்கிலம் புரியாது என பயந்து ஒதுங்கிய ரசிகர்கள், பெண்கள் என எல்லோரும் பார்க்கத் தொடங்கியிருப்பதை மறுக்க முடியாது. நானூறு சென்டர்களைக் கடந்து டைட்டானிக் இன்னும் ஓடிக் கொண்டிருக்கிறது. குறிப்பாக கோவையில் ஆங்கிலப் படங்களுக்கு அதிக ரசிகர்கள் இருக்கிறார்கள். நடிகர்கள் அந்நியர்களாகத் தெரிந்தாலும், நெருடல் இல்லாத தாய் மொழியில் பேசுகிற போது படத்தோடு ஒன்றிவிடுகிறார்கள்.

அதற்குத் தரமான டப்பிங் ஒரு முக்கிய காரணம். மம்மி, முகமூடி, ஏலியன்ஸ், அடிமை வம்சம் போன்ற படங்கள் வெற்றிகரமாக ஓடியதற்கு இதுதான் காரணம். டப்பிங் குவாலிட்டி இல்லாத வேதாளம், மம்மி டாடி, ஜீமும்பா போன்ற படங்கள் வெளியான வேகத்திலேயே திரும்பி வந்தன. அதேபோல் ஜாக்கிசான் நடித்த 'சங்காய் நூன்' படத்தை சங்காய் தளபதி என்ற பெயரில் டப் செய்தார்கள். அதில் ஜாக்கிசான் பேட்டைத் தமிழ் பேசியதால், ரசிகர்கள் நிராகரித்து விட்டார்கள். இப்போது எக்ஸ்மேன் படமும், மிஷன் இம்பாசிபிள் இரண்டாவது பாகமும் தமிழில் டப் செய்யப்பட்டு வசூலில் சாதனை படைத்து வருகின்றன. காமிக், மெலோ டிராமா, ஆக்ஷன் படங்களைக் கலை ரசனையோடு உருவாக்கும் ஹாலிவுட்டின் நேர்த்தியை, தமிழ் ரசிகர்கள் ருசி பார்த்து விட்டார்கள். இன்னொரு பக்கம் ஜுராசிக் பார்க் போன்று விலங்குகளை மையமாக வைத்து எடுக்கப்படும் படங்களுக்கு மொழிச் சிக்கல் இன்றி நல்ல வரவேற்பு கிடைக்கிறது. ஆனால் கார்ட்டூன் படங்கள் பிசினஸ் ஆவதில்லை. இருபத்துநான்கு மணி நேரமும் இயங்கும் கார்ட்டூன் சேனல்களின் படையெடுப்பே இதற்குக் காரணம்" என்று அடுக்குகிறார் இவர்.


• முனிகன்னையன்


• ஜானி

"முப்பது வருடங்களாக ஆங்கிலப் படங்களுக்கு மக்கள் தொடர்பாளராக பணியாற்றி வரும் ராமனின் பார்வை இது:

"தமிழ் சினிமாவில் கதையை நம்பி படமெடுப்பவர்களை விரல்விட்டு எண்ணிவிடலாம். நல்ல கதை இருக்கும் படங்களில் கூட மும்தாஜும், ரம்யா கிருஷ்ணனும் ஆடினால் தான் ஓடும் என்று இவர்களாகச் சப்பைகட்டு கட்டுகிறார்கள். அதையும் மீறி கதையோடு வரும் படங்களில் ஹீரோவுக்கு என்று எக்ஸ்ட்ரா பிட்டிங்குளை சேர்க்கிறார்கள். டூயட் பாடுவது, காதலிப்பது, ஒன்று சேர்வது என்று எல்லா ஹீரோக்களும் ஒருத்தர் வாலை இன்னொருவர் பிடித்துக் கொண்டு திரிகிறார்கள். இதனால்தான் தமிழ் ரசிகர்கள் வெறுத்துப் போனார்கள்" என்று கொதித்த ராமனை, நரசிம்ம அவதாரம் எடுக்க வேண்டாம் என கேட்டுக் கொண்டு, சென்னையில் ஆங்கிலப் படங்களை அதிகம் திரையிடும் சத்தியம் தியேட்டரின் மேலாளர் முனிகன்னையனைச் அவர்களைச் சந்தித்தோம்.

"இந்தியாவில் தாராளமயம் வந்த பிறகு, ஹாலிவுட் படங்களை யார் வேண்டுமானாலும் இறக்குமதி செய்யலாம் என்ற நிலை வந்துவிட்டது. ஆங்கிலப்படங்களை தமிழ் ரசிகர்கள் விரும்புவதற்கு முதல் காரணம், எழுபது நிமிடங்களில் படம் முடிந்துவிடுகிறது. படத்தின் பிரமாண்டமும், தொழில் நுட்பமும் அவர்களைக் கவர்ந்து விடுகிறது. உயர்ந்த தொழில்நுட்பத்தில் தயாரிக்கப்படும் படங்களை டிஜிட்டல், டால்பி போன்ற அதி நவீன சவுண்ட் சிஸ்டத்துடன் துல்லியமாகத் திரையிடுவதால் ரசிகர்கள் வியந்து போகிறார்கள். நேரடி தமிழ்ப் படங்கள் இல்லாதபோது, ஹிந்தி, தெலுங்கு, ஆங்கில படங்கள்தான் தியேட்டர்களைக் காப்பாற்றி வருகின்றன. தமிழ்ப்படங்களின் தயாரிப்பு குறையும் என்று கேயார் சொல்வதையும் நாம் அலட்சியம் செய்துவிட முடியாது"என்கிறார்.

ரசிகர்கள் என்ன சொல்கிறார்கள் வாரத்தில் மூன்று ஆங்கிலப்படம் பார்ப்பதாகக் கூறும் ஏசி மெக்கானிக் ஜானி ஆச்சர்யம் கூட்டுகிறார்.

ஸ்பீட், க்ளிஃப் ஹாங்கர் மாதிரி அதிக நாள் ஓடும் படம் மட்டுமே பார்த்து வந்தேன். இப்போது அப்படியில்லை. மம்மி, க்ளாடியேட்டர், நெகோஷியேட்டர் மாதிரி கதையுள்ள படங்கள் தமிழில் டப் செய்யப்படும் போது கதை நன்றாகப் புரிகிறது. ஒருவரின் கதையை அவங்க எடுக்கிற விதம் பிரமிப்பா இருக்கு. தொடக்கத்தில் எனக்கு ஜாக்கிசானையும் வேன்டேமையும் விட்டால் எந்த ஹாலிவுட் ஹீரோவையும் தெரியாது. இப்போது புரூஸ்வில்லிஸ், நிக்கோல்ஸ் கேஜ், டென்செல்வாஷிங்டன், டாம்குரூஸ், மெல்கிப்சன், கெவின் ஸ்பேசின்னு ஒரு டஜன் நடிகர்களோட விசிறி. இப்போதெல்லாம் ஹிட்மேன் மாதிரியான மார்ஷியல் ஆர்ட் (கராத்தே, குங்பூ) படக் குப்பைகளைப் பார்க்கிறதே இல்லை" என்கிறார் ஜானி!

இவர் போன்ற ரசிகர்கள் சொல்வதைப் பார்த்தால் 'நாலுபாட்டு, நாலு பைட்டு' என்று படமெடுப்பதிலிருந்து மீண்டு வந்து கொஞ்சம் சுயமாக சிந்திக்க வேண்டிய காலத்தின் கட்டாயம் தமிழ் இயக்குனர்களுக்கு வந்திருக்கிறது. இந்த எச்சரிக்கை மணியில் விழித்துக் கொண்டால் டில்லிக்குப் போய் சுஷ்மா சுவராஜ் வீட்டு மணியை அடிக்க வேண்டிய அவசியம் ஏற்படாது.

— விஷ்ணுவல்தாசன்

எங்களது சாதனைப் பயணத்தில் மற்றுமொரு வெற்றிச் சிகரத்தைத் தொடுகிறோம்.

அமரர் **கல்கி**யின் நூல்களை **மிகக் குறைந்த விலையில்***

**கையடக்கப் பதிப்பாகத்** தருகிறோம் !

## இம்மாத புதிய வெளியீடு

# பார்த்திபன் கனவு

**424 பக்கங்கள் விலை ரூ.50.00**

**சலுகை விலை ரூ.35.00**

தபாலில் பெற, தபால் மற்றும் கட்டுச்செலவு ரூ. 10.00 சேர்த்து ரூ.45.00 மட்டும் தபால்காரரிடம் செலுத்தி நூலினைப் பெறலாம்.




## விற்பனையாகும் மற்ற நூல்கள்

| பொன்னியின் செல்வன் | சிவகாமியின் சபதம் | அலைஓசை |
|---|---|---|
| 6 தொகுதிகள் | 4 தொகுதிகள் | 4 தொகுதிகள் |
| 2728 பக்கங்கள் | 1242 பக்கங்கள் | 1064 பக்கங்கள் |
| விலை ரூ.390.00 | விலை ரூ.175.00 | விலை ரூ.160.00 |
| சலுகை விலை ரூ.150.00 | சலுகை விலை ரூ.100.00 | சலுகை விலை ரூ.90.00 |
| தபாலில் பெற, தபால் மற்றும் கட்டுச் செலவு ரூ. 35.00 சேர்த்து ரூ.185.00 மட்டும் தபால்காரரிடம் செலுத்தி நூலினைப் பெறலாம். | தபாலில் பெற, தபால் மற்றும் கட்டுச் செலவு ரூ.25.00 சேர்த்து ரூ.125.00 மட்டும் தபால்காரரிடம் செலுத்தி நூலினைப் பெறலாம். | தபாலில் பெற, தபால் மற்றும் கட்டுச் செலவு ரூ. 25.00 சேர்த்து ரூ.115.00 மட்டும் தபால்காரரிடம் செலுத்தி நூலினைப் பெறலாம். |

நான்கு நூல்களையும் ஒரே சமயத்தில் தபால் மூலம் பெறுவது மிக மிகச் சிக்கனமானது. அதாவது நான்கு நூல்களின் சலுகை விலை ரூ. 375.00 + தபால் மற்றும் கட்டுச்செலவு ரூ. 50.00 சேர்த்து ரூ.425.00 மட்டும் தபால்காரரிடம் செலுத்தி நூல்களைப் பெறலாம்.

**தபாலில் பெற:** கடிதம் எழுதுக (பணம் அனுப்ப வேண்டாம்). நூல்கள் VPPயில் அனுப்பப்படும். முகவரி : **வர்த்தமானன் பதிப்பகம்** ஏ. ஆர். ஆர். வளாகம், 141, வடக்கு உஸ்மான் சாலை, தி.நகர், சென்னை-17. (பனகல் பார்க் அருகில்) ☎ : 8257995

**நேரில் பெற :** எமது அலுவலகத்தில் தேவையான நூல்களின் சலுகை விலையினை மட்டும் கொடுத்து நூல்களை உடனே பெறலாம். நேரம் : காலை 9.30 முதல் மாலை 6.30 வரை. உணவு இடைவேளையின்றி. ஞாயிறு வார விடுமுறை.

*ஸ்டாக் உள்ள வரை

# பி.ஜே.பியின் ஓராண்டு சாதனைகள்..?

✦ டி.கே.சுப்பிரமணியன், திருப்பரங்குன்றம்

? பேரணி நடத்தி தமிழக காங்கிரஸ் கொடுத்த, பெட்ரோலிய விலை உயர்வை ரத்து செய்யக் கோரிய மனுவைப் பெற்றுக் கொள்ளாமல் ஆளுனர் தங்களை அவமானப்படுத்திவிட்டதாக இளங்கோவன் கூறுகிறாரே...?

! இக்காலத்தில் அப்பாய்ன்ட்மென்ட் இல்லாமல் யாரைப் போய்ப்பார்க்க முடிகிறது? அதிலும் ஆளுனர் போன்றவர்களைச் சந்திக்கச் செல்லும்போது முன்கூட்டியே தேதி, நேரம் கேட்டுக்கொண்டு, அவர்கள் வசதி அறிந்து செல்வதுதான் முறை.

✦ கு. அருணாசலம், தென்காசி

? தாம் தேர்தலில் நிற்க முடியாதபடி தீர்ப்பு வந்ததற்கும் சசிகலாவை அ.தி.மு.க. பொதுக் குழு உறுப்பினராக ஜெயலலிதா நியமித்ததற்கும் தொடர்பு உண்டா...?

! ஆதாயம் இல்லாமல் ஆற்றை இறைத்து ஜெயலலிதாவுக்குப் பழக்கமில்லை. சிலர் கட்சியை பப்ளிக் லிமிடெட் கம்பெனியாக நடத்துவார்கள். சிலர் பிரைவேட் லிமிடெட் கம்பெனியாக நடத்துவார்கள். அ.தி.மு.க. பார்ட்னர்ஷிப் கம்பெனியாக மாறிவிட்டது.

✦ ஆர். பார்த்திபன், சேத்துப்பட்டு

? கலைமாமணி விருது பெறும் எழுத்தாளர் சுஜாதா பற்றி...?

! அவருக்குக் 'கதைமாமணி' விருதை வாசகர்கள் என்றோ கொடுத்துவிட்டார்கள்.

✦ வி.எஸ்.கிருஷ்ணன், கடலூர் ★

? ஒரே சட்டத்துக்கான விளக்கமும் அதன் நோக்கமும் மேல் முறையீடு செய்யும்போது மாறிப்போகிறதே! மேல் முறையீட்டு நீதி மன்றத்தில் ஒரே நீதிபதி தீர்ப்பு வழங்கும்போது அவருடைய தீர்ப்பு சரி என்பதற்கு என்ன உத்தரவாதம்?

! அதனால்தான் பெஞ்சுத் தீர்ப்பு என்று நீதிபதிகள் குழுவிடம் மேல் முறையீட்டுக்குப் போகிறது.

✦ கே. கிருஷ்ணன், சென்னை - 5

? பி.ஜே.பி. இரண்டாவது முறையாக ஆட்சிக்கு வந்து ஓராண்டு ஆகியிருக்கிறது! ஓராண்டு சாதனைகள்...?

! ஆட்சியில் நீடித்ததே சாதனை என்று கொள்ள வேண்டியதுதான்.



• கோபமும்...



• ... நியாயமும்

✦ ஆர்.ராமசாமி, ஸ்ரீ வில்லிபுத்தூர்

? நீதி மன்றத் தீர்ப்பு ஒன்றும் செய்யாது. அடுத்து தமிழகத்தில் எம்.ஜி.ஆர். ஆட்சிதான் என்று ஜெயலலிதா கூறியிருக்கிறாரே?

! நீதி மன்றங்களை அவமதிப்பதில் ஜெயலலிதாவை விஞ்சியவர் இல்லை.



• பார்ட்னர்ஷிப் கம்பெனி

✦ ச.ஆ. கேசவன், இனாம்மணியாச்சி

? ஜனநாயக நாட்டில் அரசியல் பிரமுகர்களின் மருத்துவ சிகிச்சை பெரிதுபடுத்தப்படுவது நியாயமாகுமா?

! பிரதமரின் ஆபரேஷனைத்தானே சொல்கிறீர்கள்...? அது ஊரறிய உலகறியச் செய்யப்பட வேண்டியதுதான். நாட்டு மக்களுக்கு ஒவ்வொரு நிலையும் தெரிவிக்கப்படுவதுதான் முறை.



• உலகறிய, ஊரறிய...



• தொடரும் பார்வை



• விஞ்சுவோரில்லை!



• வாசகர் விருது



• சவாலே, சமாளி!

✦ எஸ். தென்றல் சேகர், சேத்துப்பட்டு

? சமீபத்தில் தங்களை உருக்கிய சம்பவம்?

! இலங்கை முன்னாள் பிரதமர் சிறிமாவோ பண்டார நாயகா காலமான பிறகு அவரது கண்கள் தானமாக வழங்கப்பட்டனவாம். ஓர் இளைஞனும் (32 வயது), ஒரு முதியவரும் (70) பார்வை பெற்றுள்ளனர்.

✦ பி. மீனா கணபதி, ❑ திருநெல்வேலி

? உச்ச நீதிமன்றம் கேள்வி மேல் கேள்வி கேட்டு விளக்கம் கோரி தாமதப்படுத்திவருவதால் ராஜ்குமார் உள்ளிட்ட பிணைக் கைதிகளின் உயிர்கள் பற்றிய கவலை அதற்கு இல்லை என்று தானே அர்த்தம். நாம் இதற்கு முன் விடுவித்த தீவிரவாதிகளைவிட வீரப்பனின் கூட்டாளிகள் கொடிய தீவிரவாதிகளா?

! சுப்ரீம் கோர்ட்டின் நோக்கும் போக்கும் விசித்திரமாகத்தான் இருக்கிறது. எமர்ஜென்ஸிக்காக டாக்டரிடம் போனால் உடனே சிகிச்சையை ஆரம்பிப்பதற்குப் பதிலாக, இப்படி ஒரு நெருக்கடி ஏன் ஏற்படுத்திக் கொண்டாய் என்று அவர் திட்டிக் கொண்டிருக்கலாமா...? உயிர் காப்பது அல்லவா முக்கியம்? அதைச் செய்த பிறகுதான் ஆராய்ச்சி, கண்டனம், அறிவுரை எல்லாம் தொடர வேண்டும்.

✦ எஸ். முரளி, குறிஞ்சிப்பாடி

? இலங்கையில் மீண்டும் மலர்ந்த சந்திரிகாவின் கூட்டணி ஆட்சி...?

! தனிப் பெரும்பான்மை கிட்டாததால் முன்னிலும் கஷ்டங்கள் அதிகமாகும். ஆனாலும் சமாளிக்கும் வல்லமையுடையவர்தான் சந்திரிகா.

• உண்டு.



• ... உண்டு.



• ... உண்டு!



✦ ஆ. அழகேஷ், பூதப்பாண்டி

? சூலமங்கலம் சகோதரிகள், பம்பாய் சகோதரிகள் என்று பெண் பாடகிகள் இணைந்து இசைத் துறையில் மிளிருவது போல் ஆண் பாடகர்கள் இணைந்து பாடுவதில்லையே...?

! ஏன் இல்லை? ஹைதராபாத் சகோதரர்கள், ருத்ரபட்டணம் சகோதரர்கள், மல்லாடி சகோதரர்கள், வயலின் சகோதரர்களான குமரேஷ் - கணேஷ், சித்ரவீணை ரவிகிரண் - கணேஷ், மாண்டலின் ஸ்ரீநிவாஸ் - ராஜேஷ்.

✦ ஜி. ஜனார்த்தனன், கண்டச்சிபுரம்

? வயதானதால் சிறைத் தண்டனை வேண்டாம் என்கிறாரே நரசிம்மராவ்?

! தப்பு செய்யும்போது வயதோ அந்தஸ்தோ நினைவு வரவில்லையே...

❑ ரூ.50 பரிசு பெறுபவர் :
பி. மீனா கணபதி
11, வையாபுரி நகர்,
நெல்லை டவுன் - 627 006

★ ரூ.25 பரிசு பெறுபவர்
வி.எஸ். கிருஷ்ணன்
3/ஏ, வடக்கு வேணுகோபாலபுரம்,
மஞ்சக்குப்பம், கடலூர்-1

# தங்கத்துடன் கொஞ்சம் குட்டு!



சமீபத்தில் நடைபெற்ற சிட்னி ஒலிம்பிக்ஸில் நானூறு மீட்டர் ரிலே ஓட்டத் தொடரில் அமெரிக்காவின் சார்பில் கலந்து கொண்டவர்கள் மௌரிங் க்ரீன், ஜான் ட்ரம்மன்ட், பிரயன் லூயி மற்றும் பெர்னார்டு வில்லியம்ஸ்.

இந்த நான்கு பேரும் காலில் விழாத குறையாக மாறி மாறி வருத்தம் தெரிவித்திருக்கிறார்கள் மக்களிடம். ஏன், அமெரிக்க மக்களின் எதிர்பார்ப்புக்கு உயராமல் பதக்கத்தைக் கோட்டை விட்டுவிட்டார்களா? நீங்கள் வேறு. தங்கத்தை வென்றதே இந்த நால்வர் அணிதான். வெற்றி பெற்றவுடன் உற்சாகக் கூக்குரலிடுவதோ, தங்கள் நாட்டுக் கொடியைக் கையில் ஏந்திக் கொண்டு கொஞ்ச தூரம் வலம் வருவதோ பலரும் செய்யக் கூடிய ஒன்றுதான். ஆனால் இவர்கள் மிகவும் அநாகரீகமாக நடந்து கொண்டார்கள். வெற்றி மயக்கத்தில் தலைகால் புரியாமல், பலவித அகௌரவமான சைகைகளைச் செய்தனர் இவர்கள்.

அமெரிக்கா திரும்பிய பிறகு இவர்களுக்குத் தினமும் இருநூறு ஈ-மெயில்களாவது வரத் தொடங்கின. ஒவ்வொன்றிலும் கடுமையான திட்டு. அதுவும் தலையில் அமெரிக்கக் கொடியைச் சுற்றிக் கொண்டு அவர்கள் ஆடியதற்கு வலுவான கண்டனம். சீனியர் அமெரிக்கர்கள் தாங்கள் அதிகம் நொந்து போனதாக அறிவித்தனர்.

''எங்கள் தவறை உணர்ந்து விட்டோம். தங்கப் பதக்கத்தால் நாங்கள் பெற்ற சந்தோஷத்தைவிட, எங்களது தவறான நடத்தையால் நாங்கள் அடைந்த அவமானம் அதிகம்'' என்று மன்னிப்புக் கேட்டுள்ளனர்.

இந்த சமயத்தில் அமெரிக்க வீரர்களே தங்கள் நாட்டுக்குச் சிறுமை தேடித்தர முயற்சித்த பழைய ஒலிம்பிக்ஸ் சம்பவமொன்று நினைவுக்கு வருகிறது. அது தெரிந்தே செய்யப்பட்ட அவமதிப்பு. இருநூறு மீட்டர் ஓட்டப்பந்தயத்தில் பதக்கங்களைப் பெற்றார்கள் டாமி ஸ்மித் (தங்கம்) மற்றும் ஜான் கார்லோஸ் (வெண்கலம்) ஆகிய இருவரும். கறுப்பர் இனத்தைச் சேர்ந்த இவர்கள் அமெரிக்க அரசுக்கு எதிரான (அதாவது அப்போது அங்கு நிலவிய நிறவெறிக் கொள்கைக்கு எதிராக) தங்கள் உணர்வுகளைக் காட்ட ஒலிம்பிக்ஸே சிறந்த களம் என்று நினைத்தார்கள். பதக்கங்கள் வழங்கப்பட்ட நிகழ்ச்சியில் அமெரிக்க தேசிய கீதம் இசைக்கப்பட்டபோது இந்த இருவரும் வழக்கத்துக்கு மாறாக கறுப்புக் கையுறைகள் அணியப்பட்ட கைகளை விதம்விதமாக ஆட்டினார்கள். தேசிய கீதத்துக்குச் செய்யும் அவமரியாதை இது என்பதால் சர்வதேச ஒலிம்பிக் குழு அவர்கள் பங்கேற்புக்குத் தடை விதித்தது.

— ஜி.எஸ்.எஸ்.







2000 அக்டோபர் 29
விக்ரம ஐப்பசி 13
மலர் : 59
இதழ் : 13

கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## விடாக்கண்டன் வீரப்பன்; கொடாக்கண்டன் சுப்ரீம்கோர்ட்!

எழுபது நாட்களுக்கு மேலாகிவிட்டன. -ராஜ்குமாரை வீரப்பனின் பிடியிலிருந்து இன்னமும் விடுவித்தபாடில்லை. தடா கைதிகளை விடுவிக்க வேண்டும் என்பது அவன் நிபந்தனை. அவ்வாறு விடுவிக்கக் கூடாது என்று தடைகோரி உச்சநீதிமன்றத்தில் தொடுக்கப்பட்ட பொதுநல மனுவின் பேரில் இன்னமும் விசாரணை முடிந்தபாடில்லை. கர்நாடகா, தமிழக அரசுகளிடமிருந்து விதம் விதமான தகவல்களையும் விளக்கங்களையும் கோரிய உச்சநீதிமன்றம், எல்லாவற்றையும் பரிசீலித்துப் பார்த்துவிட்டு 'இத்தனை நாளாக வீரப்பனைப் பிடிக்காமல் விட்டு வைத்தது ஏன்?' என்று மீண்டும் கேள்வியெழுப்பியிருக்கிறது. 'கடந்த எட்டு-பத்து ஆண்டுகளாக என்ன செய்து கொண்டிருந்தீர்கள்?' என்றும் 'நிபந்தனைப்படி தடா கைதிகளை விடுவித்துவிட்டால் வீரப்பன் பிணைக்கைதிகளை விடுவித்து விடுவான் என்பது என்ன நிச்சயம்?' என்றும் கடுமையான தொனியில் கேட்டிருக்கிறது. இன்னும் ஒருபடி மேலே போய், இப்போது வீரப்பனின் நிபந்தனைகளுக்கு உடன்பட்டால் அவன் மீண்டும் இதேபோல் கடத்தல் செய்து மீண்டும் அநியாயமான நிபந்தனைகள் விதிக்க மாட்டானா?' என்றும் கேட்கிறது.

உச்சநீதிமன்றம் எழுப்பியுள்ள கேள்விகளெல்லாம் நியாயமானவைதான். ஆனால் அவற்றை எழுப்புவதற்கான சமயமோ சூழலோ அல்ல இது.

பிணைக் கைதிகள் பிடித்து வைத்திருப்போரிடம் பேரம் பேசி யாரும் இதுவரை வெற்றிபெற்றதில்லை. ஒன்று, உயிர்ச்சேதத்துக்கு அஞ்சாமல் துணிந்து எதிர்த்து வெற்றி கொள்வார்கள்; அல்லது




குற்றவாளியிடம் ஓரளவு நம்பிக்கை வைத்து நிபந்தனைகளுக்கு உட்படுவார்கள்.

இரண்டையுமே செய்ய வழியின்றி நிலைமை இழுத்தடித்துக் கொண்டிருப்பது மிகவும் அபாயகர மானது.

ஐந்தாவது முறையாக வீரப்பனிடம் தூது சென்ற விஸ்தரிக்கப்பட்ட தூதுக்குழு, வெறுங் கையுடன்தான் திரும்பியிருக்கிறது. விடுவிக்கப்பட்ட ராஜ்குமாரின் மாப்பிள்ளை கோவிந்தராஜ்கூட உடல்நலக் குறைவு காரணமாகத்தான் அனுப்பப்பட்டிருக்கிறாரேயொழிய, தூதுக் குழுவினர் கேட்டுக் கொண்டதால் வீரப்பன் அவரை விடுவித்துவிடவில்லை!

தடா கைதிகள் விடுதலை செய்யப்பட வேண்டும் என்ற நிபந்தனையில் மிக உறுதியாக இருப்ப தோடு அல்லாமல், தூதுக் குழுவில் யார் யார் இடம்பெற வேண்டும் என்பதையும் வீரப்பனே நிர்ண யிக்க ஆரம்பித்துவிட்டான்!

பிரிவினை பேசிவரும் நபர்களை அரசுத் தூதுக் குழுவில் இடம்பெறச் செய்வதா என்று பெரிய சர்ச்சை எழுந்திருக்கிறது.

பயங்கரமான கடத்தல்காரனான வீரப்பனுக்கும் பிரிவினை பேசும் தமிழ் விடுதலை இயக்கங் களுக்குமிடையே கவலைக்குரிய தொடர்பு ஒன்று ஏற்பட்டு வலுப்பெற்றிருப்பதையும் உச்சநீதிமன்றம் அதிர்ச்சியுடன் சுட்டிக் காட்டியிருக்கிறது.

இந்த நிலைமை மிகவும் அபாயகரமானது என்பதை ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும்.

ஆனால், வீரப்பனின் வெளிப்படையான நிபந்தனைகள் காரணமாகத்தான் இந்த ரகசியத் தொடர்பு மெய்ப்பிக்கப்பட்டிருக்கிறது.

தமிழ் தீவிரவாத அமைப்புகளின் ஈடுபாடு காரணமாக ஒரு கிரிமினல் குற்றப் பிரச்னைக்கு அரசியல் சாயம் பூசப்பட்டு வருகிறது.

நெடுமாறன் முதலானோரை கோபாலுடன் அனுப்பியது தவறு என்று பிற அரசியல் கட்சிகள் தமிழக அரசைக் கண்டிக்கின்றன. சோனியா காந்தி கர்நாடகாவுக்கு விஜயம் செய்து, முதல்வர் எஸ்.எம். கிருஷ்ணாவுக்குப் பாராட்டு தெரிவித்துவிட்டு, நெடுமாறன் அன்ட் கோவை அனுப்பியதில்




அவருக்குப் பங்கு இல்லை என்று அறிவிக்கவும் செய்கிறார்.

ஆனால் பிரச்னை சிக்கலாகிப் போக அடிப்படைக் காரணமே கர்நாடகாவைச் சேர்ந்த ஒருவர் உச்சநீதிமன்றத்தில் தொடுத்துள்ள மனுதான். இதை சோனியாவும் கிருஷ்ணாவும் மறந்துவிட்டார்கள்; அல்லது மறைக்கப் பார்க்கிறார்கள். ஏன், அவரிடம் போய் மனுவை வாபஸ் பெறுமாறு பொதுநல நோக்கில் இரு தலைவர்களும் கேட்டுக் கொள்ளலாமே?' 'ராஜ்குமாரை மீட்ட பிறகு உங்கள் வழக்கை வைத்துக் கொள்ளுங்கள்; வீரப்பனைப் பிடிக்க உச்சநீதிமன்றம் உத்தரவிட வேண்டும் என்று ராஜ்குமார் விடுதலைக்குப் பிறகு மறுபடி மனு செய்யுங்கள்' என அவரை சோனியா கேட்டுக் கொள்ளலாமே?

மாட்டார்கள்! ஏனெனில் ஒவ்வொரு சிக்கலிலும் அரசியல் ஆதாயம் தேடுவதே அரசியல்வாதிகளின் உள்நோக்கமாக இருக்கிறது.

வீரப்பனின் நிபந்தனைகளுக்கு உட்பட்டு தடா கைதிகள் விடுவிக்கப்பட்டிருப்பார்களேயானால், அடுத்த தூதுக் குழுவில் யார் யாரை இடம்பெறச் செய்ய வேண்டும் என்று நிர்ணயிக்கும் சந்தர்ப்பமும் அவனுக்குக் கிடைக்காமல் போயிருக்கும்!

ஆனால் பிரச்னையைத் தொடர விடுவதன் மூலம் அதை வளரவும் விட்டுக் கொண்டிருக்கிறது உச்சநீதிமன்றம்.

'இத்தனை நாட்களாக மத்திய-மாநில அரசுகள் வீரப்பனை வளரவிட்டனவே? தமிழ்த் தீவிரவாதம் வளர அனுமதிக்கப்பட்டிருக்கிறதே?' என்றெல்லாம் உச்சநீதிமன்றம் கேட்பது நியாயம்தான். அதற்காக இன்றைய நெருக்கடியை நீடிக்க விடலாமா?

பிணைக்கைதிகள் பிரச்னைக்கு முற்றுப் புள்ளி வைக்க ஏற்ற விதத்தில் உச்சநீதிமன்றம் முதலில் தீர்ப்பு வழங்கட்டும். அதன் பிறகு வீரப்பனின் அக்கிரமங்களுக்கு முற்றுப்புள்ளி வைக்கவும் அது உத்தரவிடட்டும்.

தீபாவளி திருநாளன்று ராஜ்குமார் வீட்டில் விளக்கேற்றப்படுமானால், இரு மாநில மக்களும் உண்மையான மகிழ்ச்சியுடன் பட்டாசு கொளுத்தி தீபாவளி கொண்டாடலாம். அதற்கு உச்சநீதிமன்றம் வகை செய்ய வேண்டும். ●

# செய்தியா? சித்ரவதையா?

செய்தியில் பரபரப்பு இருக்கிறதோ, இல்லையோ, வாசிப்பதிலும், பிணம், ரத்தம், வன்முறை, போலீஸ், தடியடி என்று கட்டுப்பாடு இன்றி காட்சிகளை காட்டுவதிலும் பரபரப்பை ஏற்படுத்தும் தமிழ் தொலைக்காட்சிச் செய்திகளைப் பற்றி இதழியல் படிக்கும் மாணவர்கள் என்ன நினைக்கிறார்கள்? இ ஹிந்து நாளிதழ் நிர்வாகம் தொடங்கியிருக்கும் ஏசியன் மீடியா இன்ஸ்டிட்யூட் மாணவர் அல்விராஜன், சென்னைப் பல்கலைக்கழக இதழியல் துறை மாணவர்கள் ஜெயவித்யா, ஜெய்கிருஷ்ணா, பாரதிய வித்யா பவன் இதழியல் பிரிவு மாணவர்கள் தீபா, தயா, ஸ்ரீவத்ஸாங்கம் ஆகியோர் அலசுகிறார்கள்.

அல்விராஜன்: தனியார் தமிழ்த் தொலைக்காட்சிகள் வழங்கிவரும் செய்திகள், முழுக்க முழுக்க போட்டி மனப்பான்மை காரணமாக குறுகிய கண்ணோட்டம் கொண்டவை. முதலில் செய்தியின் உண்மைத் தன்மை (News accuracy) பற்றி அவர்கள் கவலைப்படுவதில்லை. அடுத்து செய்தி மதிப்பு (News value) இல்லாத செய்திகளைக்கூட பரபரப்பான தலைப்பு செய்தி என்பதுபோல காட்டி வியாபாரம் செய்கிறார்கள். குப்பையான விஷயவலுக்கு செய்தி எழுதுவது பெரிய உத்தி என்று நினைத்து செயல்படுகிறார்கள். வட்டாரச் செய்திகள் என்ற பெயரில்

* தயா

* அல்விராஜன்

சொத்து தகராறு, வாய்க்கால் வரப்புச் சண்டைகளில் கொலையானவர்களின் கோர உடல்கள், கொட்டிக்கிடக்கும் ரத்தம் இவற்றை நீண்ட நேரம் காட்டுவதோடு, அதை திரும்பத்திரும்ப காட்டி இதழியல் தர்மத்தை தினமும் கொலை செய்து வருகிறார்கள்.

லோக்கல் க்ரைம் செய்திகளை இப்படிக் காட்டுவதால், அவை இயல்பான விஷயம் என்ற மனப்பாங்கு வளர காரணமாகிவிடும். கல்யாண வீடுகளில் வீடியோ எடுத்துக் கொடுக்கும் வீடியோகிராபர்கள்தான், பெரும்பாலும் வட்டார நிருபர்களாக இருக்கிறார்கள்.



• தீபா



• ஜெயவித்யா





• ஸ்ரீவத்சாங்கம்

விஷுவல் எப்படி எடுப்பது என்று அவர்களுக்குத் தெரியவில்லை. கோவை விவசாயக் கல்லூரி மாணவிகள் மரணக் கூக்குரலோடு பேருந்தில் எரிந்து கொண்டிருந்ததை ஒரு தொலைக்காட்சியின் கேமராமேன் படம் எடுத்திருக்கிறார். அதை அந்த தொலைக்காட்சியிலும் திரும்பத் திரும்ப காட்டினார்கள்.

பத்திரிகையாளர்கள் மனிதாபிமானம் அற்றவர்கள் என்ற தவறான கருத்தை மக்கள் மனத்தில் ஆழமாகப் பதியச் செய்துவிடும் இந்தப் போக்கு. எனவே எந்தச் செய்தியை எப்படி விஷுவல் எடுப்பது, என்பதைத் தொலைகாட்சி நிருபர் மற்றும் வீடியோகிராபர்களுக்குச் சொல்லித் தருவது நல்லது.

• ஜெய்கிருஷ்ணா

**ஜெயவித்யா:** நமது சூழலில் கம்யூனல் செய்திகளையும் (கோஷ்டி மற்றும் ஜாதி சண்டை)யும், அவற்றுக்குக் காட்டப்படும் விஷுவல்களையும், கட்டுப்படுத்தித் தேவையான அளவு பயன்படுத்த வேண்டும் என்ற உணர்வே தமிழ்த் தொலைக்காட்சி செய்திகளுக்கு இல்லை. தூர்தர்ஷனைத் தவிர மற்ற எல்லா தமிழ்ச் செய்திகளும் போட்டிபோடுவதைத்தான் முக்கியமாகக் கருதுகின்றன. சமூக அமைதி பற்றி அவர்களுக்குக் கவலையே கிடையாது. இப்படியொரு நிலையில் இருபத்து நான்கு மணி நேர செய்திச் சேனல் தமிழுக்குத் தேவையா? என்ற கேள்வி வருகிறது. தேவைதான் என்று எடுத்துக் கொண்டால், முழுக்க முழுக்க தங்களது செய்தி ஆதாரங்களையே (own source) சார்ந்து இருப்பதால், செய்திகளில் வெரைட்டி இல்லை. காட்டியதையே காட்டி எரிச்சலூட்டுகிறார்கள். ஒப்பந்த அடிப்படையில் வளர்ந்துவிட்ட பிற மொழிச் செய்தி

சேனல்களோடு கைகோத்து தரமான செய்திகளைக் கொடுத்தால் மட்டுமே, தமிழ் நேயர்கள் ஏற்றுக் கொள்வார்கள். இல்லையெனில் 'சேனல் சர்பிங்' என்ற ஆயுதம் ரிமோட் வடிவில் அவர்களின் கைகளில் இருக்கிறது. நொடிக்குள் அடுத்த சேனலுக்கு தாவி விடுவதில் அவர்களுக்கு ஒன்றும் சிரமம் இல்லை.

**ஜெய்கிருஷ்ணா:** சமீபத்தில் என்னை மிகவும் அருவருக்க வைத்த செய்தி, ஹைதராபாத் உயிரியல் பூங்காவில் நடந்த புலிக் கொலை. தோலுக்காக நடத்தப்பட்ட அந்த கொடூர வன உயிர் சித்திரவதையைச் செய்தியாக படித்தபோதே இதயம் அதிர்ந்தது. ஆனால் மாமிச மலைபோல், ரத்தமும் சதையுமாகக் கிடந்த புலியின் பிணத்தைத் திரும்பத் திரும்பக் காட்டி செய்தி தர்மத்தையே கொலை செய்து விட்டார்கள். கையில் விஷுவல் கிடைக்கிறது என்பதற்காக அதைத் தவறாகப் பயன்படுத்தும் போக்கு இங்கே ஆரம்பம்தொட்டே இருக்கிறது. வட்டார குற்றச் செய்திகளை காட்டும்போது, சம்பந்தப்பட்ட குடும்பத்தினர் பாதிக்கப்படாமல் இருக்க, விஷுவலில் வரும் முகங்களை மறைத்துவிடலாம். ஆனால் அதை யாரும் செய்வதில்லை. சமீபத்தில் ஆந்திர அரசு மின்கட்டணங்களை உயர்த்தியபோது ஹைதராபாத்தில் வெடித்த வன்முறையைச் செய்தியில் காட்டினார்கள். ஆனால் போலீஸ், கலவரக்காரர்களைத் தடிகொண்டு தாக்குவது போலவும், ஒடுக்குவது போலவும் மட்டுமே ஒரு தொலைக்காட்சியில் காட்டப்பட்டது. அது பரபரப்பான விஷுவல் என்றாலும், கலவரத்தின் இன்னொரு பக்கம் மறைக்கப்பட்டு, போலீசார் மட்டுமே கொடுமைக்காரர்கள் என்பது போலவும் அங்குள்ள மாநில அரசு மக்கள் விரோத அரசு என்பதுபோலவும் செய்தி திரித்துவிட்டது. இதுபோன்ற 'மிஸ் இன்பர்மேஷன்' திட்டமிட்டுச் செய்யப்படுகிறதோ என்று எண்ண வேண்டி இருக்கிறது. ஏன் இத்தகைய தவறுகள் இங்கே நிகழ்கின்றன என்றால், சில சேனல்களைத் தவிர, மற்றவை அரசியல்கட்சிகளின் பிரசார சேனல்களாக மாறிவிட்டன. அது வெளிப்படையாக தெரிவதுதான் மிகப்பெரிய வெட்கக்கேடு.

**தீபா:** செய்திகள் மக்களை உடனுக்குடன் சென்றடைய தமிழில் இருபத்து நான்கு மணிநேரச் செய்திச் சேனல் என்பது மிகப் பெரிய வரப்பிரசாதம். ஆனால் பரபரப்பான செய்திகளுக்காக மட்டும் காத்திருந்து முழு செய்தி சேனல் நடத்த முடியாது... இதழ்களைப் போல தேடிச் சென்று, செய்திக் கதைகளை (news stories) கொடுத்தால் நேயர்களுக்குப் புதிய விஷயங்களைச் செய்தி வடிவில் தெரிந்து கொள்ள வாய்ப்பு கிடைக்கும். செய்திகளில் மட்டும் கவனம் செலுத்தாமல், விஷுவல்களை முறையாக கட்டுப்படுத்துவது, செய்திவாசிப்பாளர்களின் தமிழ் உச்சரிப்புகளை மேம்படுத்துவது, என்று ஒவ்வொன்றிலும் கவனம் செலுத்த வேண்டும். பரபரப்பாக வாசிக்கிறேன் என்று, இறப்புச் செய்தியைக் கூட இரங்கல் உணர்ச்சியின்றி வாசிப்பது இங்கே சகஜமாகிவிட்டது. செய்திகளை வெளியிடுவதில் உள்ள அரசியல் நோக்கை, சேனல்கள் அறவே கைவிடுவதுதான் தொடர்புச்சாதன தர்மத்திற்கு உகந்தது.

**தயா:** தமிழ்த் தொலைக்காட்சிகளின் செய்தி நேரம், தமிழ் சினிமாவை விடவும் மிகப் பெரிய தாக்கத்தை ஏற்படுத்தி வருகிறது. லோக்கல் க்ரைம் செய்திகளைக் காட்டுவதாக மிகப் பெரிய 'விஷுவல் பொலியூஷனை' நேயர்கள் மீது திணித்து வருகிறார்கள். அரசியல் செய்திகளுக்கும், க்ரைம் செய்திகளுக்கும் மட்டுமே முக்கியத்



*தயாரிப்பாளர்: பிச்சைக்காரனை அடுத்த சீன்லயே கோடீஸ்வரனா காட்றது கொஞ்சம் கூட நம்பும்படியா இல்லியே?*

*டைரக்டர்: பயப்படாதீங்க! ப்ளாஷ் பேக்ல அவன் 'குரோர்பதி' போட்டியில கலந்துகிட்டதா காட்டினா போச்சு!*

**– ரவீ**

துவம் கொடுக்கிறார்கள். இதனால் செய்திச் சமநிலை (news balance) இல்லை. ஒரு பரபரப்பான அரசியல் செய்தி என்றால் அதை பேலன்ஸ் செய்வதற்கு ஒரு நல்லவிதமான அரசியல் செய்தியைச் சொல்வதில்லை. அதேபோல் க்ரைம் செய்திகளிலும், எப்படி வெட்டினான், எங்கே குத்தினான் என்று மூன்றாம் தர தினப்பத்திரிகைப் போல செய்தி எழுதுவது மிகப்பெரிய அவலம். அரசியல் செய்திகளைப் பொருத்தவரை எந்த கட்சியைச் சார்ந்து அந்தச் சேனல் இயங்குகிறதோ, அந்தக் கட்சியின் இமேஜ் பாதிக்காதபடி ஒன்று செய்திகளை இருட்டடிப்பு செய்வது அல்லது எதிர்ப் பிரசாரம் செய்வது– இதுதான் நடக்கிறது. இது தமிழ்த் தொலைக்காட்சி செய்திகளுக்கு வந்துவிட்ட வியாதி. இதற்கு மருந்தே கிடையாது.

**ஸ்ரீவத்ஸாங்கம்:** தி.மு.க. என்றால் சன் டி.வி. அ.தி.மு.க. என்றால் ஜெயா டி.வி. என்று அரசியல் கட்சிகள் மீடியாவை கைப்பற்றும் கலாசாரம் நமது நாட்டில்தான் உருவானது என்று சொல்ல முடியாது. அச்சு ஊடகம் தோன்றியபோதே, நிறுவனங்களும், கட்சிகளும், அரசும் அதை பிரசார சாதனமாக பயன்படுத்தத் தவறவில்லை. கேரளாவில் கம்யூனிஸ்ட்டுகள் கூட இப்போது 'கைரளி' என்ற சேனலைத் தொடங்கி விட்டார்கள், அதைத் தவறு என்று சொல்ல முடியாது. ஆனால் இது போன்று மீடியாவைப் பயன்படுத்தும் போது, ஒன்று முழுவதும் பிரசார சாதனமாகப் பயன்படுத்துவது, இல்லையெனில் நடுநிலையைப் பின்பற்றுவது என்ற கொள்கை முடிவை எடுக்க வேண்டியது மிகப் பெரிய அவசியம். நடு நிலையாக இருப்பதுபோல் நடிப்பதைத்தான் ஏற்றுக் கொள்ள முடியாது. அதை மக்கள் எளிதில் இனம் கண்டு கொள்வார்கள். அச்சு ஊடகத்தைவிட தொலைக்காட்சி போன்ற காட்சி ஊடகம் மக்களிடம் அதிக பாதிப்பை ஏற்படுத்துவதாலும், அதிக அளவில் விரைவாக சென்று அடைவதாலும், செய்தி தர்மத்தை தார்மீகப் பொறுப்புடன் பின்பற்ற வேண்டும். இல்லையெனில் தொலைக்காட்சி செய்திகளைச் செய்தியா? சித்திரவதையா என்ற சந்தேகம் தான் மக்களுக்கு ஏற்படும்.

**ஆர்.சி. ஜெயன்**
படங்கள்: **வெங்கடேஷ்**

## தங்கப் பயன்பாடு ஏறுது!

உலகத் தங்க கவுன்சில் பதினேழு நாடுகளில் செயல்படுகிறது. உலகத்தில் தங்கச் சுரங்கம் வைத்திருக்கிற நாடுகள், உலகத்தில் தங்கம் விற்பவர்கள், எல்லாருமே இந்தக் கவுன்சில்



அங்கத்தினர்கள். இந்தக் கவுன்சிலின் தென்னிந்திய அதிகாரி ஒருவர் ஆச்சர்யப்படத்தக்கப் பல விஷயங்களைச் சொன்னார்.

"சுவிட்சர்லாந்தில் இருக்கிற ஜெனீவாவில்தான் இந்த கவுன்சிலின் தலைமையகம் ஆரம்பிக்கப்பட்டது. உலகத்தில் 75 சதவிகித தங்க நகை வர்த்தகம் எங்கள் மூலமாகத்தான் நடத்தப்படுகிறது. கவுன்சிலின் முக்கிய நோக்கம், தங்க நகைகள் பயன்படுத்துவதை அதிகமாக்குவதுதான்." (சுருக்கமாக ஆண்களின் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொள்வதுதான் போல!)

"நீங்க ஏதாவது புள்ளி விவரம் வச்சிருக்கீங்களா?"

"1996ஆம் ஆண்டு 574டன் தங்கம் இந்தியாவில் பயன்படுத்தப்பட்டது. அதுக்கு அடுத்த வருஷம், 1997ல், இது 737 டன்னாக உயர்ந்தது. அதாவது கிட்டத்தட்ட 33 சதவீதம். 98ல் இன்னும் 10 சதவீதம் கூடியது. வருடா வருடம் இது உயர்ந்து கொண்டேதான் போகிறது."





# டீன்ஏஜ் டிசைன்ஸ்!

''தங்க நகைகள் மீதான கவனம் மக்களிடம் இப்போது குறைந்துவிட்டது'' என்று ஒரு திமர் குண்டைத் தூக்கிப் போட்டார் ஜி.ஆர். தங்க மாளிகையின் உரிமையாளர் ஜி. ராஜேந்திரன்.

நெசமாவா?

''ஆமாம். மக்கள் கவனமெல்லாம் இப்போது வைரத்தின் மீது திரும்பியிருக்கிறது!'' என்கிறார் அவர்.

(அதானே பார்த்தோம். பெண்களாவது, நகைகளிலிருந்து விடுபடுவதாவது...!)

திருவிழா மாதிரியான கூட்டம் மொய்த்துக் கொண்டிருக்க, லேட்டஸ்டாக வைர நகைகளுக்காக திறக்கப்பட்டிருக்கிற தனி ஷோரூமில் அவரைச் சந்தித்தோம்.

'தங்க'மான கேள்விகளுக்குப் பதிலளித்தார்:

**''இந்த வைரங்கள் எல்லாம் எங்கேயிருந்து வருகின்றன?''**

''பெல்ஜியத்திலிருந்து. அவை மிக உயர்ந்த தரம் வாய்ந்தவை.''

**''புதுமையாக, ஆனால் குறைந்த விலையில், அடிக்கடி போட்டுக்கொள்ளும் விதங்களில் நகைகள் செய்வதில்லையா?''**

''இருக்கிறதே, டீன்ஏஜ் கலக்ஷன் டிசைன் பாருங்கள். லைட் வெய்ட். இரண்டு கிராம் தங்கத்திலிருந்து, எல்லா வகை ஆபரணங்களும் செய்கிறோம். கல்லூரி மாணவிகள் எல்லாம் இதைத்தான் விரும்புகிறார்கள். பேன்ஸியாகவும் இருக்கும்!'' என்றவர், வண்ண வண்ண முத்துக்கள் கோத்து, கீழே சிறிய தங்க பென்டென்ட் வைத்தப் புதுவகை மாலைகளையும் காண்பித்தார். சேலைகளுக்கு மாட்ச் ஆகிற அத்தனை வர்ணங்களிலும் அழகழகான மாலைகள்!

**''எப்படி இதை இங்கே இன்ட்ரட்யூஸ் பண்ணினீங்க?''**

''குஜராத்துல இந்த Colour beads மாலை ரொம்பப் பிரபலம். அதனால இங்கே அறிமுகப்படுத்தினோம். இங்கேயும் நல்ல ஆதரவு இருக்கு!''

24 காரட் சுவாமி விக்கிரகங்கள், சிலுவைக் குறி, மெக்கா மசூதி என்று அன்பளிப்புக்காகவே உருவாக்கியிருக்கிறார்கள்.

''எங்கள் டிசைனர்கள் இருக்கிறார்கள். திறமையான பொற்கொல்லர்கள் இருக்கிறார்கள். எங்கள் நகைகளுக்கும் BIS எனப்படும் அரசாங்கத் தர முத்திரை உண்டு.

**''உங்கள் வெற்றியின் ரகசியம் என்ன?''**

''ஜுவல்லரி என்பதே பெரும்பாலும் சென்டிமென்ட்ஸோட சேர்ந்தது. பல வருடங்களாக, வாடிக்கையாளரின் திருப்தியை மட்டுமே குறிக்கோளாகக் கொண்டு, குட்வில் என்பார்களே, அந்த நல்லப் பெயரைச் சம்பாதித்தது. அவர்கள் தாங்களாகவே வாய் வழியாக எங்களுக்கு வாங்கித் தந்த விளம்பரம். எல்லாவற்றுக்கும் மேல் கடவுள் அநுக்கிரகம்!'' என்றார் ஜி.ஆர். அடக்கமாக.

**''எப்படி நகை பிஸினஸிலிருந்து முற்றிலும் மாறுபட்ட ஜி.ஆர்.டி கிராண்ட் டேஸ் ஹோட்டலை நிறுவினீர்கள்?''**

''டைவர்சிஃபிகேஷன் தேவைதானே? அதுவுமில்லாமல் அதிலும், வாடிக்கையாளரை முழுசும் திருப்திப்படுத்த வாய்ப்புகள் அதிகம் இல்லையா?'' என்றார்.

''சென்ற ஆண்டு, அகில இந்திய அளவில் மிகச் சிறந்த ஓட்டல் என்ற பரிசு கிடைச்சிருக்கு'' என்றார் ஜி.ஆர்.

சின்னத்திரையில் உங்கள் வாழ்க்கை அனுபவம் இடம் பெறவேண்டுமா!

# கல்கி—ரமணி Vs. ரமணி

இணைந்து வழங்கும்

# 'தம்பதி தமாஷ்'



(தீபாவளி பரிசுப் போட்டி)



உங்கள் அன்றாட குடும்ப வாழ்வின் நகைச்சுவையான சம்பவங்கள்...

தம்பதியருக்குள் நடந்த சுவாரஸ்யமான ஊடல்கள்...

நினைத்துப் பார்த்துச் சிரிக்கும் சுவையான ஞாபகங்கள்...

இவற்றில் ஒன்றை ஒரு பக்கத்திற்கு மிகாமல் எங்களுக்கு எழுதி அனுப்புங்களேன்...!

பரிசுக்கு தேர்ந்தெடுக்கப்படும் நகைச்சுவை அனுபவங்கள் 'கல்கி' இதழில் பிரசுரிக்கப்படும். சிறந்தவை ராஜ் டி.வியில் ஒளிபரப்பாகும் ரமணி Vs. ரமணி தொடரில் இடம் பெறலாம்.

| | |
|---|---|
| முதல் பரிசு | Dukes Biscuits & Wafers வழங்கும் 15,000/- ரூபாய் மதிப்புள்ள ப்ரிட்ஜ் (ஒரு நபருக்கு) |
| இரண்டு இரண்டாம் பரிசுகள் | Washotex வழங்கும் 7,000/- ரூபாய் மதிப்புள்ள வாஷிங் மெஷின் (2 நபர்களுக்கு) |
| பத்து ஆறுதல் பரிசுகள் | MANNA Health Mix வழங்கும் 2000/- ரூபாய் மதிப்புள்ள பட்டு புடவைகள் (10 நபர்களுக்கு) |

அனுபவங்களை அனுப்பவேண்டிய முகவரி:

**தம்பதி தமாஷ்**

போஸ்ட் பாக்ஸ் நம்பர் 6192, சென்னை-4

போட்டிக்கான கடைசி தேதி- 10-11-2000



# ஸ்வரோவ்ஸ்கி!

ஸ்வரோவ்ஸ்கி.

சென்னை ஸ்டெர்லிங் ரோட்டில் உள்ள அந்தக் கடை, உள்ளே செல்கிறவர்களை ஒரு நிமிடம் இறுக்கிப் பிடித்து நிற்க வைத்து விடுகின்றது. கண்களில் ஆச்சர்யம் மின்ன வைக்கும், கொள்ளை கொள்ளும் அழகில் சின்ன சின்ன நகைகள் கிரிஸ்டல் சம்பந்தமானப் பொருட்கள்.

புதுவகை நகைகளையும் பரிசுப் பொருள்களையும் தயாரிக்கும் ஆஸ்த்ரிய நிறுவனமாம் இது. 1895ல்(?!) ஆரம்பிக்கப்பட்ட இந் நிறுவனம் இந்தியாவில் காலடி எடுத்து வைத்தது ஆகஸ்ட் '98ல்.

"எங்களிடம் இருப்பவை 22 காரட் கோல்டு பிளேட்டட் ஜுவல்லரி. ஒயிட் மெட்டலில் தயாரித்து கோல்டு பிளேட் செய்யப்பட்டவை. இவை தவிர கிரிஸ்டல் ஆபரணங்களும், கிரிஸ்டல் பரிசுப் பொருள்களும் ஏராளம்!" என்கிறார் 'ஸ்வரோவ்ஸ்கி'யின் அதிகாரி பூஜா அலுவாலியா.

கிறிஸ்டல் பொருட்களை இத்தனை அழகாகத் தயாரிக்க முடியுமா என்று பிரமிப்பாக இருக்கிறது.

அதேபோல், அவற்றின் விலை அதிகம் இல்லாமல் பரிசுப் பொருளாக வாங்கிக் கொடுக்கக் கூடிய ரேஞ்சில் இருப்பதுதான் ஆச்சரியம்.

"யார் இவற்றை எல்லாம் வாங்குகிறார்கள்? இவற்றின் விலை என்ன?"

"தங்கள் நண்பிகளுக்காக நிறைய இளைஞர்கள் இவற்றை வாங்குகிறார்கள். பெரியவர்களும் வாங்குகிறார்கள். சிலர் தங்கள் வீட்டில் அலங்காரப் பொருட்களாக வாங்கி வைத்திருக்கிறார்கள்!"

ஆஸ்த்ரியா, கட்-கிரிஸ்டல்களுக்குப் புகழ் பெற்றதாம்.

1,500 ரூபாயிலிருந்து 24,000 ரூபாய் வரை, வகை வகையான நகைகளும், கிரிஸ்டல் கிஃப்ட் சாதனங்களும் இங்கே வருகிறவரையும் சபலத்துக்கு உட்படுத்தும்!

சென்னை நுங்கம்பாக்கத்தில் பிரும்மாண்டமான ஜிஜி எமரால்டு கட்டடத்தில் கீழ்த் தரையிலேயே இருக்கிறது ஸ்வரோவ்ஸ்கி.

சென்னையில் மட்டும் ஸ்பென்சர் பிளாசா, மாயாஸ் பிளாசா உட்பட மூன்று இடங்களில் ஷோ ரூம்கள் இருக்கின்றன.

கொச்சி, தில்லி, பெங்களூர், மும்பை, ஜெய்ப்பூர், கல்கத்தா, ஹைதராபாத் ஆகிய இடங்களிலும் 'ஸ்வரோவ்ஸ்கி' விற்பனை நிலையங்கள் இயங்கி வருகின்றன.

பிராண்டட் ஜுவல்லரி சந்தையில் ஸ்வரோவ்ஸ்கி ஒரு புது வரவு.

1976ல், ஸ்வரோவ்ஸ்கி ஊழியர் ஒருவர், அவரது பாட்டிக்கு கிறிஸ்துமஸ் பரிசு அளிக்க, கிரிஸ்டலில் சின்னஞ்சிறு எலிக்குட்டி பொம்மை தயாரித்தாராம். அதிபர் ஜெர்நாட் லாஞ்சஸ் ஸ்வரோவ்ஸ்கி, நாலாவது தலைமுறை முதலாளி- இதைப் பார்த்துவிட்டு கிரிஸ்டல் நினைவுப் பொருட்களை நாம் தயாரிக்கலாமே என்று பிள்ளையார் சுழி போட்டார். அது இன்று உலகம் முழுக்க சக்கைப்போடு போடுகிறது!

1891லேயே, 29 வயதான டேனியல் ஸ்வரோவ்ஸ்கி கிரிஸ்டல் ஜுவல்லரிக்கான கற்களை வெட்டத் தொழில்நுட்பக் கருவிகளைக் கண்டுபிடித்தாராம்.

இவரது பிறந்த ஊர் ஆஸ்த்ரியாவில் வாட்டன்ஸ் நகரம். 18ஆம் நூற்றாண்டு முதலே ஜுவல்லரி ஸ்டோன் உற்பத்தியில் புகழ் பெற்றது. 1972ல் 'மூட் ஸ்டோன்' அறிமுகப்படுத்தினார் ஸ்வரோவ்ஸ்கி. அணிந்து கொள்பவரின் மூடுக்கு ஏற்ற மாதிரி நிறம் மாறுமாம்! 1975ல், கிரிஸ்டல் ஜுவல்லரி ஸ்டோன்களை ஆடைகளில் வைத்து அப்படியே அயர்ன் செய்தால் ஒட்டிக் கொண்டுவிடும் தொழில்நுட்பத்தை அறிமுகப்படுத்தினார். இதற்கு ஹாட் ஃபிக்ஸ் டெக்னாலஜி என்று பெயர்!



உ

ஸ்ரீ ராம ஜெயம்

ஸ்ரீ விகநஸமஹாகுரவே நம:



ஸ்ரீ சுதர்ஸன மஹா யக்ஞ்ய கமிட்டி.

**Old No.5, New No.32,** கேசவபெருமாள் சன்னதிதெரு.

மைலாப்பூர். சென்னை – 600 004. போன்: 4610179

## "ஸ்ரீ லக்ஷ்மி குபேர தனாகர்ஷண மஹா யக்ஞ்யம்"
## (1 லக்ஷம் ஆவர்த்தி)

**20.11.2000, திங்கள் கிழமை முதல் 24.11.2000 வெள்ளிக் கிழமை முடிய**

**யக்ஞ்யம் நடை பெறும் இடம்:**

T.V.R. சுப்பு செட்டி வசந்த மண்டபம்.

No. 14, மேற்கு சித்ர குளம் தெரு, மைலாப்பூர், சென்னை – 4.

**மஹாயக்ஞ்யம் நடைபெறும் நேரம்:–**

20.11.2000 மாலை 6 மணி முதல் 9 மணி வரை. 21.11.2000 முதல் 24.11.2000 காலை 8 மணி முதல் 11.30 மணி வரை. மாலை 6 மணி முதல் 9 மணி வரை

24.11.2000 மஹாபூர்ணாஹுதி: (பகல்) 12.30

மாலை 5.00மணி: 108 மஹாலக்ஷ்மி திருவிளக்கு பூஜை.

---

| | | |
|---|---|---|
| ரூ. 100/- செலுத்துபவர்களுக்கு | : | ஸ்ரீ மஹா லக்ஷ்மி டாலர். |
| ரூ. 250/- செலுத்துபவர்களுக்கு | : | ஸ்ரீ சக்ரம் பொருந்திய ஸ்ரீ மஹாலக்ஷ்மி பெரிய காசு. |
| ரூ. 500/- செலுத்துபவர்களுக்கு | : | ஸ்ரீ லக்ஷ்மி குபேர தனாகர்ஷண யந்திரமும், ஸ்ரீ சக்ரம் பொருந்திய ஸ்ரீ மஹா லக்ஷ்மி காசு. |
| ரூ. 1000/- செலுத்துபவர்களுக்கு | : | ஸ்ரீ மஹா லக்ஷ்மி திருவிளக்கு, ஸ்ரீ லக்ஷ்மி குபேரதனாகர்ஷண யந்திரம், ஸ்ரீசக்ரம் பொருந்திய ஸ்ரீமஹா லக்ஷ்மி காசு. |
| ரூ. 2000/- செலுத்துபவர்களுக்கு | : | 1 கிராம் தங்க லக்ஷ்மி காசு. ஸ்ரீ லக்ஷ்மி குபேர தனாகர்ஷண யந்திரம், ஸ்ரீ மஹா லக்ஷ்மி திருவிளக்கு, ஸ்ரீ சக்ரம் ஸ்ரீ மஹாலக்ஷ்மி காசு. |
| ரூ. 5000/- செலுத்தினால் | : | யாக சாலையில் மஹா சங்கல்பம். 2 கிராம் தங்க லக்ஷ்மி டாலர் ஸ்ரீ லக்ஷ்மி குபேர தனாகர்ஷண யந்திரம், ஸ்ரீ சக்ரம் பொருந்திய ஸ்ரீலக்ஷ்மி காசு. யாகம் முடிந்தவுடன் கும்பதீர்த்தம் சேர்க்கப்படும். மற்றும் ஸ்ரீ மஹா லக்ஷ்மி திருவிளக்கு வழங்கப்படும் |

---

மிக மிக முக்கியமாக M.O.,D.D அனுப்பும் பக்தர்கள் தங்கள் பெயர், விலாசம் மிக விவரமாக கேப்பிட்டல் எழுத்தில் எழுதவும். (பெயர், வீட்டு நெம்பர், தெரு, ஊர், போஸ்டு தாலுக்கா, ஜில்லா, பின்கோடு.)

M.O.,D.D அனுப்பும் அட்ரஸ்.

**"ஸ்ரீ சுதர்ஸண மஹா யக்ஞ்ய கமிட்டி"**

**S. ஸ்ரீரங்கராஜ பட்டாசாரியார்.**

Old No.5, New No.32, கேசவபெருமாள் சன்னதிதெரு.

மைலாப்பூர். சென்னை – 600 004. போன்: 4610179

இங்ஙனம்

**ஸ்ரீ சுதர்ஸண மஹாயக்ஞ்ய கமிட்டி**

**S. ஸ்ரீரங்கராஜ பட்டாசாரியார்**

**T. சம்பத்குமார், M. பிரவின்குமார்**

**V. நந்தகுமார், T. சுதர்ஸன்**

---

**ஸ்ரீ லக்ஷ்மி குபேர தனாகர்ஷண மஹாயக்ஞ்யம் டிக்கட் கிடைக்கும் இடம்:**

S.ஸ்ரீரங்கராஜ பட்டாசாரியார்.

Old No.5, New No.32, கேசவபெருமாள் சன்னதிதெரு, மைலாப்பூர்.

சென்னை – 600 004. போன்: 4610179

உலகத் தங்க கவுன்சில் அலுவலகம் சென்னை கிண்டியில், அலெக்சாண்டர் ஸ்கொயரில் இருக்கிறது. 'இந்தக் கவுன்சில் என்ன செய்கிறது?' என்பதை அறிய அதன் உயரதிகாரி கே. சிவராமைச் சந்தித்தோம்:

• தங்க கவுன்சிலின் முக்கிய வேலை என்ன?

உலகத்தில் தங்கம் உபயோகிப்பதை மேலும் மேலும் அதிகரிப்பது.

• தாங்கள், உபயோகிப்பதை அதிகப் படுத்துவதற்கு என்ன செய்கிறீர்கள்?

உலகம் முழுக்கப் பல பிராஜெக்ட்ஸ் நடத்துகிறோம். எல்லாமே ஆபரணத் தயாரிப்பு, விற்பனை சம்பந்தப்பட்டவை. சில, நெறிமுறை எனப்படும் 'ரெகுலேட்டரி' வகையைச் சேர்ந்தவை. உலகின் பல்வேறு நாடுகளில் தங்கத்தின் மீது விதிக்கப்படும் தீர்வை, வரிகள் ஆகியவை குறைய நாங்கள் முயற்சிகள் மேற்கொள்ளுகிறோம். தங்கத்துக்கு, மாநில விற்பனை வரிகள் வேறுபடுகின்றன. ஆந்திராவில் ஒரு சதவிகிதம்தான். தமிழ்நாட்டிலும் கேரளத்திலும் நாலு சதவிகிதம்.

• இந்தியாவில்தான் அதிகபட்சமாகத் தங்கம் பயன்படுத்தப்படுவதாக எப்படிச் சொல்லுகிறீர்கள்?

சென்ற ஆண்டு 852 டன் தங்கம் உபயோகப்படுத்தி இருக்கிறோம்! குறைந்தபட்சமாக ஐந்து சதவிகிதம் கூடுதல் விற்பனை இந்த ஆண்டு இருக்கும் என்று எதிர்பார்க்கிறோம். அதாவது 900 டன்களை எட்டும் என நம்புகிறோம். காரணம் பருவமழை சாதகமாக இருந்திருக்கிறது. விழாக்கால விற்பனை சூடு பிடித்திருக்கிறது.

• நகை விற்பனையில் தெற்கின் பங்கு என்ன?

இந்தியாவில் தயாராகும்-விற்பனையாகும் மொத்தத் தங்க ஆபரணங்களில் 45 சதவிகிதம் தென்னிந்தியாவில்தான் விற்பனையாகிறது. இதற்குப் பொருளாதார ரீதியான காரணத்தை மட்டும் சொல்ல முடியாது. லட்சுமிகரமானது, புனிதமானது, சமயம் சார்ந்தது, செழிப்பு, பாதுகாப்பு என்று பல காரணங்கள். ஷேர் அல்லது ரியல் எஸ்டேட்டில் பணத்தை முடக்குவதைவிட, தங்க நகைகளில் போடுவது புத்திசாலித்தனமான என்ற நம்பிக்கை இங்கே வளர்ந்து வேரூன்றி இருக்கிறது. ஓர் ஆபத்து, தேவை, கஷ்டம் என்று வந்துவிட்டால் உடனடியாக பணம் கிடைப்பது நகைகளில்தானே?

• ஹால்மார்கிங்கும் உங்கள் திட்டங்களில் ஒன்றுதானா?

ஆமாம். பிஐஎஸ்ஸுடன் சேர்ந்து அறிமுகம் செய்தோம். அதற்கு முன் இந்திய அரசுடன் பேச்சுவார்த்தைகள் நடத்தினோம். நாங்கள் பொதுமக்களிடையே ஹால்மார்க்கிங் பற்றிய விழிப்புணர்வை உண்டாக்க, அறிவிப்புக்கள், விளம்பரங்கள் மூலம் நடவடிக்கைகள் எடுத்து வருகிறோம்.

• இந்தியாவில் எத்தனை நகை வியாபாரிகள் ஹால்மார்க்கிங் முத்திரை வசதி பெற்றிருக்கிறார்கள்?

135 வணிகர்களுக்கு மேல் பெற்றிருக்கிறார்கள். பிஐஎஸ் சான்றிதழ் இவர்களுக்கு வழங்கப்பட்டிருக்கிறது. இவர்களை பிஐஎஸ் அவ்வப்போது பரிசோதிக்கும். சென்னையில் இதுவரை 12 வியாபாரிகள் இந்தச் சான்றிதழ் பெற்றிருக்கிறார்கள். மேலும் விண்ணப்பங்கள் வந்து கொண்டிருக்கின்றன;

# கோல்டு கிளப்!

இணைந்தும் சில திட்டங்கள் செய்திருக்கிறோம். இளைய தலைமுறையைக் கவரும் விதத்தில் இவை அமைந்திருக்கின்றன.

ஒவ்வொரு வருடமும் 'ஸ்வர்ணாஞ்சலி' போட்டி மூலம் புதிய புதிய டிசைன்களை அறிமுகம் செய்கிறோம். (இந்தப் போட்டியில் பரிசு பெற்ற நகை டிசைன்களை அச்சிட்ட புத்தகத்தைப் புரட்டினால், ஒவ்வொரு டிசைனும் நம்மை அசத்துகிறது. புத்தகத்திலேயே இப்படி இருந்தால் போட்டுக் கொண்டால் எப்படி இருக்கும்?) மார்ச் மாதம் போட்டி பற்றி அறிவிக்கிறோம். டிசம்பரில் முடிவுகளைச் சொல்லுகிறோம். முதல் மூன்று டிசைன்களுக்குப் பரிசுகள் கொடுக்கிறோம். முதல் பரிசு ஒரு லட்சம் ரூபாய்.



பயிற்சி பெற்ற இளைஞர்கள் நகைத் தயாரிப்பில் அதிகம் தேவைப்படுகிறார்கள். எனவே நகை வணிகர்களுடன் பேசி, தரமணியில் தர்மாம்பாள் பாலிடெக்னிக் வளாகத்தில் முழுமையான பயிற்சி கொடுக்கிறோம். 3 வருடங்களுக்கு முன்பு ஆரம்பித்தோம். 300 பேருக்கு மேல் இது வரை பயிற்சி எடுத்துக்கொண்டு வேலையில் சேர்ந்துவிட்டார்கள். (மதிப்பீடு செய்யும் கோர்ஸும் இருக்கிறது.) பெண்களும் இந்தப் பயிற்சியில் சேருகிறார்கள்.

பரிசீலனையில் இருக்கின்றன. மக்களிடையே எழுந்திருக்கும் விழிப்புணர்வு காரணமாக, வணிகர்களிடையேயும் ஹால்மார்க்கிங் பெற வேண்டும் என்ற ஆர்வம் தோன்றி இருக்கிறது. 'கோல்டு கிளப்' தொடங்கியிருக்கிறோம். இதில் பெரிய மற்றும் நடுத்தர நகை வியாபாரிகள் ஒரே இடத்தில் சந்தித்து தங்களுக்கு இருக்கும் பொதுவான பிரச்னைகளை முன் வைக்கிறார்கள். நகைத் தொழில் முன்னேற்றத்துக்கான, ஆரோக்கியமான யோசனைகளையும், திட்டங்களையும் பற்றி விவாதிக்கிறார்கள்.

மாநில விற்பனைவரி ஆணையரைச் சந்தித்து வரி குறைப்புக்கான வேண்டுகோள் வைத்திருக்கிறோம்.

நகை வாங்குவோர் புதுப் புது வடிவங்களை விரும்புகிறார்கள். எனவே பாரம்பரிய, நடைமுறை இரண்டு வகை டிசைன்களையும் நகைகளில் கொண்டுவர டிசைனர்களுக்குப் பயிற்சிகள் கொடுத்து வருகிறோம். நேஷனல் இன்ஸ்டிட்யூட் அஃப் ஃபேஷன் டெக்னாலஜி (NIFT)யுடன்

• தென்னிந்தியாவில் அதிகமாக நகைகள் தயாரிக்கப்படும் நகரம் எது?

தமிழ்நாட்டில் என்றால் கோவைதான். கேரளத்தில் திருச்சூர். ஆந்திராவில் நெல்லூர், புரோதத்தூர். கர்நாடகத்தில் கார்வார். இந்தியாவின் பிற பகுதிகள் என்றால் தில்லி, கல்கத்தா, மும்பை தவிர, ராஜ்கோட்.

• கோவையில் கோல்டு மேளா நடத்தினீர்களே? அத்தனை வெற்றிகரமாக

நடந்தும், சென்னையில் போன வருடம் நடத்து வதாக அறிவித்துவிட்டு, நடத்தாமல் போனதற்கு என்ன காரணம்?

கோவையில் 98ல் பிரம்மாண்டமான அள வில் கோல்டு மேளா நடத்தினோம். மிகப் பெரிய நகை வணிகர்கள் அத்தனை பேரும் அதில் பங்கு கொண்டார்கள். குண்டு வெடிப் புக்குப் பிறகு, பொருளாதார அளவில் நிலை குலைந்து போயிருந்த சூழ்நிலையில் நடைபெற்ற கோல்டு மேளா, நகை வியாபாரிகளிடம் மட்டு மல்ல, பொதுமக்களிடையிலும் பெருத்த நம்பிக்கையை ஏற்படுத்தியது. போட்டிகளும், பரிசுகளும் நிறைய வழங்கப்பட்டன. சென் னையில் நடத்த முடியாததன் காரணம், இம் மாதிரி போட்டி-பரிசுத் திட்டங்களுக்குச் சட்ட ரீதியாக அனுமதி கிடைக்காததால்தான். இத்தனைக்கும் மும்பை, டில்லி, கல்கத்தா என மூன்று பெரிய நகர்களிலும் கோல்டு மேளா நடைபெறுகிறது!

• வேறு என்னென்ன பணிகள்?

கோல்டு எகனாமிக் ஃபோரம் இருக்கிறது. அதில் தங்கம் பற்றிய பொருளாதார ஆய்வுகள் மேற்கொள்ளுகிறோம். இந்தத் துறையில் இருக் கும் அறிஞர்கள், மேதைகள் எல்லாம் கூடி விவா திக்கிறார்கள். நம்முடைய ரிசர்வ் வங்கி உயர் அதிகாரிகள் கலந்துகொள்கிறார்கள். அது போல, உலகின் பல்வேறு நாடுகளின் ரிசர்வ் வங்கி அதிகாரிகள் பங்கு கொள்கிறார்கள். அர சாங்கத்தின் உயரதிகாரிகள் கலந்து கொள் கிறார்கள். இதனால் எல்லாம் என்ன பயன் என்று கேட்கலாம். அரசின் நிதித்துறை இந்தக் கருத்துக்களை ஆராய்கிறது. நன்மை தரும் பல பரிந்துரைகளை அமல்படுத்துகிறது. பொது மக் களுக்குப் பயன் கிடைக்கிறது. தங்கத்தை நேரி டையாக இறக்குமதி செய்யும் உரிமம் பெரிய பெரிய வங்கிகளுக்குக் கொடுக்கப்பட்டிருக் கிறது.

• 1999-2000 ஆண்டு ஆபரண நகைகள் ஏற்றுமதி எவ்வளவு?

2180.88 மில்லியன் அமெரிக்க டாலர்கள். (ரூபாயில் பெருக்கி, பெருமூச்சு விட்டுக் கொள் ளுங்கள்!)

• ஒரு NRI எவ்வளவு தங்கம் இந்தியாவுக்குக் கொண்டு வரலாம்?

குறைந்த பட்சம் ஆறு மாதங்களாவது வெளிநாட்டில் இருந்துவிட்டு வரும் NRI, பத்து கிலோ தங்கம் கொண்டு வரலாம்., அதற்கு வழக்கமான சுங்கவரி மட்டுமே வசூலிக்கப் படும்.



## தீ மிதி தீபாவளி!

நம் ஊரில் தீபாவளி ஒருநாள் பண்டிகை. தீபாவளி என்றால், தீபங்களின் அலங்காரம் என்று சொன்னாலும், நம் வீடுகளில் விளக்கேற்றி, தீபாவளி கொண்டாடுவது ரொம்ப குறைவுதான். ஆனால் சிங்கப்பூரில் அந் நாட்டின் சுற்றுலா வளர்ச்சிக் கழகமே தீபாவளியை பிரம்மாண்டமாய்க் கொண்டாடுகிறது. சிங்கப்பூரின்



முக்கிய சாலையான சிராங்கூன் ரோடு, ஜெகஜ் ஜோதியாய் பிரகாசிக்கிறது. அதுவும் ஒரு நாள் இல்லை; இந்த மாதம் ஏழாம் தேதி தொடங்கி தீபாவளி வரை சுமார் இரண்டு வார காலத்துக்கு! சிராங்கூன் ரோடு மட்டுமன்றி அங்குள்ள பிரதான இந்து கோவில்களான வீரமாகாளி அம்மன் கோவில், ஸ்ரீனிவாச பெருமாள் கோவில், வடபாதிர காளி அம்மன் கோயில் ஆகிய மூன்று கோவில்களிலும்கூட வண்ண மின்னொளி அலங்காரம் செய்யப்பட்டுள்ளது.

தவிர, இந்தியாவிலிருந்து கலைஞர்களை வரவழைத்து, பிரத்யேகக் கலை நிகழ்ச்சிகளும் நடக்கின்றன. சிங்கப்பூரின் மாரியம்மன் கோவிலில் தீபாவளி ஸ்பெஷல் என்ன தெரியுமா? அதிகாலையில் தீ மிதி விழா, இரவில் தங்கத் தேர்!

— மௌலி



தமிழக அரசியல் வானில் நாங்கள் புதிய நட்சத்திரம். சமுதாயத்தில் வசதியானவர்களால் வசதியற்றவர்களுக்காக நடத்தப்பட்டது அந்தக் கால நீதி கட்சி. அந்த நீதிக் கட்சித் தலைவர்களின் வழித் தோன்றலாய், வாரிசுகளாய் வந்திருப்பவர்கள்தான் புதிய நீதிக் கட்சியினர். தென்

**தேர்தல் வெகு தூரத்தில் இல்லை. கட்சிகளும் பெருகி விட்டன. என்ன சொல்லி மக்களிடம் வோட்டுக் கேட்பார்கள்? வாரம் ஒரு அரசியல் கட்சி இந்த மேடையில் முழங்கும். சமீபத்தில் ஆரம்பிக்கப்பட்ட 'பாப்பா' கட்சியான புதிய நீதிக் கட்சியின் தலைவர் ஏ.சி. சண்முகம் சொல்கிறார்:**

# "ஊழல் கட்சிகளுக்குத் துணைபோகமாட்டோம்!"

இந்திய நல உரிமைச் சங்கம், நீதிக் கட்சியாக மாறியது. பின்னர் அது தி.க., தி.மு.க., அ.இ.அ.தி.மு.க. என்று மாறி வந்திருக்கிறது. அன்றைய நீதிக் கட்சியில் இருந்த சமுதாயத் தலைவர்களின் உண்மையான வாரிசுகள் இந்தப் புதிய நீதிக் கட்சியிலும் இருக்கிறார்கள். பொருளாதாரத்தில் கீழே இருந்த சமுதாயத்தை உயர்ந்த நிலைக்குக் கொண்டு வர விகிதாச்சாரப் பிரதிநிதித்துவத்தைக் கொண்டு வந்து அம்பேத்கருக்கு முன்பே பாடுபட்டனர் நீதிக் கட்சித் தலைவர்கள். நீதிக் கட்சி ஆண்டபோது முற்பட்ட வகுப்பினர் என்று சொல்லக் கூடியவர்கள் அமைச்சர்களாக இருந்தாலும், அவர்கள் எண்ணமெல்லாம் தாழ்த்தப்பட்டவர்களையும், பிற்படுத்தப்பட்டவர்களையும் கைதூக்கி விடுவதிலேயே இருந்தது. அது போன்ற முற்போக்குச் சிந்தனையில் புதிய



**ஏ.சி. சண்முகம்,**
**தலைவர்,**
**புதிய நீதிக் கட்சி**

பரிணாமத்தோடு, தற்போதைய நடைமுறைக்கு ஏற்றாற் போல், தமிழகத்தில் சமநிலை சமுதாயம் அமையவும் சமநீதி எல்லோருக்கும் கிடைக்கவும் பாடுபடும் புதிய நீதிக் கட்சி என்பதை வரும் தேர்தலின் போது வாக்காளர்களுக்குச் சொல்லி வோட்டுக் கேட்போம். புதிய நீதிக் கட்சியைப் பொறுத்த வரை வன்முறை அரசியலை ஒழித்து தமிழகத்தை அமைதிப் பூங்காவாக மாற்ற முயலும். தாழ்த்தப்பட்ட, சிறுபான்மை மக்களின் உரிமைகளைப் பாதுகாப்போம்.

பிற அரசியல் கட்சிகள் வாக்குகளைப் பெறுவதற்காகவே தாழ்த்தப்பட்டவர்களையும், பிற்படுத்தப்பட்டவர்களையும் தேவைக் கதிகமாகவே அணைத்துக் கொண்டு செல்கின்றன. முற்படுத்தப்பட்டவர்கள் என்று சொல்லப்படுபவர்கள் வறுமைக் கோட்டுக்குக் கீழே இருப்பது அவர்கள் கண்ணுக்குத் தெரிவதில்லை. முற்படுத்தப்பட்டவர்களில் பிராமணர்கள் மட்டுமல்லாமல், முதலியார்கள், பிள்ளைமார்கள், ரெட்டியார்கள், நாயுடுகள் ஆகியோரும் இருக்கின்றனர். இவர்களில் பெரும்பாலானோர் வறுமையில் வாடிக் கொண்டு இருக்கிறார்கள். இந்த மக்களின் வாழ்வுரிமைக்காகப் புதிய நீதிக் கட்சி போராடும். வன்முறையைத் தூண்டும் அரசியல் கட்சிகளைத் தலை தூக்க விடமாட்டோம்.



"நடிக்கறதுக்கு வாய்ப்புக் கேட்டு ரொம்ப தொல்லை பண்றே. ஒரு பிணம் கேரக்டர் இருக்கு தர்றேன். நல்லா நடிப்பியா?"
"உயிரைக் கொடுத்து நடிப்பேன், ஸார்!"
– டேவிட் ராஜசீலன்

நாங்கள் ஜனநாயகத்தில் நம்பிக்கையுடையவர்கள். காந்தி, காமராஜர், அண்ணா, எம்.ஜி.ஆர். காட்டிய வழியில் நடக்க இருக்கிறோம். பஞ்சாயத்துத் தலைவரில் துவங்கி, எந்தப் பதவிக்குப் போட்டியிட்டாலும், எங்கள் கட்சியில் இருப்பவர்கள் சொத்துக் கணக்கைக் காட்டி விட்டுத்தான் மனுதாக்கல் செய்ய வேண்டும். ஊழல் சக்திகளுக்கு ஒரு நாளும் துணை போகமாட்டோம். ஜெயலலிதாவுக்குக் கிடைத்துள்ள தண்டனை அரசியல்வாதிகளுக்கு நல்ல பாடம். எங்கள் மேடைகளில் இந்தச் செய்திகளைச் சொல்லுவோம்.

பத்தாண்டு காலம் முதல்வராக எம்.ஜி.ஆர். இருந்த போது, பஸ் கட்டணம், ரேஷன் அரிசிவிலை, மின் கட்டணம் ஆகியவற்றைக் கட்டுப்பாட்டில் வைத்திருந்தார். தமிழகத்துக்கு அரிசி கோட்டாவைத் தர மறுத்த மத்திய அரசை எதிர்த்து உண்ணாவிரதம் கூட இருந்தார். ஆனால் இப்போதைய முதல்வரோ, பெட்ரோலியப் பொருட்களின் விலையை மத்திய அரசு உயர்த்துவது குறித்து எதுவும் பேசாமல் வாய்மூடி மௌனியாக இருக்கிறார். எம்.ஜி.ஆருக்குப் பிறகு கலைஞர் வந்தார்; கலைஞருக்குப் பின் ஜெயலலிதா. அவர் ஊழல், அதிகார துஷ்பிரயோக ஆட்சிக்குப் பிறகு மீண்டும் கலைஞர். தமிழ் நாட்டில் இரண்டு அணி இருப்பதால்தான், ஒருவரை விட்டால் இன்னொருவர் ஆட்சிக்கு வரும் அவல நிலை. இந்தச் சூழ்நிலையில் ஒரு புதிய தலைமையை–மூன்றாவது அணியை– மக்கள் எதிர்பார்க்கிறார்கள் என்பது எங்கள் கருத்து. அந்த அடிப்படையில் தி.மு.க.–அ.தி.மு.க. என்ற இரண்டு அணிகளையும் வீழ்த்தும் வண்ணம், ஒரு புதிய அரசியல் கூட்டணியை உருவாக்கி, திருப்பத்தைக் கொண்டு வருவோம். வாக்காளர்கள் எங்கள் கருத்தை ஏற்றுக் கொள்வார்கள் என்று நம்புகிறோம்.

கட்சி துவங்கிய 100 நாட்களில் 20 தொகுதி மாநாடுகள் நடத்தியிருக்கிறோம். எந்த நிகழ்ச்சியிலும் ஒரு சல சலப்புமில்லாமல் அமைதியாக நடத்தியிருக்கிறோம். சுமார் 80 தொகுதிகளில் வெற்றி-தோல்வியை நிர்ணயிக்கும் சக்தியாக புதிய நீதிக் கட்சி விளங்குகிறது.

தி.மு.க. ஆட்சியில் போக்குவரத்துக் கட்டணம், மின் கட்டணம் ஆகியவை உயர்த்தப்பட்டிருக்கிறது. சிமெண்ட் விலை கட்டுப்பாடே இல்லாமல் 150 சதவீதம் உயர்ந்திருக்கிறது. விலையைக் கட்டுப்படுத்த தி.மு.க. அரசு தவறி விட்டது. தி.மு.க. ஆட்சி இப்படி மக்கள் விரோத போக்கைக் கையாள, ஊழல் வழக்கில் தண்டனை பெற்றுள்ள ஜெயலலிதா மக்கள் இன்னமும் ஏமாறுவார்கள் என்று எதிர்பார்த்துக் காத்திருக்கிறார். இந்த இரண்டு கட்சிகளையும் ஓரங்கட்டிவிட்டு, புதிய நீதிக் கட்சி உருவாக்க இருக்கும் மூன்றாம் அணி வெற்றிக் கொடி நாட்டும் என்பதில் சந்தேகமில்லை. ○

ஒரு பெண்மணி, மளிகைக் கடையில், மிளகு நூறு கிராம், சீரகம் ஐம்பது கிராம், வெந்தயம் நூறு கிராம், வெங்காயம் ஒரு கிலோ, பூண்டு அரை கிலோ... என்று சமையலுக்குத் தேவையானவற்றை வாங்குகிறார்.

அடுத்து ஒரு முதியவர் வருகிறார். "மிளகு நூறுகிராம், சீரகம் நூறு கிராம், வெந்தயம் நூறு கிராம், கிராம்பு பத்து கிராம், ஏலக்காய் பத்து கிராம்" என்று வாங்குகிறார்.

முதலில் வாங்கிய பெண்மணி அவற்றை தினமும் சமையலுக்குப் பயன்படுத்துகிறார்.

அடுத்து வாங்கிய முதியவர் ஒரு சித்த மருத்துவர். தாம் வாங்கியவற்றைத் தம்முடைய கிளினிக்கிற்குக் கொண்டு போனார். எல்லாவற்றையும் இலேசாக வறுத்து, பொடியாக்கி, ஒரு சூரணம் தயாரித்தார். அதற்கு 'வாயு சூரணம்' என்று பெயர். அந்த சூரணத்தை, தன்னிடம் வரும் நோயாளிகளுக்கு வாயு சூரணமாகவும், மூட்டு, வாத வலி சூரணமாகவும், மலச்சிக்கல் போக்கும் சூரணமாகவும், வெவ்வேறு பரிமாணத்தில்

1





கொடுக்கிறார். நோயாளிகளுக்கு உடனடியாக நிவாரணம் கிடைக்கிறது.

அந்தப் பெண்மணி வாங்கியவை எல்லாம் உணவுடன் உடலுக்குள் சென்று நோய் வராமல் தடுக்கிறது. அப்படி இல்லாமல் நோய் வந்தவர்களுக்கு அந்த சித்த மருத்துவர் வாங்கிச் சென்றவை மருந்தாக உருவாகி, நோயைத் தீர்த்து வைக்கிறது. இதுதான் உணவே மருந்து; மருந்தே உணவு. இதுபோன்ற ஒரு விஷயம் உலகில் வேறு எந்த மருத்துவ முறையிலும் கிடையாது. கிச்சனும், கிளினிக்கும் இணைந்த ஒரு மருத்துவ முறைதான் நமது தமிழ்நாட்டு சித்த வைத்தியம்!

மேல் நாட்டுக்காரர்கள், நம் மருத்துவ முறையை

**'மூலிகை மணி' டாக்டர் கே. வெங்கடேசன்**

alternative medicine என்கிறார்கள். ஆனால் இது தான் நமக்கு native medicine.

ஒரு உதாரணம் சொல்லுகிறேன். இரவு டின்னருக்கு வெளியில் போகிறோம். பலமான சாப்பாடு. சாப்

'வெந்தயம் ஒரு கால் ஸ்பூன் எடுத்து சர்க்கரையைக் கலந்து, தூள் செய்து, வாயில் போட்டுக் கொண்டு, கொஞ்சம் தண்ணீர் குடித்து விட்டு, வீட்டில் குறுக்கும், நெடுக்குமாக கொஞ்சநேரம் நடந்து கொண்டிரு. ஏப்பம் பலமாக வரும். பிறகு வயிற்று வலி போய் விடும்' என்று சொல்லுவாள் நம் பாட்டி. அப்படியே செய்தால், வாயு உபத்திரவம் போயே போச்!

நம் பண்டைய மருத்துவத்தில் பயன்படுத்தப்படும் சுமார் அறுபது மூலப் பொருட்களில், நாற்பது மூலப் பொருட்கள் போல, நம் சமையல் அறையில் இருக்கக் கூடியவைதான் என்று சொன்னால் உங்களுக்கு ஆச்சரியமாக இருக்கும். ஆகவே, நம் கிச்சனே ஒரு கிளினிக்தான்!

இன்று நம் வீட்டுச் சமையல் அறையில் பயன்படுத்தப்படும் பல்வேறு பொருட்களுக்கும் என்னென்ன மருத்துவக் குணங்கள் உள்ளன என்பதை பல்வேறு உலக நாடுகளின் பயோ கெமிஸ்ட்களும் தங்கள் சோதனைச் சாலைகளில் ஆராய்ச்சிகள் மேற்கொண்டு வருகின்றனர்.

சர்க்கரை வியாதியை, பாகற்காய் சாப்பிட்டுக் கட்டுப்படுத்துவது என்பது நம் மருத்துவ முறையில் மரபு. ஆனால், இருபது, இருபத்தைந்து வருடங்களுக்கு முன்பு, 'பாகற்காய் கசப்பு என்பதாலேயே, அதைச்

# கிச்சன் கிளினிக்!

பிட்டு முடிப்பதற்கு லேட் ஆகிவிடுகிறது. பன்னிரண்டு மணிக்கு மேல் வீடு திரும்பி, அப்புறம் படுத்தால் தூக்கம் வரவில்லை. வயிற்றில் பிரச்னை. வாயு உபத்திரவம், வயிற்று வலிக்கு, ராத்திரி பன்னிரண்டு மணிக்கு, எந்த டாக்டரிடம் போய் மருந்து கேட்க முடியும்? வயிற்றுப் பிரச்னை தீர என்ன வழி என்று தவிக்கிற நேரத்தில்-

சாப்பிட்டால், சர்க்கரை வியாதி கட்டுப்பட்டுவிடும் என்பதெல்லாம் மூட நம்பிக்கை என்று சொன்னதுண்டு. அப்போது ஒரு புகழ்பெற்ற சென்னை நகரத்து நீரிழிவு மருத்துவமனையில் 'பாகற்காய், சர்க்கரை வியாதியைக் கட்டுப்படுத்தும் என்பது மூட நம்பிக்கை; எனவே பாகற்காயை நம்பாதீர்கள்' என்று போர்டுகூட எழுதி வைத்திருப்பார்கள்!

ஆனால், இப்போது- ஆறேழு வருடங்களுக்கு முன்பு என்ன ஆயிற்று தெரியுமா? மும்பை டாடா ஆராய்ச்சி மையத்தில் பாகற்காயை நுணுக்கமாக ஆராய்ச்சி செய்தார்கள். அப்போது, நம் உடம்பில் இன்சுலினைச் சுரக்கச்

டாக்டர் வெ. அபிராமி

செய்யும் பாலி பெப்டிடைட் என்ற செல், பாகற்காயில் இருப்பதாக நிரூபணம் ஆனது. அது மட்டுமல்ல. பாகற்காயைச் சாப்பிடுவதால், மற்றெந்த மருந்துகளையும் சாப்பிட்டால் வருவது போன்ற பக்கவிளைவுகள் ஏதும் ஏற்படாது.

**'ரா**த்திரி நல்லாதான் பேசிக்கிட்டு இருந்தாரு. படுத்துத் தூங்கினாரு; காலையில் எழுந்திருக்கவே இல்லை; தூக்கத்திலேயே உயிர் பிரிஞ்சுட்டது' காரணம் மாஸிவ் ஹார்ட் அட்டாக்' என்று இன்று பலரும் சகஜமாக சொல்லக் கேட்கிறோம். இதைத் தான் 1200 வருடங்களுக்கு முன் திருமூலர் ரொம்ப அழகாகச் சொல்லியிருக்கிறார்.

"இடப்பக்கமே இரை நொந்ததென்றார்
கிடக்கப் படுத்தார்; கிடந் தொழிந்தாரே"

இரை என்றால் இதயம். இடப்பக்கம் இருக்கிறது. திருமூலரின் நுணுக்கமான அப்சர்வேஷன் என்னவென்றால், ஹார்ட் அட்டாக் வந்தாலே, இடது புறமோ, வலது புறமோ திரும்பிப் படுக்க முடியாது; கிடக்க அதாவது மல்லாந்து படுத்து விடுவார்கள். இதயப் பகுதியில் கையை வைத்து, பிசைவார்கள். உள்ளே போய் குடிக்கத் தண்ணீர் கொண்டு வருவதற்குள்ளாகவே உயிர் பிரிந்துவிடும். இதை கொரோனரி ஆர்டீரியல் நோய் என்பார்கள்.

ஹார்ட் அட்டாக் என்று குறிப்பிடப்படும் இது, உலகம் முழுக்க உள்ளது. அதுவும் குளிர் காலத்தில், ஹார்ட் அட்டாக் வந்து மரணமடைகிறவர்கள் சதவீதம் அதிகமாக இருக்கும். அமெரிக்காவில், இதுபற்றி ஆராய்ச்சி செய்த டாக்டர்கள், உலகில் ரோம் நகரை ஒட்டிய ஒரு கிராமத்தில் உள்ள மக்களுக்கு இந்த அட்டாக் வருவதில்லை என்று அறிந்து, அங்கு ஆறுமாதம் தங்கி அவர்களின் வாழ்க்கை முறை, உணவுப் பழக்கம் போன்றவற்றை ஆராய்ந்தார்கள். அப்போது அந்த ஊர்மக்கள் தங்கள் உணவில் நிறைய மிளகு சேர்த்துக் கொள்ளுவதே இதற்குக் காரணம் என்று கண்டு பிடித்தார்கள். அதன்பின் மிளகை எடுத்துக் கொண்டு போய், தங்கள் ஆராய்ச்சிக்கூடத்தில் வைத்து ஆராய்ந்து எலிகளுக்கும் முயல்களுக்கும் கொடுத்து, மிளகின் மருத்துவக் குணங்களை அறிந்து சொன்னார்கள். மிளகில் இருக்கும் கேப்சைசம் என்கிற ஒரு என்சைம், அன்றாடம் உட்கொள்ளப்படும் போது, ரத்தக் குழாய்களின் உட்பகுதியில் படிகிற கொழுப்பைக் கரைத்து, சிறுநீர், வியர்வை மூலம் வெளியேற்றி விடுகிறது என்பது அவர்களது கண்டுபிடிப்பு.

தினம் பத்து மிளகைச் சாப்பிட்டு வந்தால், உடம்பில் நஞ்சு சேராது என்று நம் பாட்டிமார்கள் சொல்வதன் அர்த்தம் புரிகிறதா?

ஒரு விஷயம் உங்களுக்குத் தெரியுமா? மிளகு, மஞ்சள், வெந்தயம், சீரகம், பூண்டு, இஞ்சி போன்றவை கொண்ட 'அஞ்சறைப் பெட்டி'யைத்தான் அந்தக் காலத்தில் தாய் வீட்டுச் சீதனமாக, திருமணமாகி புகுந்த வீடு போகும் பெண்ணுக்குக் கொடுத்தனுப்புவார்கள். ஒரு குடும்பத்தின் ஆரோக்கியத்துக்கு இவையெல்லாம் வேண்டும். இதை எடுத்துக் கொண்டு புகுந்த வீடு சென்று அங்கே ஆரோக்கியம் நிலவச் செய்யும் பொறுப்பு உனக்கு உண்டு என உணர்த்துவதுதான் அஞ்சறைப்பெட்டி.

ஆக, நம் ஆரோக்கியம் என்பது நர்சிங் ஹோமிலோ, மருந்து கடையிலோ இல்லை. நம் வீட்டுச் சமையலறையில்தான் இருக்கிறது.

சந்திப்பு: **பாரதிமௌலி**
படங்கள்: **யோகா**



"படம் 'குப்பை'ன்னு விமர்சனம் எழுதிட்டுப் போங்க, வேணாங்கலை; அதுக்காக படத்தோட ஸ்டில்லுக்குப் பதிலா, குப்பை லாரி ஃபோட்டோவைப் பிரசுரிக்கணுமா?"
— டி.எஸ். பாலகிருஷ்ணன்



"கிரஹப்ரவேச ப்ராப்தி ரஸ்து"

## நல்ல இடம் • நல்ல மனை • தகுந்த மதிப்பு

(அநேகமாக இடத்தை பார்த்தபின் நீங்களும் இப்படித்தான் சொல்வீர்கள்)

**மிகைப்படுத்தவும் அலங்காரப்பேச்சும் இல்லை**

**சரியான் தேர்வு அமைவிடம் விலை**

# கிருஷ்ணா நகர்

அரசு அங்கீகாரம் பெற்ற மனைகள் (DTP/LPDM-16/74)

மேடவாக்கம், சென்னை - 601 302.

(வேளச்சேரி அருகில்)

சிறப்பு அம்சங்கள்: • மாநகருக்கு மிக அருகில் • கவர்னர் மாளிகையிலிருந்து 20 நிமிட பயணம் • தாராளமான ரயில் மற்றும் பஸ் வசதி • அடையாறு, திருவான்மியூர், வேளச்சேரி, கிண்டி, தாம்பரம் முதலிய இடங்களிலிருந்து சுலபமான, நேர்த்தியான அகலச்சாலைகள் • நல்ல பள்ளிகள், கல்லூரிகள் மருத்துவமனைகள், அங்காடிகள் மிக அருகில் • நன்கு திட்டமிட்ட மனைப்பிரிவு/சுற்றிலும் வேலி • நான்கு பக்கமும் நல்ல வீடுகள், சுவையான குடிநீர் 12' ஆழத்தில் • வாங்கிய உடனே வீடு கட்டலாம் • மிக வேகமான விலையேற்றம் • பாதுகாப்பான முதலீடு • நம்பகமான நிறுவனம் • சுத்தமான பத்திரம் • 5 வருட மனைப் பாதுகாப்பு சேவை • கட்டுமான பணி ஏற்பு.

**FREE SITE VISITS DAILY : 7 am, 11 am & 3 pm**

**PH : 4357721 / 31 / 61 / 81 • Telefax : 4353183**

**Cell : 98400-44018 E-mail : blbestmail@vsnl.net**




**BLB Estates (P) Ltd.**

S-3, "Ramana Flats" 27, Rathna Nagar,
Off : Anna Salai, Teynampet, Chennai - 18.
(Behind Apollo Cancer Hospital)

வர்த்தகத்தில் நேர்மை; பணியில் பொறுப்பு

"தபுவுக்கு இப்படி ஒரு கதாபாத்திரம் இதுவரைக்கும் வந்ததில்லை. இனிமேலும் சந்தேகம்தான்'' என்கிறார் குஷ்வந்த் சிங்.

"ஒரு இயக்குநராக முதன் முதலில் பொறாமைப் பட்டது இந்தப் படத்தின் இயக்குநர் மகேஷ் மஞ்சிரேக்கரைப் பார்த்துத்தான்'' என்கிறார் பிரபல இந்தி திரை இயக்குநர் மகேஷ்பட்.

"பாட்டுக்கு ஒரு நாடு... ஃபைட்டுக்கு ஒரு ஊர்... லட்சக் கணக்கில் வாரி இறைத்து செட்டுகள்... ஹீரோவின் கால்ஷீட் வேண்டி தவம்... இப்படி பல விஷயங்களை, அதிலும் முக்கியமான, தவிர்க்க முடியாத சமாசாரங்களைப் பற்றி துளியும் கவலைப் படாமல் ஒரு அழுத்தமான கதையைத் தேர்ந்தெடுத்து, தயாரித்த ஒரே காரணத்துக்காகவே டைரக்டரை எவ்வளவு பாராட்டினாலும் தகும்!'' என்கிறது மும்பையின் புகழ்பெற்ற 'மிட்-டே' பத்திரிகை.

– இப்படி விமர்சனங்கள் குவிகின்றன.

'ASTITVA' - திரைப்படம், கற்பனை அல்ல. இந்தியாவின் எண்பது சதவிகித பெண்களின் உணர்வுகளைச் சித்திரிக்கும் அற்புதம். தபுவின் 'அதிதி' பாத்திரம் நம் இதயத்தில் அறையும் நிஜம்.

# நெஞ்சில் அறையும்

அதிதி-ஸ்ரீகாந்த்' தம்பதியினருக்கு 25 வயதில் சதீஷ் என்ற ஒரே மகன். செல்வச் செழிப்பில் திளைக்கும் குடும்பம். அவர்கள் வீட்டுக்கு விருந்தினர்களாக வருகிறார்கள் ரவியும் அவரது எதிர்கால மனைவியும். ரவி, ஸ்ரீகாந்தின் நெருங்கிய நண்பர். அப்போது தபாலில் ஒரு சொத்துப் பத்திரம் வருகிறது. அதில் பல லட்சம் ரூபாய்கள் பெறுமான முள்ள சொத்துக்களுக்கு அதிதியை வாரிசாக நியமித்து உயில் அனுப்பியிருக்கிறார் ஒருவர். முதலில் அதிதியின் சொந்தக்காரர் யாரோ, அதை அனுப்பியிருக்கக் கூடும் என்று சந்தோஷத்தில் துள்ளும் ஸ்ரீகாந்த், சில நாட்கள் சென்ற பிறகு ஏதோ குழப்பத்திற்குள்ளாகிறான். காரணம்.. அனுப்பியது, அதிதிக்கு 25 வருஷங்கள் முன்பு பாட்டு வகுப்பு எடுத்த மியூசிக் மாஸ்டர். அவர் ஏன் அதிதியை வாரிசாக அறிவிக்க வேண்டும்? யோசிக்கிறார்.





# நிஜம்!

ஏதோ ஒரு பொறிதட்ட, 25 வருடங்களுக்கு முன்னால் தாம் எழுதிய டைரிகளைப் படிக்கிறார். ஒவ்வொரு மாசத்துக்கும் ஒரு ஃப்ளாஷ் பேக் போகிறது.

அதில், இளமைக் காலங்களில், அதிதியைவிட, பணத்தைத் தாம் அதிகமாக நேசித்ததும், அவளுடைய ஆசைகளுக்கும், உணர்வுகளுக்கும் முக்கியத்துவம் தராமல் அந்தஸ்தை உயர்த்துவதிலேயே அதிக கவனம் செலுத்தியதும் புரிகின்றன. கூடவே அந்த அதிர்ச்சியான, ஜீரணிக்க முடியாத ஒரு உண்மையும் உறைக்கிறது. வியாபார விஷயமாக தாம் வெளிநாடு போயிருந்த காலங்களில் தான் அவள் கர்ப்பமாகியிருக்கிறாள் என்பதும், எனவே சதீஷ் தனக்குப் பிறந்தவன் அல்ல என்பதும் தெரிய வருகிறது. இதை அதிதியும் ஒப்புக் கொள்கிறாள். அழுதபடியே, 'சதீஷ் - அந்தப் பாட்டு வாத்தியாருக்குப் பிறந்தவன்' - தான் என்கிறாள்..! (இதைக் காட்சியாக சித்திரிக்கும்போது கூட துளியும் விரசமில்லாமல், மழையில் நனைந்தபடியே இருவரும் பற்றிக் கொள்வது என்று படு இயல்பாகச் சொல்லியிருப்பது இயக்குநரின் பலம்!)

விஷயம் முற்றுகிறது. ரவி குடும்பத்துக்கும், மகன் சதீஷிக்கும்கூட தெரிய வருகிறது. மகன் இடிந்து போகிறான். அம்மாவை அடியோடு வெறுக்கிறான். ரவி - எவ்வளவோ சமாதானப்படுத்த முயற்சி செய்கிறான். முடிவில் பிரிந்து வாழ்வதும் விவாகரத்துப் பண்ணிக் கொள்வதும் தான் ஒரே வழி என்கிறார் ஸ்ரீகாந்த்! முதலில் கலங்கும் அதிதி, பின்னர் உறுதியாக வெளியேறுகிறாள். தான் ஒரே ஒரு முறை நிலை தடுமாறியதற்குக் கூட காரணம் அவன் தான் என்று விளக்குகிற அந்தக் கிளைமாக்ஸ் வசனம் ஒவ்வொன்றும் ஒரு சவுக்கடி!

— ஜீவன்



• பரிசு பெற்ற டிசைன்

மும்பை. மாஹிம். சுமன் அபார்ட்மென்ட்ஸ். ஐந்தாம் தளம்.

"நான்தான் தீபாலி ஜெயின்" என்று கதவைத் திறந்தவுடன் கை குலுக்குகிறார், ஓர் இளம் பெண். வயது 20 பிளஸ்.

ஜுவல்லரி டிசைனர்; மாடலும் கூட.

DeBeers என்ற புகழ் பெற்ற வைர வியாபார நிறுவனம் நடத்திய அகில இந்திய மில்லினியம் டயமண்ட் டிசைன் போட்டியில் புதுமாதிரி வைரத்தோடு டிசைன் செய்து, முதல் பரிசு பெற்றவர் தீபாலி ஜெயின்.

"என்னுடைய டிசைன், நடுவர்களை இந்த அளவுக்கு இம்ப்ரெஸ் பண்ணும் என்று நினைக்கவே இல்லை. மாடல் மது சப்ரே, ஆர்க்கிடெக்ட் ஹஃபீஸ் கன்ட்ராக்டர், கார்ட்டியர் இதழின் இந்திய பிரதிநிதி கியாஷரன், டிரஸ் டிசைனர் ஹேமந்த் திரிவேதி, நடிகைகள் ஷபானா ஆஸ்மி, பூஜா பேடி, சபீரா மெர்ச்சன்ட் - இவர்கள்தான் நீதிபதிகள். இந்தக் காதணிக்கு 'curve into 2000' என்று பெயர் சூட்டியிருந்தேன். டிசைனில் இருக்கிற வளைவு இருக்கிறதே, அதை நிலையாமல் இருக்கிற, எப்போதும் மாறுகிற வாழ்க்கைக்கு அடையாளமாக நினைத்துக் கொண்டேன். மஞ்சளான தங்கம் அலைகள் என்றால், வைரம் நீலக் கடலைக் குறிக்கிறது!" என்று விளக்கம் தருகிறார் தீபாலி.

இதன் விலை மூன்று லட்சம் ரூபாயாம்!

"இந்தப் போட்டியில் புரொஃபஷனல் டிசைனர்கள் மட்டும்தான் கலந்து கொள்ள முடியும். நான் டிசைனராக வேலை பார்க்கும் புகழ் பெற்ற ஜுவல்லரி நிறுவனம் திருபுவன்தாஸ் பீம்ஜி ஜவேரி (வெஸ்ட் என்ட்), பரிசு பெற்ற என் டிசைனை ஏற்றுக் கொண்டு காதணியைத் தயாரித்தார்கள். அவர்கள் நிறுவனத்தின் பெயரும் பரிசு பெற்ற என் டிசைன் காரணமாக இன்னும் பெருமை பெறும் அல்லவா?"

• தீபாலி ஜெயின்



மொத்தம் வந்த 1100 டிசைன்களில் இருபதே இருபது மட்டும் DeBeers நிறுவனத்தால் பரிசுக்கு உரியவை எனத் தேர்ந்தெடுக்கப்பட்டனவாம். அதில் ஒன்றுதான் தீபாலி ஜெயின் உருவாக்கியது.

"பரிசு பெற்றதும் ஒரு ஸ்பான்சரைப் பிடித்து, டிசைனுக்கு ஏற்ற மாதிரி படைப்பை உருவாக்க வேண்டும். நான் திருபுவன்தாஸ் பீம்ஜி ஜவேரியில் பணியாற்றுவதால் அவர்களே முன் வந்து என் டிசைன்படி காதணி தங்கத்திலும் வைரத்திலுமாகத் தயார் செய்தார்கள்."

"எப்படி நகை டிசைன் தொழிலுக்கு வந்தீர்கள்?"

"மித்திபாய் கல்லூரியில் ஆர்ட்ஸ் கிராஜுவேட் ஆன பிறகு, கொஞ்ச நாள் என்ன செய்வது என்றே தீர்மானிக்க முடியாமல் இருந்தேன். அப்புறம் ஒரு நாள் இந்தோ-அமெரிக்கன் சொசைடி, ஜுவல்லரி டிசைனிங் ஒர்க்ஷாப் நடத்தப் போவதாக அறிவித்தார்கள். ஆகா, இதுதான் நமக்கு வழி காட்டப் போகிறது என்று எனக்குள் ஒரு பொறி தட்டியது மாதிரி இருந்தது. கொஞ்ச நாளிலேயே எனக்கு ஜுவல்லரி டிசைனிங் பிடித்துப் போய் அதிலேயே முழு ஈடுபாட்டுடன் மூழ்கிவிட்டேன். அப்புறம் திருபுவன்தாஸ் பீம்ஜி ஜவேரியின் அர்விந்த் ஜவேரியும், விஜய் ஜவேரியும் என்னைத் தங்கள் நிறுவனத்தில் சேர்ந்து மூன்று மாத பிராக்டிகல் டிசைனர் பயிற்சி பெற வாய்ப்பு அளித்தார்கள். அங்கே ரவீந்திரநாத்

# என்ன விலை அழகே!

கர்மாகர் என்ற புகழ்பெற்ற டிசைனர் பயிற்சி அளித்தார். இப்போது அவர்களிடமே நிரந்தர இன்-ஹவுஸ் டிசைனராக இருந்து வருகிறேன்."

"வேறு என்ன எல்லாம் டிசைன் செய்கிறீர்கள்?"

"நெக்லெஸ், பிரேஸ்லெட்ஸ், மோதிரம், பென்டெண்ட், வளையல்கள். ஆனால் எல்லாமே டயமண்ட்-ஸ்டட்டட்தான். இப்போது டயமண்ட் டிசைன்ட் ஜுவல்லரிக்குத்தான் நிறைய டிமாண்ட். எக்கச்சக்க மார்கெட்!"

தில்லியில் பிறந்து, மும்பையில் படித்து, வளர்ந்த தீபாலி ஜெயின், வீட்டிலேயே மாணவிகளுக்கு ஜுவல்லரி டிசைன் வகுப்புகள் நடத்துகிறார். (நாம் போன போது ஒரு மாணவி பெரிய டிராயிங் தாளில் நிறைய டிசைன்கள் போட்டு தீபாலியிடம் காண்பித்தார். தீபாலி உடனே அவற்றில் சில மாற்றங்களைச் செய்யச் சொல்லி யோசனை கூறினார்)

இவரிடம் இருபது மாணவிகள் படிக்கிறார்களாம். மூன்று மாதப் பயிற்சிக்கு ஐயாயிரம் ரூபாய் பீஸ்!




இவ்விதழில்
இடம் பெறும்
தங்க, வைர
கட்டுரைகள்
தயாரிப்பு
**சாருகேசி**

அட்டையில்
**ஸ்ரீலதா வினோத்**

அட்டை
வண்ணப்படம்:
**ஸ்ரீஹரி**

தங்க - வைர
கட்டுரைக்கான
படங்கள்:
**ஸ்ரீஹரி,
வெங்கடேஷ்,
சித்தார்த்**

# ஆரம்பம்

**மாதங்கி**

"என்ன ஐஸு, டின்னர் பலமா?"

"அக்கா, நான் சொன்ன மாதிரி வெஜிடபிள் மஞ்சூரியன் ப்ரைட், ஐஸ் கிரீம் ஆர்டர் பண்ணினியா?"

"ஆமாம்மா. நவீன் உனக்கு இன்னொரு ட்ரீட் நிச்சயம்டா. எல்லாம் செம வெட்டு வெட்டினாங்க; மொத்தம் இருபது பேர். எனக்குத்தான் கொஞ்சம் டென்ஷன். கொஞ்சம் மோர் கொடேன்மா குடிச்சுட்டு அப்பா ஆபீசுக்குப் போன் பண்ணி இன்விடேஷன் என்னிக்கு வரும்னு கேட்கப் போறேன். பர்ஸ்ட்டு இன்விடேஷன் கொடுக்கலைனாலும் என் பாஸ் குடும்பத்துடன் வந்து விடுவாராம்."

"அதுக்கென்ன. 'பேஷா வரட்டும். ஐஸு, உனக்கு ஒரு சர்ப்ரைஸ்."

"என்னம்மா ஸர்ப்ரைஸ்? அதுதான் இந்த தரம் பின்னை பார்த்த கையோட இரண்டு சைடும் கோல் போட்டு ஆன் த ஸ்பாட் நிச்சயமான கல்யாணமாச்சே, ஆனா அத்திம்பேரிடமிருந்து ஒரே போன்தான் வந்தது."

"அதுக்குள்ள அத்திம்பேரா? ஒரு ஈ மெயில் கூடத்தான் வந்தது. ஆனா, இனிமேதான் ஆபீஸே கிடையாதே. நேத்தோட இந்தச் சிங்காரச் சென்னையின் கறுகறுப்பான ப்ரோக்ராமர் வேலைக்கு பைபை; இந்த இரண்டு வாரமா ஆபீஸில் ஒரே கேலிதான். ரெசிக்னேஷன் லெட்டரைக் கூட நேத்து சவினிங்தான் பாஸிடம் கொடுத்தேன்."

"அக்கா, சிங்கப்பூர் போன உடனே எனக்கு வாராவாரம் போன் பண்ணுவியா?"

"நிச்சயம்டா கண்ணா."

"அக்காவுக்கு ஒரு ஏர் மெயில் வந்திருக்கு."

திடீரென்று எல்லா சோர்வும் பறந்து போனாற் போல் இருந்தது ஐஸ்வர்யாவுக்கு. சட்டென்று அந்நியமாகி தனியறைக்குப் போய் பிரித்தாள்.

"அன்புள்ள ஐஸ்வர்யா,

உன்னை உயிரினும் மேலாக நேசிக்கும் உமேஷ் எழுதுவது, (பட்டாம்பூச்சிகள் வயிற்றில்) என்னடா, நாமே நம் விசிட்டிங் கார்டைக் கொடுத்தும் இவன் ஒரு போன்தான் பண்ணினானே சரியான பிசினாரி என்று நினைக்காதே (சிரிப்பு); போனில் குசலம் விசாரிப்பதிலேயே நேரம் போய்விடும். தவிர லெட்டரைப் போல் என் மனத்தில் இருப்பவற்றைக் கொட்ட முடியுமா என்ன? உங்கள் வீட்டு ப்ளாட்டில் பேசினால் அடுத்த வீட்டுக்காரனுக்கும் கேட்கும் போலிருக்கிறதே. என்ன? தமிழிலேயே எழுதுகிறேன் என்று பார்க்கிறாயா, கடல் கடந்து வந்து பல லட்சங்கள் சம்பாதித்தாலும் தமிழ் நாட்டையும் தமிழ் மண்ணையும் நான் மறப்பவனில்லை நிற்க; (பெருமிதம்.) உன்னைப் பார்த்த அந்த ஒரே வினாடியில் இவள் எனக்கெனப் பிறந்தவள் என்று தோன்றிவிட்டது. அமைதியான உன் முகமும் ஆரவாரமில்

லாத உன் அடக்காமான பேச்சும், அகன்ற விழிகளும் அரக்குவர்ணப் புடைவையும், நம் தமிழ்ப் பெண் களை உலகில் எந்தப் பெண்ணுமே மிஞ்ச முடியாது இல்லையா. (இப்பவே ஐஸ் வைக்கிறாயா).

இங்கு நான் பல வண்ணங் களில் கனவு கண்டு கொண் டிருக்கிறேன். இன்று விடுமுறை. முஸ்தபாவில் கொஞ்சம் ஷாப் பிங் பண்ணிவிட்டு செராங் கூன் வீரமாகாளியம்மன் கோவிலுக்குப் போனேன்; என்ன வேண்டிக்



கொண்டேன் தெரியுமா? என்றும் நீ என்னுடனே இருக்க வேண்டும் என்றுதான் (கண்ணீர்). உன்னை நினைத்துக் கொண்டே கோமளாஸில் டிபன் சாப்பிட்டுவிட்டேன். இன்று இரவு பாத்திரம் தேய்க்கும் வேலையிலிருந்து விடுதலை.

நீ இங்கு வந்தால் ஆர்சர்ட் ரோட்டைப் பார்த்து ஆச்சரியப்படுவாய். அவ்வளவு ஹை பேஷன் கடைகள். அதிலும் நீ தாக்காஷிமையாவைச் சுற்றி பார்க்க ஒரு வாரம் போதாது, விண்டோ ஷாப்பிங் என்றாலும் கூட. (அய்யோ எனக்கும் அதுதான் ரொம்பப் பிடிக்கும்டா)

ஆமாம் உன் தம்பி எப்படி இருக்கிறான்? நாங்கள் கிளம்பும்போது ஏதோ ப்ரைட் ரைஸ், ஐஸ்க்ரீம் என்று உன்னிடம் சமையலறையில் கேட்டுக் கொண்டிருந்தான்; உன் தம்பி என் தம்பியைப் போலத்தான். அவனுக்கு நீ கட்டாயம் வாங்கிக் கொடுக்க வேண்டும்.(என்ன அக்கறை)

நான் ஒரு மடையன் உன் போட்டோ ஒன்றைக் கேட்டு வாங்கிக் கொண்டிருக்க மாட்டேன்? (அசடு அசடு) என் காமரா சரியான நேரத்தில் காலை வாறிவிட்டது. அதனால் கொண்டு வர முடியவில்லை. உன் அப்பா எடுத்த போட்டோக்களை எனக்கும் ஒரு காப்பி அனுப்புவாயா? கவலைப் படாதே, அதுவரை உன்னை அப்படியே என் மனத்தில் இருத்திக் கொண்டிருக்கிறேன். (உவகை) நான் மிகவும் முற்போக்கானவன். இல்லாவிட்டால் காலை பத்து மணிக்கு உன்னைப் பெண் பார்க்க வந்து, பார்த்து, உடனே இருவரும் சம்மதித்து அன்று மாலையே எங்கள் வீட்டில் ஏழு மணிக்கு எல்லா உறவினர்களையும் போனில் வரவழைத்து நிச்சயதார்த்தம் நடந்தது என்றால் நம்ப முடியுமா? எங்கள் வீடும் மிகப் பெரியதாக இருப்பது வசதியாக ஆயிற்று. நான் சென்னை வந்தபோதே உன் ஜாதகத்தை இந்தத் தரகர் பயல் கொடுத்திருக்கக் கூடாதா?

நான் சில விஷயங்களில் மிகவும் தெளிவானவன். பெண்களை மிகவும் மதிப்பவன். அதனால்தான் உன்னைப் பார்க்க வந்த அன்றே நீ கல்யாணத்திற்குப் பிறகு சிங்கப்பூரில் வேலைக்குப் போவதோ போகாததோ உன் விருப்பம் என்று சொல்லிவிட்டேன். நீ வேலைக்குப் போக விரும்பினால் தாராளமாகப் போ. ஈசியாக நாம் இரண்டு ப்ளாட் சென்னையில் கட்டி வாடகைக்கு விடலாம். இல்லை வீட்டில் இருக்க விரும்பினாலும் சரி. வீட்டில் போரடித்தால் நீ ஏதாவது ட்யூஷன் எடுக்கலாம். உனக்குக் கைச் செலவுக்கு ஆகும். எனக்குப் பணத்தின் மீது பேராசை கிடையாது. தவிரவும் எனக்கு மாதம் ஒரு லட்சத்திற்கு மேல் சம்பளம்.

எனக்குப் பெண் வீட்டாரை அனாவசிய செலவு செய்ய வைப்பது சுட்டோடு பிடிக்காது. நீயும் ஒரே பெண். அதனால் தான் அவர்கள் செய்யறதைச் செய்யட்டும். எதுவும் கேட்கக் கூடாது என்று எங்கள் வீட்டாரிடம் கூறியிருந்தேன்.

என் வீட்டினரும் அப்படியே. உங்களிடமிருந்து சீர், வரதட்சணை என்று எதுவும் எதிர்பார்க்கமாட்டார்கள்.

உன் அப்பா டிரஸ்ஸுக்காகக் கொடுத்த ஐயாயிரம் ரூபாயைக் கூட நாங்கள் வாங்கிக் கொள்ளவில்லை என்றால் நீங்கள் தப்பாக எடுத்துக் கொள்வீர்களோ என்று பயந்து தான் என் அம்மா வாங்கிக் கொண்டாள். ஆனால் உனது நிச்சயதார்த்தப் புடைவையை நாங்கள் தானே வாங்க வேண்டும், மேலும் தாலிக்குப் பவுன் நாங்கள் தானே கொடுக்க வேண்டும் என்பதால், என் அம்மா சட்டென்று மூவாயிரம் ரூபாயைத் தூக்கிக் கொடுத்து விட்டாள். என் தங்கைக்கு உன்னை மிகவும் பிடித்துவிட்டது போலிருக்கு. இல்லாவிட்டால் நம் நிச்சயதார்த்தத்திற்கு அம்மாவிடம் தனக்கு மூவாயிரம் ரூபாக்குப் புடைவை வாங்கித் தரச் சொல்லியிருப்பாளா? உன் வீட்டருகே பட்டுப்புடைவைக்கடை இருந்தது அவளுக்கு வசதியாகிவிட்டது. ஜாக்கிரதை! உன் கல்யாணத்திற்கு அவள் உன்னிடம் இரண்டு பட்டுப் புடைவைகள் கேட்டாலும் கேட்பாள். குறும்புக்காரி.

**"என்னங்க, நம்ம குமார் கம்மியா மார்க் வாங்கினாங்கறதுக்காக நீங்க அவனை 'சுமார்' 'சுமார்'னு கூப்பிடுறது கொஞ்சங்கூட நல்லாயில்லீங்க!"**

**— தஞ்சை ராகவ், மகேஷ்**

ஆமாம் நீ இங்கு வரும்போது உன் சல்வார், பார்டி சாரீஸ், எல்லாம் கொண்டு வந்துவிடு. இங்கு நமது உடைகள் விலை அதிகம். உனக்கு ஜீன்ஸ் டீ ஷர்ட் மிகவும் நன்றாக இருக்கும். அவற்றை இங்கு வாங்கிக் கொள்ளலாம். எனக்கு ஒரு சிறு ஆசை நீ

கொஞ்சம் தலைமுடியை வெட்டிக் கொள்ள வேண்டும். அப்போதுதான் ஜீன்ஸுக்குப் பொருத்தமாக இருக்கும்.

ஆமாம், உனக்குச் சமையல் தெரியுமா? கவலைப் படாதே. நீ எப்படி சமைத்தாலும் நான் சாப்பிடுவேன். என்னிடம் மிக்ஸி இடையாது. அதனால் நீ வரும்போது ஒரு நல்ல சுமீத் மிக்ஸி வாங்கி வந்துவிடு. சுமீத்தான் வசதி என்று என் அம்மா சொன்னாள். இதை தயவு செய்து சீதனம் என்று நினைக்காதே. சில்வர் பாத்திரங்களில் முக்கியமானவற்றை மட்டும் இப்போது கொண்டுவந்தால் போதும். லெட்டர் மிகவும் நீளமாக இருக்கிறதா? இன்னும் நாலே வாரத்தில் வந்து உன்னைக் காணப் போவதை நினைத்தால் எனக்குத் தூக்கமே வரவில்லை. என் மனத்தில் உள்ளவற்றை அப்படியே உன்னிடம் கொட்டிவிட வேண்டும் போலிருக்கிறது. உனக்கு மட்டும் ஒரு விஷயம் சொல்கிறேன் கேள். எனக்கு



வளசரவாக்கத்தில் ஒரு வரன் வந்தது. அந்தப் பெண் தரகரிடம் என்ன சொன்னாளாம் தெரியுமா? வீட்டிற்கு வந்து அவளைப் பார்ப்பதைவிட ஒரு ரெஸ்டாரண்ட்டில் அவளைச் சந்தித்து இருவரும் பேசிக் கொள்ள வேண்டுமாம். என்ன தைரியம்! ரெஸ்டாரண்ட் என்ன, ஹோட்டலில் ரூம் எடுத்து தங்கி இன்னும் நிறைய பேசலாம் என்று அந்தப் பெண்ணிடம் சொல்லுங்கள் என்று தரகரைப் பார்த்து விடுவிடு என விட்டேன். அப்புறம் அவர்களிடமிருந்து சத்தமேயில்லை. நான் தப்பித்தேன். உன் பெற்றோரை எனக்கு மிகவும் பிடித்திருக்கிறது. அவர்களுக்கு நான் மிகவும் கடமைப் பட்டுள்ளேன். உன்னை எனக்குக் கொடுக்கிறார்களே. அவர்களுக்கு இனி அடிக்கடி சிங்கப்பூர் வந்து போக வேண்டி இருக்கும். கல்யாணத்திற்குப் பிறகு நீ கன்சீவ் ஆனால் நமக்கு அவர்கள் உதவி தேவைப்படுமே. அவர்கள் தாராளமாக வந்து உனக்கு உதவலாம்.

உனக்கு மிகவும் அதிர்ஷ்டம் தெரியுமா? இல்லாவிட்டால் நமக்குக் குடித்தனம் வைக்க சிங்கப்பூருக்கு உன் அப்பா, அம்மா தான் முதலில் வர வேண்டும் என்று எந்த மாமியார் சொல்லுவார். (யோசனை) உன் தம்பிக்குப் போரடித்தால் அவனும் வந்து விட்டுப் போகட்டும். ஒரு பத்து பதினைந்து நாட்கள் எல்லோரும் இருந்தால் உனக்கும் சந்தோஷமாக இருக்கும்.

என் அம்மா, அப்பா சிங்கப்பூருக்கு இரண்டு மாதம் கழித்து வருவார்கள். இப்போதைக்குச் சென்னையிலேயே இருப்பார்கள்.

நான் கல்யாணத்திற்கு அங்கு வரும் போது சிங்கப்பூர் ஏர்லைன்ஸில் வரப் போகிறேன். என்னை ரிசீவ் பண்ண ஏர் போர்ட்டுக்கு வந்து நீங்கள் சிரமப்படத் தேவையில்லை. நானே வந்து விடுகிறேன். உன் அப்பாவும் பாவம் வயதானவர். நடுராத்திரியில் ப்ளேனுக்காக ஏர்போர்ட்டில் காக்க வேண்டாம். உங்கள் வீட்டருகில் உள்ள ராம் ட்ராவல்ஸில் சொல்லி ஒரு காரை அரேஞ்ச் பண்ணி அடையாளம் சொல்லிவிட்டால் நானே மாம்பலத்தில் எங்கள் வீட்டில் இறங்கிக் கொண்டுவிடுவேன். மறுநாள் காலை உன்னைக் காண ஓடோடி வந்து விடுகிறேன். நான் என்றைக்கு வருகிறேன் என்பதை என் அப்பாவை உங்களுக்குப் போனில் சொல்லச் சொல்லுகிறேன். இனி நீங்கள்தானே எனக்கு எல்லாம்.

மற்றபடி உன் பெற்றோருக்கு என் நமஸ்காரம். உன் தம்பிக்கு ட்ரீட் கொடு. உன்னையே நினைத்துக் கொண்டிருக்கும்,

உமேஷ்.

பி.கு. உன் அப்பாவிடம் சொல்லி உனக்கு சிங்கப்பூர் ஏர்லைன்ஸிலேயே அடுத்த மாதம் ஏழாம் தேதிக்குப் ப்ளாக் பண்ணிவிடு. உன் டிக்கெட்டுக்கு உண்டான பணத்தை நீயே கட்டிவிடு. அதுதானே முறை. உன் அம்மா, அப்பா குடித்தனம் வைக்க உடனே வரமுடியவில்லை என்றால் ஒரு பத்துநாள் கழித்து வரட்டும். எதற்கும் அவர்கள் இப்போதே ஏர்லைன்ஸில் ப்ளாக் பண்ணி விடட்டும்.

**போ**னை எடுத்து எண்களை ஒத்த ஆரம்பித்தாள் உமா.

"டயமாயிடுத்தே, அப்பா கிளம்பியிருப்பாரே" என்றாள் அம்மா.

இல்லை "பாஸுக்கு" என்றாள். "ரெஸிக்னேஷனைத் திருப்பி வாங்கணும்..."



# மாயமாகுது தாஜ்மகால்!

உலக அதிசயங்களில் ஒன்றான தாஜ்மஹாலை மாயமாய் மறைய வைக்கப் போகிறார் ஃபிரான்ஸ் ஹராரி.

"என்ன கிண்டலா?" என்று முறைக்காதீர்கள். நிஜம்தான். இதற்காகவே நான்கைந்து முறை இந்தியாவுக்குப் பறந்து வந்திருக்கும் ஹராரி ஒரு மேஜிக் நிபுணர்!



• பிரான்ஸ் ஹராரி

பலலாயிரக்கணக்கான மக்களின் கண்ணெதிரே, தாஜ்மஹாலை மறைய வைக்கும் நிகழ்ச்சி சம்பந்தமாக டெல்லியில் பல எஞ்சினீயர்களுடன் விவாதிக்கிறார். ஆக்ராவுக்குப் போய், பல்வேறு கோணங்களில் தாஜ்மஹாலைப் பார்த்து, எங்கெங்கே என்ன செய்யலாம் என்று திட்டமிடுகிறார். இப்படி மேஜிக் நிபுணர் ஒருவர், உலக அதிசயம் ஒன்றை மாயமாய் மறைய வைப்பது புதிது இல்லை. ஏற்கெனவே அமெரிக்காவில் உள்ள சுதந்திர தேவி சிலையை மாயமாய் மறையச் செய்திருக்கிறார் ஒரு அமெரிக்க மேஜிக் நிபுணர். ஆனால், தாஜ்மஹாலை மறையச் செய்யும் முயற்சியில் ஈடுபடும் முதல் நபர் ஹராரி தான்!

மேஜிக் மீது ஹராரி ஆர்வம் கொண்டது தன் பதிமூன்றாவது வயதில். அவரது பிறந்த நாளுக்குத் தரப்பட்ட பரிசுகளில், மேஜிக் செய்ய உதவும் ஐட்டங்கள் கொண்ட பெட்டியும் ஒன்று. அதை வைத்துக் கொண்டு, சின்னச் சின்ன மேஜிக் மூலம் பெற்றோர்களையும், ஆசிரியர்களையும் அசத்த, அந்த வருடம், உள்ளூர் சூப்பர்மார்க்கெட் ஆண்டு விழாவில், அவருக்கு மேஜிக் செய்துகாட்ட வாய்ப்பு கிடைத்தது. பலரது பாராட்டைப் பெற்றார். அதன்பின், பிறந்த நாளின் போது, குழந்தைகளுக்கு மேஜிக் செய்து காட்ட ஏகப்பட்ட அழைப்புகள்! சீக்கிரமே பிரபலமாகிவிட்டார்.

கல்லூரியில் படித்தபோது தமது மேஜிக் நிகழ்ச்சியின் வீடியோ டேப் ஒன்றை மைக்கேல் ஜாக்சனுக்கு அனுப்பி வைக்க, டேப்பைப் பார்த்துவிட்டு, வியந்து போனார் மைக்கேல் ஜாக்சன். உடனடியாக மைக்கேல் ஜாக்சனின் குழுவில் சேர ஹராரிக்கு அழைப்பு வந்தது. இவர் வடிவமைத்த மேஜிக் ஐட்டங்களில் சில, மைக்கேல் ஜாக்சனின் இசை ஆல்பங்களில் இடம் 'பெற்றன.

இவர் இன்று உலகம் முழுக்க மேஜிக் நிகழ்ச்சிகள் நடத்தி வருகிறார். நிகழ்ச்சியில் இவரை ஒரு பெட்டிக்குள் அடைத்து அதில் நூறு நீளமான கத்திகளை சொருகுவார்கள். தாய்லாந்தில் இந்த நிகழ்ச்சியின்போது, தவறுதலாக ஒரு கத்தி இவரது கையைப் பதம் பார்த்துவிட்டது. உடனடியாக இவரை ஆஸ்பத்திரிக்கு அனுப்பி வைத்துவிட்டு இவரது உதவியாளர்தாமே நிகழ்ச்சியை இறுதிவரை நடத்தி முடித்தார். ஆடியன்சுக்கு, ஹராரிக்கு அடிபட்டு, ஆஸ்பத்திரிக்குப் போன விஷயமே தெரியாதபடி கச்சிதமாய் சமாளித்த உதவியாளர் எரிக்கை ரொம்பப் பாராட்டுகிறார் ஹராரி.

''வயது வித்தியாசமின்றி அனைவரும் மேஜிக் நிகழ்ச்சியை ரசிப்பதற்கு என்ன காரணம் தெரியுமா? மேடையில் மேஜிக் தொடங்கியதும், பெரியவர்கள், தங்கள் வயதை மறந்து, குழந்தைகளாக மாறிவிடுவது தான்'' என்கிறார் ஹராரி.

— மானஸா

# கம்ப்யூட்டரில் முகம் பார்த்து...!

• பாவேந்

தீபாவளிக்கு ஜவுளிக் கடைகளையடுத்து பொது மக்கள் அதிகமாய் மொய்த்த இடம் நகைக் கடைகள்தான். சென்னையில் ஜி.ஆர். தங்க மாளிகை, பிரின்ஸ் ஜுவல்லரி, கஸானா போன்ற நகைக் கடைகளில் அலை மோதிய தாய்க்குலங்களே இதற்குச் சாட்சி! உலகிலேயே தங்கத்தை அதிகமாகப் பயன்படுத்துபவர்கள் இந்தியர்கள்தான் என்று உலகத் தங்கக் கவுன்சில்

அதிகாரி சிவராமன் சொன்னதை இப்போது நம்பமுடிந்தது!

'பிரின்ஸி'ல் நாம் 'ஒட்டுக் கேட்ட' ஒரு சின்ன டயலாக் :

"ஏங்க, அந்த நெக்லெஸ் என்ன விலைங்க?"

"டென் பாயின்ட் ஃபைவ் லாக்ஸ். பத்தரை லட்சம் ரூபா."

"எடுங்க, பார்க்கலாம்!"

ஷோ கேஸைத் திறந்து, எடுத்துக் காண்பிக்கிறார் டிப்டாப்பாக உடையணிந்த விற்பனையாளர். அப்போது அம்மணியின் கண்ணில் வைரக் கம்மல் படுகிறது.

''அந்த வைரத் தோடு எவ்



வளவுங்க?"

"அஞ்ஞூறு லட்சம்."

அதையும் எடுத்துப் போட்டுக்கொண்டு, கண்ணாடியில் அழகு பார்க்கிறார்.

"எனக்கு ரெண்டு பொண்ணுங்க. வாங்கினா ரெண்டாத்தான் வாங்கணுங்க. ஒருத்திக்குக் கொடுத்து இன்னொருத்திக்குக் கொடுக்கலேன்னா நல்லா இருக்காதுங்களே!"

**பி**ரின்ஸ் ஜுவல்லரியின் பாவேஷை சந்தித்தோம்.

"வைர நகைகளில்கூட விலை குறைவாகக் கிடைக்கிறதாமே? எப்படி?"

"ராஜஸ்தான், குஜராத் மாநிலங்களில் போல்கி என்று இந்த வைரத்தைச் சொல்லுவார்கள். நான்கு சைடுகளில் மட்டுமே கட் பண்ணியிருப்பார்கள். பாலிஷும் பண்ணிவிடுவார்கள். டால் அடிக்காது. மற்றது அப்படி அல்ல. 57 கட் இருக்கும்! பளபளக்கும். பளீர் என்று டால் அடிக்கும். இதை டிரடிஷனலா, எத்னிக் டிசைன்ல அவங்க உபயோகப்படுத்திட்டு வராங்க. நம்ம தென்னிந்திய மக்களுக்கு இப்பத்தான் இந்த போல்கி வகை வைரநகை அறிமுகப்படுத்தப்பட்டிருக்கு. மற்ற வைரத்தோட கம்பேர் பண்றபோது இது விலை குறைவு. கட் குறைச்சல் என்கிறதுனால வேலையும் குறைச்சல், இல்லியா? அதனாலதான் விலை குறைவு. இதுலயே நெக்லெஸ், தோடு எல்லாம் இருக்கு. இந்த போல்கி வைர நகைகள் சௌத்ல இப்ப பிரபலம் ஆயிட்டிருக்கு!" என்கிறார் பாவேஷ்.

பம்பாயின் 'ஜிலி' நகைகளை விற்க, தனி இடம் ஒதுக்கி, முதன் முதலாகச் சென்னையில 'பிராண்டட்' ஜுவல்லரி விற்பனை செய்ய முன் வந்தவர்கள் 'பிரின்ஸ்'தான்.

"அதனால் உங்கள் வியாபாரம் பாதிக்கப்படாதா?"

சிரிக்கிறார் பாவேஷ்.

"பிராண்டட் ஜுவல்லரி மார்க்கெட் எங்களுக்குப் போட்டியே அல்ல. அதிக விலை இல்லாத, ஆனால் அதே சமயம் அழகான வேலைப்பாடு உள்ள, பரிசு கொடுக்கத் தோதான ஐட்டங்கள் அவை. எங்களுடைய நகைகள் குறைந்தபட்சமாகவே சுமார் ஏழாயிரம் ரூபாயிலிருந்து தொடங்கும். ஹெவி ரேஞ்ச்."

பிரின்ஸ் ஜுவல்லரியில் வாடிக்கையாளர்களே தங்கள் விருப்பத்துக்கு ஏற்ற டிசைன்களில் நகை செய்து கொள்ள வசதியாக, கம்ப்யூட்டர் வசதி செய்து தரப்படவிருக்கிறது. சென்னையில் இது முதல் முறையாக அறிமுகப்படுத்தப்பட இருக்கிறது.

"எப்படிச் செய்யப் போகிறீர்கள்?"

"கம்ப்யூடரில் 'ஆபரணா' என்று வெப்ஸைட் இருக்கிறது. அதில் ஏராளமான டிசைன்களை ஸ்டோர் பண்ணியிருக்கிறோம். எல்லாவிதமான நகைகளுக்கும் இதில் வகை வகையான, நவீன டிசைன்கள் வைத்திருக்கிறோம். வாடிக்கையாளர் ஸ்க்ரீனில் பார்த்துவிட்டு, இந்த பென்டென்ட் வேண்டாம். வேறு டிசைன் பென்டென்ட் இழையுங்கள் என்றால் மளமள வென்று 'மவு'சைக் கிளிக் பண்ணி புது பென்டென்டைச் சேர்த்து விடலாம். போட்டுக் கொண்டால் எப்படி இருக்கும் என்று கற்பனையில் பார்ப்பதைவிட, அணியப் போகும் பெண்ணை அப்போதே

---

**"டாக்டர் எழுதின லெட்டர்தான்னு எப்படி சொல்றீங்க?"**

**"ஸிரிஞ்ச்சீவி...க்குன்னு ஆரம்பிச்சிருக்காரே!"**

**– தஞ்சை ராகவ் மகேஷ்**

---

வீடியோவில் பிடித்து, கம்ப்யூடரில் செலுத்திவிட்டு, பிறகு அவர் தேர்ந்தெடுத்த நெக்லஸ் டிசைனை அவர் போட்டுக் கொண்டிருக்கிற மாதிரியே ஸ்க்ரீனில் காண்பிப்போம்! அதில் அவருக்குப் பிடித்த டிசைனை மாற்றிக் கொண்டே போகலாம். ஏற்கெனவே இருக்கிற டிசைன்கள் திருப்தி தரவில்லை என்றால், இந்த மாதிரி புது டிசைன்களை கம்ப்யூட்டரில் பார்த்துத் தேர்வு செய்யலாம். அப்படித் தேர்வு செய்த டிசைன்களை 'மெமரி'யில் போட்டுவிட்டு, பிறகு என்னென்ன தேர்ந்தெடுத்தோம் என்று ஒரே ஸ்க்ரீனில் எல்லாவற்றையும் பார்த்து விடலாம். கடைவாக்க பார்த்தால்கூட எந்தெந்த டிசைன் செலக்ட் பண்ணினோம் என்பது சில சமயம் மறந்து போய்விடும். இதில் அந்தப் பிரச்னையே கிடையாது!"

கட் பண்ணியும், அப்படி இப்படி திருப்பி ரொடேட் பண்ணியும், ஃப்ளிப் பண்ணியும் நிறைய ஆப்ஷன்ஸ் பெற

முடிகிறது. அது மட்டுமல்லாமல் ஏராள மான வடிவமைப்புகள். அன்லிமிடெட் டிசைன்ஸ்! புதிய புதிய டிசைன்களை கம்ப் யூட்டரில் 'உள்ளே தள்ளி' அப்கிரேடிங் நடைபெறுவதால், கூடிய விரை வில் வாடிக்கையாளர்களுக்கு இந்த நவீன வசதி கிடைத்துவிடும்'' என்கிறார் பாவேஷ்.

அரசாங்கத்தின் தர முத்திரை இவர்கள் விற்கும் நகைகளுக்கு எல்லாம் உண்டு.

''916 கோல்டு என்கிறார்களே, அப் படின்னா?''

''இருபத்தி இரண்டு காரட் தங்க நகை களில், 8.4% அல்லாய் (உலோகம்), 91.6% சுத்தத் தங்கம் என்ற அடிப்படையில் தயாரிக்க படுபவை 916 கோல்டு என்போம். 18 காரட் தங்க நகைகளில், 75% சுத்தத் தங்கமும், 25% செம்பும் கலந்து செய்வார் கள்.''

''குந்தன், மீனாகாரி நகைகள் என்கிறார்



களே, அவை எல்லாம்கூட இங்கே தெற் கிலே கிடைக்கிறதா?''

''கிடைக்கிறதாவா! நாங்களே விற்கி றோம். அவை எல்லாம் 'எத்னிக்' எனப் படும் குறிப்பிட்ட இனத்தினர் உபயோ கித்து வரும் நகை வகைகள். குந்தன், மீனாகாரி எல்லாம் இந்தியாவின் மேற்குப் பகுதியில் வசிக்கும் குஜராத்தி - ராஜஸ் தானி மக்கள் பரம்பரையாக அணிந்து வரு பவை. மீனாகாரியில் எனாமல் இருக்கும். குந்தன் ஸ்டோன் எனப்படும் ஒரு வகை கற்கள் பதித்த நகைகள் குந்தன் என்று குறிப்பிடப்படுகிறது. இதில் ஆக்ஸிடைஸ்டு ஃபினிஷ், காப்பர் ஃபினிஷ் எல்லாம்கூட உண்டு. இங்கே இருக்கிற குஜராத்தியர், ராஜஸ்தானியர் இவற்றை வாங்குவதைப் பார்த்து, நம்மவர்களும் வாங்குகிறார்கள்.''

விலையும் குறைவு, எடையும் குறைவு என்று சொல்லி அழகழகான வளையல்கள், கங்கணங்கள், நெக்லெசுகள் சிலவற்றைக் காண்பித்தார் பாவேஷ். அதிலும் கண்ணகி கால் சிலம்பு போல இருந்த வளையலைக் கையில் எடுத்தபோது, படு இலேசாக இருந்தது!

''இதெல்லாம் எலக்ட்ரோ ஃபோம் ஜுவல்லரி. உள்ளே ஃபோம். வெளியே தங் கப் பூச்சு!''

''ஃபோம் என்றால்... சாதாரண நுரை மாதிரியா? அதுதான் எடையே இல் லையோ?''

''இது இம்போர்ட்டட் ஃபோம். ஸ்பேஸ் கிராஃப்டில் உபயோகப்படுத்துவது. நகை யின் அச்சு (மோல்டு) முதலில் தயாரித்துக் கொண்டு பிறகு அந்த மோல்டுக்கு 'கோல்டு பாத்' கொடுப்போம். விலை குறைச்சல்... ஆயிரத்து ஏழுநூறு ரூபாயிலிருந்து இருக் கிறது. போட்டுக் கொண்டாலும் கனமாக இருக்காது. பார்த்தால் கனமான ஆபர ணம் போட்டுக் கொண்ட மாதிரி இருக் கும்...''

''யாராவது கழற்றிக் கொண்டு போனா லும் பெரிய நஷ்டமில்லை!''

இதில் அழகான சிலைகள். குட்டிக் குட்டியாக விநாயகர்.

''வாஷிங்டனில் இருக்கிற அன்னை வேளாங்கண்ணிக்குத் தங்கக் கிரீடம் செய்து கொடுத்திருக்கிறோம். குழந்தை ஜீஸஸுக்கும் செய்து கொடுத்திருக் கிறோம்!'' என்ற பாவேஷ், ''சிங்கப்பூரிலும் நியூயார்க்கிலும் நாங்கள் நடத்திய எக்ஸி பிஷன் பிரமாதமாக நடந்தது. அது நடந்தது மட்டுமில்லே, பிரமாதமான ரெஸ்பான்ஸ் கூட!'' என்றார்.

''நாங்கள் இந்தத் துறையில் முதலா வதாகச் செய்திருக்கிறோம் என்ற நாலு விஷயங்களைச் சொல்லுவேன் :

1. போல்கி நகைகளைத் தெற்கே அறி முகப்படுத்தியது

2. கம்ப்யூட்டர் டிசைன் அறிமுகப் படுத்தியது

3. 916 - கோல்டு ஜுவல்லரி அறிமுகப் படுத்தியது

4. 'ஜிலி' பிராண்ட் நகைகளைத் துணிந்து அறிமுகப்படுத்தியது.''

இந் நிறுவனத்தின் தலைவரான பிரின் ஸன் ஜோஸ், மூன்றாவது தலைமுறை ஜுவல்லர். 16 வருடங்களுக்கு முன், தாத்தாவையும், தந்தையையும் பின் பற்றி பிரின்ஸ் ஜுவல்லர்ஸ் தொடங் கினாராம்.

புதுமையில் ஏன் இத்தனை நாட்டம் என்பது நமக்குப் புரிந்தது.

# 13

கல்யாணபுரம் ஆராவமுதன்

மூர்ச்சையடைந்த லங்கா தேவி விழித்தெழவேயில்லை. ஹனுமான் இலங்கை நகரின் காவலை வென்றுவிட்டான். ராவணேசுவரனின் தலைநகருக்குள்ளே நுழைகிறான்.

சூரியன் மறைந்து விட்டான். ஆனால் நிலவொளி சகாயமாயிருக்கிறது. அந்த சகாயத்துடன் ஹனுமான் இலங்கையில் பல அற்புதக் காட்சிகளைக் கண்டதாக கம்பனும் வால்மீகியும் சொல்கிறார்கள்.

ஒரு மாளிகையிலிருந்து இன்னொரு மாளிகைக்குத் தாவித் தாவிச் செல்கிறான்.

தேவலோகத்து அப்சரஸ்களையொத்த அழகான மங்கையர் வீணை வாசிக்கிறார்களாம் இலங்கை நகரில்.

*'த்ரிஸ்தான ஸ்வர பூஷிதம்'* என்று அந்த வாசிப்பை வர்ணிக்கிறார் வால்மீகி.

சங்கீத சாஸ்திரத்தில் நாபி, ஹ்ருதயம் கண்டம் (தொண்டை) என்று உடலின் மூன்று நிலைகளைத் தொட்டு, ஸ்வரங்கள் வெளிப்பட வேண்டும் என்று சொல்லுவார்கள். சத்குரு தியாகராஜ ஸ்வாமி கூட 'சோபில்லு சப்தஸ்வர' என்ற கீர்த்தனையில் 'நாபி, ஹ்ருத், கண்ட ரஸனா...' என்று மூன்று நிலைகளிலிருந்து வெளிப்படும் ஸ்வர தேவதைகளை பஜிக்கச் சொல்கிறார்.

அப்படிப்பட்ட த்ரிஸ்தான ஸ்வரங்கள் அலங்காரம் பெற்று இராவணேச்வரனின் இலங்கையில், பெண்கள் மீட்டும் வீணையிலிருந்து வெளிப்படுகின்றனவாம்.

சங்கீத ரஸிகனான ஹனுமான் அந்த உயர்ந்த இசையை நின்று அனுபவித்ததில் அதிசயமில்லை.

ராவணனும்கூட வீணாகானத்தினால் பரமேசுவரனையே மகிழ்வித்தவன். தனது கொடியிலேயே வீணையைக் கொண்டிருந்தவன். அவனது நகரில் வீணை இசை கேட்டதில் ஆச்சரியம் என்ன?

கம்பரின் கற்பனை வீச்சைக் கவனியுங்கள்– இலங்கையின் மாளிகைகள் உயரமாக விண்முட்டி நின்றனவாம். அதனால் மேகங்கள் செய்த இடிமுழக்கம் மிக அருகாமையில் கேட்டதாம். அந்த இடி முழக்கமே வீணை இசைக்கு இடையூறாக இருந்ததாம்.

நியாயம்தானே! ஹனுமானைப் போன்ற ஒரு சங்கீத ரசிகனுக்கு இடையூறான அந்த இடியோசை கர்ண கொடூரமாகத் தானே இருந்திருக்கும்.

வீணா கானத்தில் தோய்ந்து போய் நின்றுவிடவில்லை ஹனுமான். இன்னும் என்னென்ன பார்த்தார் இலங்கையில் என்பதை வால்மீகி விவரிக்கிறார் பாருங்கள்:

சில அரக்கர்களின் வீட்டில் பெண்களின் மேகலைகளும் கால் சதங்கைகளும் கை

## நாமக்கல் ஆஞ்சநேயர்

சேலம் அருகே உள்ள நாமக்கல் ஆஞ்சநேயரை அறியாதவர் இருக்க முடியாது. வெட்டவெளியில் வானளாவி நின்றிருந்த இந்த ஹனுமாருக்கு, சில ஆண்டுகள் முன்புதான் விசேஷமான முறையில் கோவில் அமைத்து கும்பாபிஷேகம் செய்துள்ளனர்.

ஹனுமான் சஞ்சீவி மலையை ஏந்திச் செல்கையில் அதன் ஒரு பகுதி கீழே விழ, அந்த இடம்தான் நாமக்கல் என்பர்.

இந்த ஹனுமாருக்கு மிகவும் சிறப்பாக திருமஞ்சனம் (அபிஷேகம்) செய்கிறார்கள்.

# ஸ்ரீ ராம பக்த

வளைகளும் ஒலியெழுப்பக் கேட்டார்.

வேறு சில வீடுகளில் வேத மந்திரங்களின் கோஷத்தைக் கேட்டார்.

இன்னும் சில வீடுகளில் யாகதீக்ஷை பூண்டவர்களும், ஜடைமுடி தரித்தவர்களும் இருக்கக் கண்டார். கையில் பலவித ஆயுதங்கள் ஏந்திய அரக்கர்களைக் கண்டார்.

'ஏதடா! சீதையைத் தவிர மற்ற எல்லாவற்றையும் பார்த்தார் போலிருக்கிறதே இந்த ஹனுமார்' என்று நினைக்கத் தோன்றுகிறதல்லவா...?

ஆனால் ஒரு நொடி கூட வீணாக்கவில்லை ராமதூதன். சீதையைத் தேடித் தேடி அலைந்ததில் அவன் கண்ட காட்சிகள்தான் இவை.



**துன்பத்தை அனுபவித்த காலத்தை மறந்து விடு! ஆனால் அது உனக்கு விட்டுச் சென்ற பாடத்தை மட்டும் மறக்காதே!**

**– அல்பேனியப் பழமொழி**

**தகவல்: மலர் சூர்யா**

கும்பகர்ணனின், மாளிகையில் போய்த் தேடினான் ஹனுமான். அங்கே அவன் படுத்து உறங்கிக் கொண்டிருக்க, தேவலோகத்து மங்கையர் அவனுக்குப் பணிவிடை செய்து கொண்டிருந்தார்கள் என்கிறார் கம்பர்!

மாளிகைகளில் மட்டும் தேடவில்லை ஆஞ்சனேயன். மாட்டுத் தொழுவங்களிலும் விடாது தேடினான். யானை, குதிரை கட்டும் இடங்களில்கூட தேடினான்.

*ஆத்துறு சாலை தோறும் ஆனையின்*
*கூடம் தோறும்*
*மாத்துறு மாடம் தோறும் வாசியின்*
*பந்தி தோறும்*

என்பது கம்பர் பாடல்.

இதையேதான் அருணாசலக்கவியும் பாடுகிறார்:

*'தேடித் தேடித் திரிந்தானே*
*சீதா தேவியை அனுமானே'*

என்ற பாடலில்

*'வாரணச்சாலையும் மலர்ச்சோலையும்*
*சாவடிகளும்*
*தோரணமேடையும்"* அவன் தேடினான் என்கிறார். வாரணச் சாலை என்பது யானைத் தொழுவம்!

அது சரி, யானையும் குதிரையும் கட்டும் இடத்திலே போயா சீதையைத் தேடுவது?

இராவணேசுவரன் சீதா தேவியை அப்பேர்ப்பட்ட இடத்திலா கொண்டு சிறை வைப்பான்?

இருக்க வாய்ப்பில்லை என்று முடிவு செய்து ஓரிடத்தையும் விட்டு விடக் கூடாது என்ற முடிவில்தான் செயல்பட்டான் ஹனுமான். இலங்கையில் தான் தேடாத இடமென்று ஒன்றுகூட எஞ்சிவிடக் கூடாது என்கிற வெறி அவனுக்கு. ஸ்ரீ ராமன் இட்ட கட்டளையைக் கருமமே கண்ணாக நிறைவேற்றும் வெறி!

தேடலினூடே விபீஷணன் மாளிகை தென்படுகிறது ஹனுமானின் கண்களுக்கு. அங்கே விபீஷணனைக் காண்கிறான் ஹனுமான். கண்டதுமே அவனுக்குத் தெரிந்து போகிறதாம்... என்ன தெரிந்து போகிறது?

'விபீஷணன் தர்ம வடிவானவன்' என்பது தெரிந்து போகிறது.

சூர்ப்பணகை தன்னை ராமனிடம் அறிமுகம் செய்து கொள்ளும்போது விபீஷணனைத்தான் சொல்லி அறிமுகப்படுத்திக் கொண்டாளாம். ''என் சகோதரன் விபீஷணனாவான். அவன் தர்மம் அறிந்தவன்; ராக்ஷஸர்களின் அரக்க குணம் இல்லாதவன்..."

*விபீஷணஸ்து தர்மாத்மா நது*
*ராக்ஷஸ சேஷ்டித:*

விபீஷணனின் இந்த இயல்பை ஹனுமான் பார்த்தவுடனேயே தெரிந்து கொண்டுவிட்டானாம்-கம்பர் சொல்கிறார்.

'தர்மாத்மாவான விபீஷணன் ஏன் கறுப்பு நிறத்திலிருக்கிறான்?' என்று ஒரு கேள்வியை எழுப்புகிறார் கம்பர்.

தருமமானது வெண்ணிறம் கொண்டது. ஆனால் அரக்கரிடையே வாழும் தர்மவானான விபீஷணன் தன் இயல்பை மறைத்து வாழ வேண்டியிருக்கிறது. அதனால் கருநிறம் கொண்டவனாகவே இருக்கிறானாம்.

## அருள்வாக்கு



"போச்சு போச்சு! கலியில் எல்லாம் போச்சு! ஏதாவது கொஞ்சம் மிச்சமிருந்தாலும் அதுவும் கால க்ரமத்தில் போயே போயிடும். எல்லாம் மிருகப் பிராயமாயிடும்" என்று புராணங்கள் பயமுறுத்துகின்றனவென்றால், நாம் ஆலஸ்யமாக (மெத்தனமாக) இருந்துவிடக் கூடாது என்று எச்சரித்து உசுப்பிவிட்டு உஷார்ப்படுத்துவதற்குத்தான். ரொம்பவும் ஆபத்தாக வர்ணித்தால்தான் நாம் அசைந்து கொடுப்போம் என்பதால்தான்.

'கலிதான் அதர்ம யுகமென்றால் நாம் அதர்மமாகத்தான் இருந்துவிட்டுப் போவோமே!' என்று சொல்வது தப்பு. "திருடர்கள் ஆபத்து ஜாஸ்தி இருக்கிறது" என்று போலீஸ் தண்டோராப் போட்டால் என்ன செய்வோம்? திருடர்கள் வந்து எடுத்துக்கொண்டு போகட்டும் என்று நாமே உடைமைகளைத் தெருவில் போட்டுவிட்டா உட்கார்ந்து கொண்டிருப்போம்? 'காப்பாற்ற முடிகிறவரையில் காப்பாற்றிக் கொள்வோம்' என்றுதானே ஜாக்ரதை செய்து கொள்வோம்? போலீஸ் தண்டோரா போட்டதன் நோக்கமும் இப்படி ஜாக்ரதை செய்து, முடிந்தமட்டும் ரக்ஷித்துக் கொடுப்பதற்குத்தானே? "கலி அதர்ம ஆட்சியை ஆரம்பித்து விட்டான்" என்று சாஸ்த்ரங்கள் தண்டோராப் போடுவதற்கும் தாத்பர்யம், கூடிய மட்டும் தர்மத்தை ஜாக்ரதையாக ரக்ஷித்துக் கொள்வதற்குத்தானே ஒழிய, 'ஒன்றும் பண்ணிக் கொள்வதற்கில்லை' என்று, இருப்பதையும் விட்டுவிட்டு வீணாகப் போவதற்கல்ல.

இந்த யுகத்தில் வரும் அதர்ம ப்ரவாஹத்தை ஒருவன் எதிர்த்து நின்றால்தான் மற்ற யுகங்களில் செய்யும் தர்மாநுஷ்டான பலனை விடக் கோடி மடங்கு பலன் பெறலாம். எதிர்ப்பு உண்டான ஸமயத்தில் தடுத்து நின்றால்தான் பெருமை அதிகம்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய ஸ்வாமிகள்.

அப்படி அவன் கருநிறமாக பிற அரக்கர்கள் போலவே இருந்த போதிலும் ஹனுமானுக்கு அவனைத் தனியே அடையாளம் தெரிந்துவிட்டது என்பதுதான் சிறப்பு.

இன்னும் மஹோதரன், ஜம்புமாலி, தூம்ராக்ஷடிரன், பிருஹஸ்தன், இந்திரஜித் என்று எல்லோரது மாளிகைகளையும் நேரில் போய்ப் பார்த்திருக்கிறான் ஹனுமான்.

கம்பர் தனது கவிதா ரசனையை ஹனுமான் பேரில் ஏற்றிச் சொல்வது கூட அழகாகத்தானிருக்கிறது.

இந்திரஜித்தைப் பார்த்ததும் அசந்து போனானாம் ஆஞ்சநேயன். ஆறுமுகங்களும் பன்னிரு கரங்களும் உடைய முருகப் பெருமானே இந்திரஜித் வடிவாக- ஒரு முகம் இரு கரங்களுடன் அவதரித்து விட்டாரோ? என்று வியக்கிறானாம்.

ராவணன் மாளிகைக்கும் செல்கிறான் ஹனுமான்.

வெள்ளியால் செய்யப்பட்ட சித்திரங்கள் என்ன? தங்கத்தால் அலங்கரிக்கப்பட்ட தோரணங்கள் என்ன? பலவிதமான கட்டுகள் வாசல்படிகள் இவற்றோடு ரத்தினம் பதித்த ஆசனங்கள் என்ன... என்று அந்த அரண்மனை ஜொலிக்கிறது. உத்தம ஸ்த்ரீகள் அதனுள்ளே வளைய வருகிறார்கள்.

வானர சிரேஷ்டனான ஹனுமான் அங்கே ஓர் அற்புதத்தையே காண்கிறான்.

- ரத்தினங்களாலும் மணிகளாலும் அலங்கரிக்கப்பட்ட மிக அழகான புஷ்பக விமானத்தைக் காண்கிறான்.

அந்த புஷ்பக விமானத்தின் சிறப்பை இரண்டு சர்கம் வர்ணிக்கிறார் வால்மீகி.

அப்படிப்பட்ட புஷ்பக விமானத்தில் ஏறி ஆராய்ந்து, கூர்ந்து பார்க்கிறான் ஹனுமான்.

அந்தக் கணத்திலே ஓர் அதிசயம் நடந்தது. ராவணனின் பல அதர்ம காரியங்களுக்குப் பயன்படுத்தப்பட்டுக் களங்கமுற்றிருந்த புஷ்பக விமானம், பரம பாகவதோத்தமனான ஹனுமானின் பாதம் பட்டுப் புனிதம் அடைந்தது!

அங்கிருந்து ராவணனின் அந்தப்புரத்துக்குள் நுழைந்த ஹனுமான் அப்படியே ஸ்தம்பித்து நின்றான்.

(வளரும்)

# பொன்னியின் செல்வன்

## பூர்வகதை

**அமரர் கல்கி**




ன்றைக்குச் சுமார் ஆயிரத்து நூறு ஆண்டுகளுக்கு முன்பு விஜயாலய சோழன் இரண்டாவது சோழ சாம்ராஜ்யத்துக்கு அடிகோலினான். சோழ நாட்டின் சேனா வீரர்கள் நாலு திசைகளிலும் படை எடுத்துச் சென்று வெற்றிக்கு மேல் வெற்றி அடைந்து சோழ சாம்ராஜ்யத்தின் எல்லையை விசாலப்படுத்தி வந்தார்கள். சுந்தர சோழ சக்கரவர்த்தியின் காலத்தில் மதுரைப் பாண்டிய குலத்தின் கடைசிப் பிரதிநிதியான வீரபாண்டியன் கொல்லப்பட்டான். பாண்டிய நாடு சோழ சாம்ராஜ்யத்தில் முற்றிலும் ஐக்யம் அடைந்தது.

சுந்தர சோழ சக்கரவர்த்தியின் மூத்த புதல்வனும் வீர பாண்டியனுடைய தலைகொண்டவனுமான ஆதித்த கரிகாலன் சோழ சாம்ராஜ்யத்தின் பட்டத்து இளவரசனாக முடி சூட்டப் பெற்றான். வடதிசைச் சைன்யத்துக்கு மாதண்ட நாயகனாகிக் காஞ்சியைத் தன் இருப்பிடமாகக் கொண்டான். காஞ்சியில் புதிதாகப் பொன் மாளிகை கட்டித் தன் தந்தையை அங்கு வந்து இருக்க வேண்டுமென்று வேண்டிக்கொண்டு, பழைய வாணர் குடியில் பிறந்த வந்தியத்தேவன் என்னும் வீரனிடம் ஓலை கொடுத்து அனுப்பினான்.

சுந்தர சோழ சக்கரவர்த்தி அரண்மனையில் பாரிச வாயுவினால் பீடிக்கப்பட்டு நடமாட்டமின்றிப் படுத்த படுக்கையாக இருந்தார். உடல் நோயைக் காட்டிலும் அதிகமாக மன நோயினால் சுந்தர சோழர் பீடிக்கப்பட்டிருந்தார்.

இளம் பிராயத்தில் ஈழ நாட்டை அடுத்திருந்த ஒரு சிறு தீவில் சுந்தர சோழர் தங்கியிருக்க நேர்ந்தபோது கரையர் குலத்தைச் சேர்ந்த ஊமைப் பெண் ஒருத்தியினால் கரடியின் வாயிலிருந்து காப்பாற்றப்பட்டார். அந்தப் பெண்ணிடம் காதல் கொண்டார். சில காலம் இருவரும் அத்தீவில் ஆனந்த

# ஜெயில் உடைத்தால் ஒன்றரை லட்சம் டாலர்!

இங்கே டீ.வி.யில் கேள்வி கேட்டு, பதில் சொன்னால் கோடீஸ்வரர் ஆகலாம். ஆனால் பிரிட்டிஷ் டீ.வி. சானல்களுக்கோ இதெல்லாம் பழசு. அங்கே லேட்டஸ்ட் பரபரப்பு என்ன நிகழ்ச்சி தெரியுமா? 'ஜெயில் உடைப்பு'

'ஆம்! செயற்கையாக ஒரு ஜெயிலை உருவாக்கி அதில் போட்டியாளர்களை அடைத்து வைத்திருக்கிறார்கள். ஓய்வு பெற்ற ஜெயில் உயர் அதிகாரி தலைமையில் முப்பது பேர் கொண்ட ஒரு குழு, அதனை காவல் காக்கும். ஜெயிலுக்குள் இருப்பவர்கள், காவலை மீறி தப்பிக்க வேண்டும். தப்பித்து விட்டால் பரிசு ஒன்னரை லட்சம் டாலர்!



ஜெயிலுக்குள் ஒரு லைப்ரரியும், அங்கே ஒரு கம்ப்யூட்டரும் உண்டு. ஜெயிலுக்குள் இருப்பவர்கள் தினம் முக்கால் மணி நேரம் கம்ப்யூட்டரை உபயோகப்படுத்திக் கொள்ளலாம்.

இந்த வசதியைப் பயன்படுத்திக் கொண்டு, போட்டியில் பங்கேற்க ஜெயிலுக்குள் இருப்பவர்களுடைய நண்பர்கள், ஜெயிலிலிருந்து தப்பிக்க ஐடியாக்களை ஈமெயில் மூலம் அனுப்பலாம்.

தப்பிக்கிறபோது, மாட்டிக்கொண்டு விட்டால், போட்டியில் தோல்வி அடைந்ததாகச் சொல்லி, தனிமைக் கொட்டடியில் இருபத்துநாலு மணிநேரம் அடைத்து வைத்து விடுவார்கள்!

நம் ஊர் சேனல்கள் இன்னும் இதைக் காப்பியடிக்காதது ஏன் என்றுதான் தெரியவில்லை.

— எம்

ஒவ்வொரு மெயில்லேயும் தலை சுத்தல், சாப்பாடு இறங்கலேயின்னு ஏதேதோ எழுதிக்கிட்டேதான் இருக்கா. நீங்களான்னா ஐயாம் ஓ.கே., ஆர் யூ ஓ.கேயின்னு மொட்டையா பதில் கொடுத்துட்டே இருக்கீங்க... ஆபீஸ் மேட்டரானாலும், குடும்ப விஷயமானாலும் ஒரு 'பர்ஸனல் டச்' இருந்தாத்தான் நல்லா இருக்கும்...''

''யூ மீன் டச் தெரபி?''

அவன் கேட்க – அவள் சிரிக்க...

''மே ஐ கம் இன் சார்...''

உன்னி மேரிதான். கையில் கனத்த ஃபைல். அதை விடவும் கனமான சரீரத்துடன் முகமெல்லாம் சிரிப்பாக உள்ளே நுழைந்தாள்.

''அதான் ஏற்கெனவே உள்ளே வந்துட்டீங்க. அப்புறம் என்னத்துக்கு வரட்டுமான்னு கேள்வி வேற. வாங்க...''

அஜய், அவளது கையிலிருந்த காகிதங்களில் மூழ்கி இருக்க – ப்ரீதி, அப்பொழுதே தீர்மானித்து விட்டாள்:

'சரிதான். இவ போய், வெளில இருக்கற அத்தனை பேர்கிட்டேயும் 'பர்ஸனல் டச் – டச் தெரபி'யின்னு பேசப் போறா... இன்னி பொழுதுக்கு இது ஆச்சு...'

நினைக்கும்போதே கோபம் வந்தாலும், கூடவே ஏதோ ஒருவிதமான... ஒரு விதமான 'இது' இருப்பது போல அவளுக்குள்...

அந்த இது... அது என்ன?

சீனுவாச ராகவன் சொல்வது போல – 'இது'தான் காதலா...

ப்ரீதி, இது எதுவுமே அறியாமல், அப்பாவியாய் உன்னிமேரியின் ஃபைலில் விழி பதித்திருக்கும் அஜய்யைப் பார்த்தாள்.

இப்பொழுது கூட அந்தப் பாழாய்ப் போகிற கொசு அவனது புறங்கழுத்தில்...

'அச்சோ... எத்தனை சுவாரஸ்யமா உட்கார்ந்து ரத்தத்தை உறிஞ்சறது இந்த சனியன்...'

அவள், தன்னை மறந்து – உன்னி மேரியை மறந்து, அஜய்யின் புறங்கழுத்தில் 'பட்'டெனத் தட்டினாள்!

(தொடரும்)

ஜெம் அன்ட் ஜுவல்லரி எக்ஸ்போர்ட் ப்ரமோஷன் கௌன்சிலின் தலைமைப் பதவிக்குத் புதிதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார் சஞ்சய் கோத்தாரி. மும்பையில் டயமண்ட் ப்ளாசாவின் ஐந்தாம் மாடியில் சந்தித்தோம் அவரை.

"இந்தியாவிலிருந்து தங்க நகைகள் ஏற்றுமதி நாங்கள் எதிர்பார்த்ததற்கு மேலாகவே இருக்கிறது. அரசின் தாராளமயமாக்கலும், எங்கள் ஏற்றுமதியாளர்களின் உழைப்புமே இவற்றுக்குக் காரணம்!" என்கிறார் சஞ்சய் கோத்தாரி.



"உலகில் பத்து வைரங்களில் ஒன்பது இந்தியாவில்தான் வெட்டிப் பட்டை தீட்டப்படுகிறது. உலகிலேயே எங்கும் இல்லாத அளவுக்கு, பத்தாயிரம் டைமன்ட் கட்டிங் யூனிட்டுகள் இயங்குகின்றன. பத்து லட்சம் பேர் நேரடியாகவும், மறைமுகமாகவும் இந்தத் தொழிலால் பயன் அடைகிறார்கள். உலகெங்கும் 2000 இந்திய அலுவலகங்கள் இருக்கின்றன. ஆன்ட்வெர்ப், நியூயார்க், ஜப்பான், தெற்காசிய நாடுகள் எல்லாவற்றிலும் நடக்கும் வைர வர்த்தகப் பேரங்களில் இந்தியப் பங்களிப்பு கணிசமானது" என்கிறார் சஞ்சய்.



"வைரத் தொழிலில் இந்தியாவுக்கு வேறென்ன சிறப்பு?"

"சின்ன வகை வைரங்களை யாரும் வாங்க மாட்டார்கள். கட் செய்து பாலிஷ் பண்ண இவற்றுக்குச் செலவழிக்கும் பண

# ஜனநாயகமாகிவிட்ட

மும் நேரமும் வீண் என்று ஒரு கருத்து உலகம் முழுக்க இருந்தது. இந்தியாதான் இந்த எண்ணத்தை மாற்றியது. சிறிய வைரங்களைச் சாதாரண மக்களும் வாங்க முன்வருவார்கள் என்று நிரூபித்தவர்கள் நாம். கட்டிங்கிலும் பாலிஷிங்கிலும் நமது அதிக பட்சத் திறமையை நிலை நாட்டிய உடன், பெரிய வைரங்களை பிராசஸ் செய்யும் பணியும் நம்மிடமே வந்தது. ஒரு De Beers டைரக்டர் என்ன சொன்னார் தெரியுமா? இந்தியா வைரத்தை அதிக மக்களிடையே கொண்டு சென்று ஜனநாயகமயமாகி விட்டது என்றார்."

"லேசர் டெக்னாலஜி, கம்ப்யூட்டர் வசதி, ஷேப்பிங் செய்வதற்குத் தேவையான நவீன லேத்துகள் எல்லாம் இன்று இந்திய வைரத் தொழிற் சாலைகள் பலவற்றில் வந்து விட்டன. ஏற்றுமதியிலும், பலவிதமான டிசைன்கள் உருவாக்குவதிலும் நாம் பெருமைப்படக் கூடிய இடத்தில் இருக்கிறோம்.

"ஆனால் ஏற்றுமதி புள்ளி விவரங்களைப் பார்த்தால் இந்தியாவின் மேற்குப் பகுதி செய்கிற ஏற்றுமதியை விட, தெற்கேயிருந்து குறைவாகத்தான் இருக்கிறது. தெற்கே டிசைன்கள் உலகத் தரத்துக்கு இல்லையோ?"

"அதல்ல காரணம். தெற்கே, உள்நாட்டு

மார்க்கெட்டே பலமாக இருக்கிறது. முதலில் அதன் தேவையைப் பூர்த்தி செய்ய வேண்டி இருக்கிறது. மீதிதான் ஏற்றுமதிக்கு."

மும்பை, டில்லி, ஜெய்ப்பூர், சூரத் ஆகிய நகரங்களில் ஜுவல்லரி பிராடக்ட் டெவலப்மென்ட் மையங்கள் தொடங்கப் பட்டிருக்கின்றன. இங்கே நவீன வகைப் பயிற்சிகள் கொடுக்கப்பட்டு வருகின்றன. சர்வதேச நகைகள் பயிற்சி மையம் இந்தியாவில் விரைவிலேயே அமைக்கப்பட இருக்கிறது.

"உங்கள் அமைப்பில் எத்தனை ஏற்றுமதியாளர்கள் இருக்கிறார்கள்?"

"1996ல் ஆரம்பிக்கப்பட்ட இந்த அமைப்பில் 7000 உறுப்பினர்கள் அங்கம் வகிக்கிறார்கள். நம்முடைய தயாரிப்புக்களின் விலை குறைச்சல் என்று மட்டுமே பிறர் அறிந்தால் போதுமா? பல வெளிநாடுகளில் பொருட்காட்சிகள் நடத்தி எங்கள் தரமும் வேலைப்பாடுகளும்கூட உயர்ந்தவைதான் என்று காண்பித்து வருகிறோம்."

# வைரம்!

செப்டெம்பர் மாதம் மும்பையில் நடைபெற்ற இந்தியா இன்டர்நேஷனல் ஜுவல்லரி ஷோவில் 150 மிகப் பெரிய வணிகர்கள் பங்கெடுத்துக் கொண்டனர். அமெரிக்கா, இங்கிலாந்து, ஜெர்மனி, எமிரேட்ஸ் என்று 110 அயல்நாட்டு வணிகர்கள் வந்து பெருமைப் படுத்தினார்கள். 10,000 உள்நாட்டு வாடிக்கையாளர்கள் போட்டி போட்டுக் கொண்டு ஆபரணங்களை வாங்கிக் கொண்டு போனார்கள்.

கருத்தரங்கங்கள், செயல் விளக்கங்கள் எல்லாவற்றுக்கும் பயங்கரக் கூட்டம்! வைரத்தைச் சுத்தப்படுத்தும் அதி நவீனக் கருவியைக் கொண்டு, எட்டு மணி நேரத்தில் சுத்தம் செய்யும் வைரத்தை பத்தே நிமிடங்களில் பளபளவென்று பளிச்சிட வைத்தார்கள்!

ஏராளமான இளைஞர்களும் இளைஞிகளும் பார்வையாளர்களாக வந்திருந்ததைப் பயன்படுத்திக் கொண்டு, ஜுவல்லரி பிராடக்ட் டெவலப்மென்ட் மையமும், ஜெம் டெஸ்டிங் பரிசோதனை அமைப்பும், இன்டியன் ஜெம்மலாஜிகல் இன்ஸ்டிட்யூட்டும், இந்தத் துறையில் இருக்கும் வேலை வாய்ப்புக்களை எடுத்துச் சொன்னார்கள்.

"உங்கள் எதிர்காலத் திட்டங்கள் என்ன?" என்று சஞ்சய் கோத்தாரியை விசாரித்தோம்.

"வைரத்தைப் பொறுத்தவரை பல வெளிநாட்டு நிறுவனங்கள் இந்தியாவில் அலுவலகங்கள் திறக்க ஆர்வம் காண்பித்து வருகிறார்கள். சிலர் திறந்தும் விட்டார்கள். அரசாங்கத்துடன் இணைந்து இவர்கள் வசதியாகச் செயல்படத் தகுந்த சூழ்நிலையை உருவாக்கி வருகிறோம். உலகச் சந்தையில் இந்திய ஆபரணங்களுக்கு இன்னும் கூடுதலான இடம் பிடிக்க முயலுவோம். இதற்கு ஏற்றவாறு பொற்கொல்லர்களுக்குப் பயிற்சி அளிக்கவும், புதிய புதிய டிசைன்களை உருவாக்கவும் ஆவன செய்யப் போகிறோம். இது கம்ப்யூட்டர் புரட்சிக் காலம். ஈ-காமர்ஸ் வசதியை அங்கத்தினர்கள் பயன்படுத்த ஆவன செய்வோம்."

இந்தியா ஏற்றுமதி செய்யும் ஆபரண நகைகளின் மதிப்பு 18,321 கோடி ரூபாய். இதற்கு அடுத்தபடிதான் எஞ்சினீயரிங் கருவிகள் (13,992 கோடி ரூபாய்). அதற்கடுத்த நிலையில் ரெடிமேட் ஆடைகள் (13494 கோடி ரூபாய்). இது 96-97ஆம் ஆண்டு புள்ளி விவரம்.

இப்போது இதை எல்லாம் தாண்டிப் போய்விட்டது நமது ஆபரண நகைகள் ஏற்றுமதி மதிப்பு!



# இனி என்ன செய்வது?

நீங்கள் இந்தக் கதையைப் படிக்கப் போகிறீர்களா?

சற்றுப் பொறுங்கள்!

கதையின் கடைசிப் பாராவில் வருகிற இரண்டு கேள்விகளுக்கு நீங்கள் பதில் சொல்ல வேண்டும். சம்மதமானால் கதையைப் படியுங்கள். கதையைப் படித்தால் தானே, கடைசியில் வரும் கேள்விகளுக்குப் பதில் சொல்ல முடியுமா? முடியாதா என்பது தெரியும் என்று சொல்கிறீர்கள்? உண்மைதான்! படியுங்கள். ஆனால் என்னைப் போலவே கடைசியில் "இனி என்ன செய்வது?'' என்று குழப்பத்தோடு நிற்கப் போகிறீர்கள்!

பெங்களூரில் வாழ்பவர்கள் ரொம்பக் கொடுத்து வைத்தவர்கள்! தமிழ்நாட்டில் மதுரைக்குத் தெற்கே வாழும் என் நண்பன் சுந்தரேசன் அடிக்கடி சொல்லும் வாக்கியம் இது. நானும் கொடுத்து வைத்தவன்தான். பிறந்து வளர்ந்தது பெங்களூரில். என் தகப்பனாருக்கு நான் ஒரே பையன். செல்லமாக வளர்த்தார். சிறு வயதிலேயே என் தாய் நோயின் கொடுமைக்குப் பலியானாள். அந்தச் சோகம் மறக்க நாட்கள் பலவாயிற்று. கல்லூரியில் நான் படித்த காலம் பொற்காலம். என் மாமா மகள் மல்லிகாவுடன் மனமொன்றிப் பழகியதும், மாலை நேரங்களில் அவளுடன் மகிழ்ச்சியாக மணிக்கணக்கில் பேசியதும், "அத்தான், அத்தான்'' என்று அவள் என்னையே சுற்றிச் சுற்றி வந்ததும், மறக்க முடியாத மகத்தான நாட்கள்! மாமா என்னைப் பார்க்கும் போதெல்லாம் ''மாப்பிள்ளே எப்ப கல்யாணத்தை வச்சுக்கலாம்? என்று பிரியத்துடன் கேலியாகக் கேட்பார்.

மல்லிகா - எனக்கென்றே பிறந்தவள். என்னைப் பொறுத்தவரை அவள்தான் எனக்கு ஐஸ்வர்யாராய், சுஷ்மிதா சென் எல்லாம்.

சொல்ல மறந்து விட்டேனே! என் அப்பா முதலில் ஒரு பெரிய கம்பெனியில் மானேஜராக பணி புரிந்தார். வெள்ளைக்காரன் கம்பெனி,

ஆனால் அப்பாவுக்கு நேரம் சரியில்லை. திடீரென்று அவர் வேலை பார்த்த வெள்ளைக்காரன் கம்பெனி மூடப்பட்டது. அப்பாவுக்கு வேலை போய்விட்டது. ஏற்கெனவே அப்பா எல்.ஐ.ஸி ஏஜென்ஸி எடுத்திருந்தார். ஷேர்களும் வாங்கி விற்கப் பழகி இருந்தார். எனவே கொஞ்ச நாட்களில் நல்ல ஷேர் புரோக்கராக மாறிப் போனார். எதிர்பாராவிதத்தில்



அப்பாவுக்குச் சந்தர்ப்பங்கள் சாதகமாக, பணம் தாராளமாய்ப் புழங்கியது. என்னைக் கல்லூரியில் நன்றாகப் படிக்க வைத்துப் பட்டதாரியாக்கினார். நான் மல்லிகாவின் மயக்கத்தில் வேலை கூடத் தேடவில்லை. காலம் தான் அப்படியே இருக்கிறதா? மாறுகிறது அல்லவா?

அப்பாவின் ஷேர் பிஸினஸ் முன்பு மாதிரி இல்லை. திடீரென்று நஷ்டங்கள். அவர் திகைத்துப் போனார். ஷேர் மார்க்கெட் நிரந்தர பிஸினஸ் அல்ல என்பதை

புரிந்துகொண்டபோது, நிலைமை சிக்க லாகிப் போயிருந்தது. உண்மையைத் தெரிந்து கொண்டபோது, ஒருநாள் மாலை அவருக்கு நெஞ்சு வலித்தது. நான் டாக்டரை வரவழைத்தேன். ஆஸ்பத்திரியில் சேர்க்கச் சொன்னார். மாரடைப்பால் அவர் பாதிக்கப்பட்டார் என்பதை என்னால் முதலில் நம்ப முடியவில்லை. டாக்டர் மிகவும்



திறமையுடன் சிகிச்சை செய்து, எச்சரிக்கையுடன், வீட்டுக்கு அனுப்பி வைத்தார். அப்பாவுக்குக் கவலை வந்துவிட்டது. என்னைக் கூப்பிட்டு பிரியமாய்ப் பேசினார். "உனக்குக் கல்யா ணம் செய்து பார்த்த பின்புதான் நான் கண் மூடுவேன்" என்றார். உடனே வேலை தேடத் தொடங்கினேன். பேப்பர்களில் வரும் வேலை காலி விளம்பரத்திற்கு விண்ணப்பங் களை சரமாரியாக அனுப்பி வைத்தேன். இண்டர்வியூக்களுக்கும் அவ்வப்போது போய் வந்தேன். மனிதர்கள் எப்படியெல் லாம் நாடகமாடுகிறார்கள் என்பதை அப் போதுதான் புரிந்து கொள்ள ஆரம்பித்தேன்.

அப்பாவை ஒருநாள் மாமா பார்க்க வந்தார். மல்லிகாவும் உடன் வந்தாள். புன்னகைத்தாள். மாமா இப் போது மாறியிருந்தது அவர் முறைப்பில் தெரிந்தது. அளவாகப் பேசினார். "அப் பாவை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள். சீக்கிரம் ஒரு வேலையில் அமரப் பார்! சிக்கனமாக வாழ்க்கையை நடத்து" என்று உபதேசம் செய்தார்.

கல்யாணப் பேச்சை அப்பா எடுத்த வுடன், மாமா "இல்லையப்பா, மல்லி காவுக்கு நல்ல வரன் பார்த்து விட்டேன்; கம்ப்யூட்டர் எஞ்சினீயர், கை நிறையச் சம்பளம். அடுத்த மாதம் கல்யாணம் முடிந்தவுடன் அமெரிக்கா போகிறான், மல்லிகாவின் அம்மாவுக்குச் சொந்தமும் கூட, நான் ஒன்றும் செய்ய முடிய வில்லை" என்று மழுப்பலாக மறுப்புச் சொல்லி, மாமா மல்லிகாவுடன் நழுவி விட்டார்.

அப்பாவின் முகம் இருண்டு போயிற்று. அவர் இதைச் சுத்தமாக எதிர்பார்க்க வில்லை என்று தெரிந்தது. அடுத்த ஹார்ட் அட்டாக் இதனால் வந்து விடக்கூடாதே என்று நான் கவலைப் பட்டேன். அப் பாவின் உடல்நிலையும், மன நிலையும் நாளுக்கு நாள் மோசமாகி வந்தது. ஒருநாள் மாலை மிகவும் சீரியஸாகி, நான் ஆட்டோ பிடித்து உடனே அப்பாவுக்குத் தெரிந்த டாக்டரின் நர்ஸிங் ஹோமில் சேர்த்தேன். பலவித சோதனைகள் செய்து பார்த்த டாக்டர், என்னிடம் அமைதியாகச் சொன் னார். "உன் அப்பாவின் இதயத்தில் ஒரு பிராப்ளம்! ஒரு ஆபரேஷன் செய்தால் சரியாகிவிடும், முதலில் ஒரு இருபதாயிரம் தயாராய்க் கொண்டு வா. பூரண குணமாக ஐம்பதாயிரம் வரை ஆகலாம்" என்றார்.

அப்பாவுக்கும் வருமானம் நின்று போய், இருப்பதெல்லாம் காலியாகிக் கொண்டிருந் தது. பாங்கில் எவ்வளவு மீதி இருக்கிற தென்று இனிமேல்தான் பார்க்க வேண்டும். கவலை என்றால் என்னவென்பதை அன்றி லிருந்து நான் அனுபவிக்க ஆரம்பித்தேன். மாமாவிடம் போய்க் கடன் கேட்டுப் பார்த் தால் என்ன?

**இராஜபாளையம் கதைப்பித்தன்**

மாமாவை வீட்டில் எளிதாகப் பார்க்க முடியவில்லை. அவர் மல்லிகா கல்யாண ஏற்பாட்டில் மும்முரமாக மூழ்கி இருந்தார். என்னை அவர் எதிர்பார்க்கவில்லை என்பது அவரது பார்வையில் தெரிந்தது.

"என்ன?" என்றார் இறுக்கமான முகத்துடன்.

விஷயத்தைச் சொல்லிவிட்டு, "ஒரு ஐம்பதாயிரம் கடனாகக் கொடுத்தால் கொஞ்சம் கொஞ்சமாய் நான் வேலை பார்த்துக் கொடுத்து விடுகிறேன்" என்று நான் கூறவும், மாமா சிரித்தார்.

"அதெல்லாம் நடக்கிற காரியமாப்பா, இனிமேல் உன்னையோ, உன் அப்பாவையோ நம்பி கடன் கொடுக்க நான் தயாரில்லை. வேண்டுமென்றால் ஆயிரமோ, இரண்டாயிரமோ வாங்கிக் கொண்டு போ! திருப்பித் தர வேண்டாம், எனக்குக் கல்யாண வேலைகள் தலைக்கு மேல் இருக்கிறது. அப்புறம், இங்கு இனிமேல் போக வர, பழக்கம் எல்லாம் வைத்துக் கொள்ளாதே, மாப்பிள்ளை வீட்டார் தப்பாக நினைப்பார்கள்! என்ன, தெரிகிறதா?" என்று எச்சரித்துவிட்டு உள்ளே போய்விட்டார். இடிந்து போன நான் தளர்ந்த நடையில் வெறுங்கையுடன் வீட்டுக்கு வந்தேன். அப்பாவிடம் மாலையில் போய் இதை வருத்தத்துடன் புலம்பித் தீர்த்தேன். அப்பாவும் மாமா இவ்வளவு மாறிப் போய் விடுவார் என்று எதிர்பார்க்கவில்லை. பாவம்!

கடைசியில் அப்பாவுக்கு மிகவும் நெருங்கிய நண்பர்களிடம் கேட்டுப் பார்த்தும் பணம் கொஞ்சம்தான் கிடைத்தது. வீட்டை அடமானம் வைத்து, பாங்கில் கடன் வாங்கி ஆபரேஷனுக்குப் பணத்தைக் கட்டினேன். அடுத்து இரண்டு நாள் கழித்து ஆபரேஷன் நடக்க இருப்பதாக டாக்டர் கூறினார். இதற்கிடையில் அப்பாவின் உடல் மனக் கவலைகளால் மேலும் மோசமாக, டாக்டர் சொன்னார். "அப்பாவின் உடல் இப்போது எதிர்பார்த்ததைவிட மோசமாகி விட்டது. எதற்கும் நெருங்கிய சொந்தக்காரர் காரர்களுக்குத் தகவல் கொடுத்து விடு. அப்பாவின் உயிருக்கு எந்த நேரமும் ஆபத்து நேரலாம்." டாக்டர் சொல்லவும் சங்கடத்தோடு நான் கேட்டுக் கொண்டேன். டாக்டர் போனதும், அப்பா என்னிடம் சொன்னார். "சொந்தக்காரர்கள் யாருக்கும் நீ சொல்ல வேண்டாம். மாமாவுக்குக் கூட நான் இறந்துவிட்டால் தகவல் கொடுக்க வேண்டாம். யாரையும் கூப்பிட மாட்டேன் என்று சத்தியம் செய்!" என்றார். வேறு வழியின்றி சத்தியம் செய்தேன். "நான் இறந்து போய் மயானம் போகும்போது என் மார்பு மேல் நான் எப்போதும் உபயோகிக்கும் சந்தனக் கலர் டர்க்கி டவலை போர்த்தி விடு. சமீபமாய் நான் உபயோகிக்கும் வாக்கிங் ஸ்டிக்கையும் எரித்து விடு" என்று அப்பா கேட்டுக்கொண்டார். அப்பாவின் பேச்சும் பார்வையும் சரியில்லாமல் எனக்குப் பட்டது. வரசித்தி விநாயகரை கடைசியாய் ஒருமுறை அப்பாவைக் காப்பாற்றிப் பிழைக்க வைக்கும்படி வேண்டிக் கொண்டேன்.

அடுத்தநாள் மத்தியானம் உற்சாகமிழந்த குரலில் என்னை நேரே பார்க்க முடியாமல் "ஐயாம் சாரி, அப்பா காலமாகி விட்டார்" என்று டாக்டர் சொன்னதும் நம்பவே முடியவில்லை. அழுகை கூட எனக்கு வரவில்லை. அப்படியே திக் பிரமை பிடித்துப் போய் உட்கார்ந்திருந்தேன். அப்போது வராந்தாவைத் தாண்டி இருந்த பெஞ்சில் உட்கார்ந்திருந்த ஒருவன் என்னருகே வந்தான். "என்ன சார்! ஒரு மாதிரி சோகமாய் இருக்கிறீர்கள், யாரையும் சேர்த்திருக்கிறீர்களா?" என்று விசாரித்தான். நான் அவனிடம் எந்திரத்தனமாக, "ஆமாம், என் அப்பா காலமாகிவிட்டார்!" என்று சொல்லிவிட்டு விம்ம ஆரம்பித்தேன். "அழாதிங்க சார், அடுத்து ஆக வேண்டியதைப் பாருங்க" என்றபடி ஆறுதலாக நகர்ந்து சென்றான்.

டாக்டர் மீண்டும் என்னருகில் வந்தார். "நீங்கள் ஆம்புலன்ஸுக்குப் போன் செய்து வரச் சொல்லுங்கள். அப்பாவின் உடலை மின்சார மயானம் கொண்டு செல்ல வேண்டும். அதற்கு முன் என் ஆபீஸ் அறைக்கு வந்து சர்டிபிகேட் வாங்கிக் கொண்டு செல்லுங்கள். அது இல்லாவிட்டால் மயான வாட்ச்மேன் உடலை எரிக்க மாட்டான். கவலைப்பட்டு இனி பிரயோஜனமில்லை! என்ன? போன் செய்துவிட்டு

**"ஏன் ஸ்பூன்ல சாப்பிடறீங்க? கைல ஏதாவது காயமா?"**

**"இல்ல, என் மனைவி கூட சண்டை. அவ செய்த சமையலைத் தொடமாட்டேன்னு சவால் விட்டிருக்கேன்."**

**– வந்தவாசி பா. ஜெயக்குமார்**

வாருங்கள்! என்றபடி தன் ஆபீஸ் அறைக்குச் சென்றார்.

அப்பாவின் மரணத்தை ஜீரணிக்க முடியாமல் நான் அசதியுடன் எழுந்து ஃபோன் செய்யுமிடத்திற்குச் சென்றேன். அங்கே இரண்டு மூன்று பேர் ஃபோன் செய்யக் காத்திருந்தார்கள். என்னிடம் சற்று முன்பு விசாரித்த அந்தக் கட்டம் போட்ட சட்டைக்காரனும் காத்திருந்தான். அவன் என்னைப் பார்த்ததும், "என்ன சார்! போன் செய்யணுமா? சொந்தக்காரர்கள் யாரும் வரணுமா" என்றான், பரிவுடன். நான் உடனே "இல்லைப்பா, ஆம்புலன்ஸ் மட்டும் வந்தால் போதும். உடலை மயானத்திற்குக் கொண்டு போக வேண்டும் என்றேன்.

"என்ன சார், தனியாக நீங்கள் மட்டும் எப்படி உடலைக் கொண்டு போய் மயானத்தில் எரிப்பீர்கள், கூட ஆள் ஒருத்தராவது வேண்டாமா? உறவினர்கள் இல்லையா"?



என்றான்.

"நான் மட்டும்தான்" என்றதும், "அப்ப, நீங்க முதல்ல ஃபோன் செய்துக்குங்க சார்! நானும் அதுக்குதான் வந்தேன். என் சித்தப்பா காலமாகி விட்டார் சார்" என்றான். நான் கேட்டுக் கொண்ட ஆம்புலன்ஸ் கொண்டு வர டாக்டர் சொன்ன நம்பருக்குப் போன் செய்தேன். அங்கே எல்லா வண்டிகளும் வெளியே போயிருப்பதாகவும், வந்தவுடன் உடனே அனுப்பி வைப்பதாகவும் பதில் சொன்னார்கள். கட்டம் போட்ட சட்டைக்காரன் "தகனம் செய்ய கடிதம் வாங்கி விட்டீர்களா, சார்? என்று விசாரித்தான்.

"இனிமேல்தான் வாங்க வேண்டும், நல்லவேளை ஞாபகப்படுத்தினீர்கள்" என்றபடி டாக்டர் அறைக்குச் சென்று அந்தக் கடிதத்தை வாங்கி வந்தேன். அதில் என் தகப்பனார் பெயர் எழுதி இன்ன வியாதியால் எப்போது இறந்தார் என்று விவரம் எழுதி ஆஸ்பத்திரி சீல் அடித்து டாக்டர் கையெழுத்து போட்டிருந்தார். இனி ஆம்புலன்ஸ் வர வேண்டும். வந்தால் உடனே மின்சார மயானத்திற்குக் கிளம்ப வேண்டியதுதான்.

வராந்தாவில் போய் காத்திருந்தேன். கட்டம் போட்ட சட்டைக்காரன் அப்போதுதான் எங்கோ போய் விட்டு வந்தான். "இன்னும் ஆம்புலன்ஸ் வரவில்லையா சார்?" நானும் ஒரு வண்டிக்குத்தான் சொல்லியிருக்கிறேன். என் உறவினரும் வரவில்லை" என்றபடி என்னருகில் உட்கார்ந்தான்.

"சார், மணி ஐந்தாகப் போகிறது. சீக்கிரம் மயானம் கொண்டு போனால்தான் இன்றைக்குத் தகனம் செய்யலாம். இல்லாவிட்டால் நாளை காலைதான்" என்று சொல்லிக் கொண்டிருக்கும்போதே, நல்ல வேளையாக ஆம்புலன்ஸ் வண்டி உள்ளே நுழைந்தது. கட்டம் போட்ட சட்டைக்காரன் உதவிக்கு உடன் வந்தான். நான் என் தகப்பனார் உடலை மெல்ல கூடப் பிடித்து ஆஸ்பத்திரி ஊழியருடன் சேர்ந்து தூக்கி வந்து ஆம்புலன்ஸ் வண்டியில் வைத்தேன். அப்பாவின் மார்பின் மேல் சந்தனக் கலர் டர்க்கி டவலைப் போர்த்தினேன். அவர் கடைசி ஆசைப்படி அவர் வாக்கிங்ஸ்டிக்கையும், அவரருகில் வைத்தேன். கட்டம் போட்ட சட்டைக்காரனுக்கு 'ரொம்பத் தாங்க்ஸ்' என்றேன். அவன் "பரவாயில்லை சார்" என்று முறுவலித்தான்.

பாதி தூரம் சென்றிருப்போம். வழியில் ஒரு வளைவான இடம். ரோடு மேடும் பள்ளமுமாய், பக்கத்தில் செடி கொடிகள் நிறைந்து இடைஞ்சலாய் இருந்தது. அதைக் கடக்கும்போது வளைவின் அந்தப் பக்கத்திலிருந்து வந்த ஒரு வேன் மீது இலேசாக ஆம்புலன்ஸ் மோதி நின்றது. நான் பதற்றத்துடன் கீழே இறங்கும்போது தான் என் நெற்றி மோதிய வேகத்தில் வண்டியில் இடிபட்டு இரத்தம் கசிந்து வருவதைப் பார்த்தேன். எதிரே இருந்த வேனில் இருந்து கட்டம் போட்ட சட்டைக்காரன் இறங்கி வருவதைப் பார்த்து நான் ஆச்சரியப்பட்டு "இங்கே எப்படி? என்று கேட்க, அவன் "சாரி சார், உங்களைக் கிளப்பியதும் நான் ஒரு ஆட்டோவில் போய் என் உறவினரைக் கூட்டிக் கொண்டு வேனில் ஏறிக் கொண்டு இப்போதுதான் ஆஸ்பத்திரி போகிறேன்" என்னால் உங்களுக்குச் சிரமம்" என்றபடி பக்கத்தில் ரோட்டோரமாக இருந்த கல்லில் என்னை உட்கார வைத்து ரத்தத்தைத் துடைத்து, துணியால் கட்டி விட்டான். பிறகு அந்த வேன் டிரைவரைக் கூப்பிட்டு

## ஹை...ஐ..!

படத்தில் இருக்கும் அம்மா சிம்பன்சியின் வயது இருபத்துமூணு. கூட அதன் ஐந்து மாதக் குட்டி. ஜப்பானின் க்யோடோ பல்கலைக் கழகத்தின் ஆராய்ச்சி மையத்தில் இவை உள்ளன. பல்வேறு வண்ணக் கட்டைகளைக் கொடுத்தால், கலர் வாரியாய்ப் பிரித்து அடுக்குவது, ஜப்பானிய எழுத்துக்களை அடையாளம் தெரிந்து கொள்ளுவது என்று செய்து காட்டி அனைவரையும் அசத்துகிறது இந்த சிம்பன்சிக்குட்டி. இதன் பெயர் 'ஐ'.



— எம்.

"சார் வண்டியில், பின்னால் எல்லாம் சரியாக இருக்கா பார்" என்றபடி. "சார், நான் இனிமேல் என் உறவினர் உடலைக் கொண்டு வர முடியாது. உங்களுக்காவது உதவுகிறேன் சார், நீங்கள் பாவம், தனியாகப் போகிறீர்கள். இப்போது அடிபட்டு மயக்கம் வரும் நிலையில் இருக்கிறீர்கள். உள்ளே முன்பக்கம் உட்காருங்கள் சார். நான் பின் பக்கம் உட்கார்ந்து உங்களுடன் மயானத்திற்கு வருகிறேன்" என்று பின்பக்கம் சென்றான்.

ஆம்புலன்ஸ் மீண்டும் கிளம்பி மயானம் சென்றது. நல்லவேளை நேரம் இருந்ததால் வாட்ச்மேன் தகராறு ஏதும் செய்யவில்லை. ஆனால் "சீக்கிரம், சீக்கிரம் கடைசி நிமிஷத்தில் வந்து கழுத்தறுக்கிறீர்கள்" என்று முணுமுணுத்தான். கட்டம் போட்ட சட்டைக்காரன் என்னை ஒரு ஓரமாய் பெஞ்சில் உட்கார வைத்துவிட்டு, "நான் தூக்கிப் போய் தகனம் செய்ய ஏற்பாடு செய்கிறேன்" என்று மயான வாட்ச்மேனுடன் சேர்ந்து பாடியைத் தூக்கி உள்ளே கொண்டு போய் வைத்துவிட்டு "சார், தகனம் செய்யும் கடிதத்தைக் கொடுங்கள் சார், அது முக்கியம். இல்லாவிட்டால் வாட்ச்மேன் எரிக்க மாட்டான்" என்று என்னிடம் டாக்டர் கொடுத்த அந்தக் கடிதத்தை வாங்கிக் கொண்டு போனான்.

நான் அப்படியே சிலை போல பிரமை பிடித்தபடி அப்பாவின் உடல் தகனம் ஆகும் காட்சியைத் பார்த்த வண்ணம் பெஞ்சில் அமர்ந்திருந்தேன்.

எல்லாம் முடிந்தது. கட்டம் போட்ட சட்டைக்காரன் "என்ன சார்! போகலாமா? எழுந்திருங்கள்" என்றான். என்னை ஆம்புலன்ஸில் ஏற்றிக் கொண்டிருக்கும் போதே அவன் ஏறி வந்த வேன் மயானத்திற்கு வந்தது. "சார் வருகிறேன், அப்புறம் பார்க்கலாம்" என்றபடி கிளம்பினான். மாமாவைப் போன்றவர்கள் இருக்கும் உலகில் இப்படியும் மனிதாபிமானத்துடன் உதவி செய்துவிட்டுப் போகிறானே என்று வியந்தபடி, "ரொம்ப தாங்க்ஸ்" என்று சொன்னேன். அவன் வேனில் ஏறிப் போய் விட்டான்.

நாங்கள் நர்சிங் ஹோம் திரும்பும்போது நன்றாக இருட்டி விட்டது. பாதி தூரம் வந்திருப்போம். அந்த வளைவான இடம் வந்தது. வண்டியின் முன் பக்க விளக்கு வெளிச்சத்தில் ரோட்டின் ஓரமாய் ஏதோ பொருள் கிடக்க, நான் அதை உற்றுப் பார்த்தேன். "அடடா, அப்பாவின் வாக்கிங்ஸ்டிக் அல்லவா? எப்படி இங்கே கிடக்கிறது?" என்று வண்டியை நிறுத்தி, நானும் டிரைவரும் இறங்கினோம். நான் ஸ்டிக்கை எடுத்துக்கொண்டு நகரும் போது, டிரைவர் "சார், அதோ பாருங்கள், என்று லேசான வெளிச்சத்தில் செடி கொடிகளுக்கிடையே எதையோ சுட்டிக் காட்டினார். நான் மெல்ல அதை நோக்கிச் சென்றேன். அடடா, அப்பாவின் சந்தனக் கலர் டர்க்கி டவல் செடிகளுக்கு அருகில் கிடக்க, சற்றுத் தள்ளி, நகர்ந்து சென்றேன். "ஐயோ..." என்று என்னை அறியாமல் அலறி விட்டேன். அப்பாவின் சடலம் அங்கே முழுசாய் அனாதையாய்க் கிடந்தது. என்னால் எதுவும் பேச முடியவில்லை. நா தழுதழுத்தது. தடுமாறியது. ஆம்புலன்ஸ் டிரைவர் ஆச்சரியம் தாங்காமல் "என்ன சார்! இது, அநியாயமாய் இருக்கு, உங்கப்பா உடல் இங்கே இருக்கு, அப்ப அங்க தகனம் செய்தது யார் உடலை? இனிமேல் உங்க அப்பா உடலை மயானத்தில் தகனம் செய்ய டாக்டர் கடிதத்திற்கு என்ன செய்வீர்கள் சார்?" என்று இரண்டு கேள்விகள் கேட்டார்.

அந்த இரண்டு கேள்விகளுக்கும் விடை தெரியாமல் நான் அப்படியே குழம்பிப் போயிருக்கிறேன். இப்போது நீங்களாவது அதற்குப் பதில் சொல்கிறீர்களா?




''இங்க எப்பவுமே தீபாவளிதான்!''

''பொக்ரான் குண்டுக்கே பயப்படாத நீங்க இந்த வெங் காய வெடிக்கா பயப்படறீங்க?''



# அரசியல் 'டமார்'



வழக்குகள்!



"இங்கயா வெடி வைக்கறது?"

— சேகர்

"பாம்பு மாத்திரைன்னு யோசிக்காதீங்க. 2001ல வெடிக்கும்."



"இந்த மாதிரி விளையாடாதே..."



## முன்கதை சுருக்கம்

ராமேஸ்வரம் கடற்கரையோரம் யாத்ரிகர்களுக்குக் காரியங்கள் செய்து வைத்துப் பிழைக்கும் அப்புசாமி சாஸ்திரிகளின் மகள் உமாவுக்கு மீனவனான அருள்தாஸ் மேல் காதல். மீன் பிடிக்கச் செல்லும் அருள்தாஸ், நடுக்கடலில் விடுதலை புலிகளிடம் படகை இழந்து, அநாதையாக இலங்கைக் கடற்படையினரிடம் மாட்டிக்கொள்கிறான்.

காதல் மணம் புரிந்த காரணத்தால் தந்தையால் புறக்கணிக்கப்பட்டு, அக்கா அகிலா வீட்டை விட்டுச் சென்ற பின், நல்லதும் கெட்டதும் பகிர்ந்து கொள்ள உமாவுக்கு ஒரே துணை - வீட்டோடு இருக்கும் அத்தைப் பாட்டி நீலு. உமாவின் காதலுக்கு ஆதரவு தெரிவிப்பவளாகவே இருப்பினும் மற்றொரு பூகம்பத்தை வீடு தாங்குமா என்று கவலைப்படுகிறாள்.

உமாவுக்கொரு நல்ல சிநேகிதியாக இருக்கிறாள் அற்புதமேரி. அருள்தாஸின் தங்கை.

மிகுந்த சிரமங்களுக்குப் பிறகு இலங்கை கடற்படையிடமிருந்து தப்பி வந்த அருள்தாஸ் உமாவை மீண்டும் சந்திக்கும் தருணத்தை எதிர் நோக்கிக் காத்திருக்கையில், தன் படகு இனி இல்லாமலாகிவிட்ட துக்கமுடன் மேற்கொண்டு எப்படிப் பிழைப்பது என்று கலங்கி நிற்கிறான்.

இனி...

# அலை உறங்கும்

பா. ராகவன்

வெயிலிறங்கும் நேரம் போட்ஜெட்டியின் விசாலமான சிமெண்ட் தளத்தின் வலது மூலையில் தனியே அமர்ந்திருந்தான் அருள்தாஸ். எண்ணெய்ப் பிசுக்குடன் கறுத்துத் தெரிந்த நீர்ப்பரப்பில் இருபது படகுகள் அணி வகுத்தாற்போல் நின்று கொண்டிருந்தன. தூண்டிலில் சிறு புழுக்களை மாட்டி, சட்டையணியாத சிறுவர்கள் ஓர் ஓரத்தில் படகுகளின் இடைவெளிகளில் மீன் தேடிக் கொண்டிருந்தார்கள். சற்றுத் தள்ளி கோயில் பக்கமாக மிதந்து கொண்டிருந்த சில நாட்டுப் படகுகளில் ஏறி பெண் குழந்தைகள் விளையாடிக் கொண்டிருந்தன.

கட்டுமரம் ஏறியாவது கடலுக்குள் போகாவிட்டால் பைத்தியம் பிடித்துவிடும் போலிருந்தது அவனுக்கு.

வழக்கம்போல் அதிகாலை நாலரைக்கெல்லாம் விழிப்பு வந்துவிட்டாலும் செய்வதற்கொன்றுமில்லாமல் வெறுமனே கரைக்குப் போய் நின்றான் அருள். சராங் முதலியார் தன் படகை எடுத்துப் போகச் சொல்லிக் கேட்டும் மறுத்துவிட்டிருந்தான். அற்புத மேரியும் அம்மையும் தீர்மானமாக அவனுக்குக் கட்டளை இட்டிருந்தார்கள். ஒரு வாரத்துக்காவது இனி கடலுக்குள் போகாதிருக்க வேண்டும்.

ஆயினும் சக தோழர்கள் படகைக் கட்டவிழ்த்து நீரில் மிதந்து புறப்பட்ட போது அவனுக்குக் கரங்கள் துடித்தன. அவர்கள் திரும்பி வரும் வரை ஓர் அநாதை போலத்தான் மார்க்கெட்டைச் சுற்றி வர வேண்டுமே என்கிற உணர்வு அடிவயிற்றில் துக்கச் சுமையாக அழுந்தியது.

நம்புமாரீஸ்வரன், வின்சென்டின் படகில் ஏறிக் கொண்டு விட்டான். "போய் வாரன் அருளு" என்று கிளம்பும்போது அவன் சாதாரணமாகத்தான் கூறினான்.

அருள்தாஸுக்குத்தான் தன் தனிமை பூதாகாரமாகப் பெருகுவதாகத் தெரிந்தது. ஊழியர்களுக்கு ஊரெல்லாம் படகு. உள்ளவனுக்குத் தானே ஒரே போக்கு?

ஒன்பது மணி வரை ஒரு டீ கூடக் குடிக்கத் தோன்றாமல் போட் ஜெட்டியிலேயே பிரமை பிடித்தவன் போல அமர்ந்திருந்தான். இரண்டாவது மைலில் மொத்தப் படகுகளும் அணி வகுத்து நிற்பதையும் கடற்படை அதிகாரிகளின் படகுகள் குறுக்கே வந்து ஆர்.சி. புத்தகங்களைச் சரி பார்ப்பதையும் அங்கிருந்தே யூகமாகக் கண்டான்.

மரிக்குட்டி, மரிக்குட்டி என்று கொஞ்சி முத்தமிட்ட தன் லாஞ்ச் இனி தன்னு

டையதில்லை என்கிற எண்ணத்தை வேப்பிலைக் கொழுந்தென தொண்டையில் அழுத்தி இறக்கப் பார்த்ததில் அவன் விழிகள் நீர்த்திரை பூண்டன.

“ஏண்டா இங்கன குந்திக்கெடக்க? கரையன் கரை தங்கினா கடலுக்குப் பொறுக்காதும்பாக. எழுந்து போயி அடுத்தென்ன பண்ணுதுன்னு பாக்கலாமில்ல?''

பின்புறமிருந்து குரல் வரவும் திடுக்கிட்டுத் திரும்பினான் அருள் தாஸ்.

# கடல்

## 13

தானியேல் நாடார் நின்று கொண்டிருந்தார்.

''வாங்க மொதலாளி'' என்று மரியாதையாக எழுந்து கொண்டான் அருள் தாஸ்.

தங்கச்சிமடமருகே தன் டூரிங் டாக்கிஸை தியேட்டராக உயர்த்திக் கட்டும் முயற்சியில் ஈடுபட்டிருந்த தானியேல் முதலாளி வசம் ஆறு லாஞ்சுகள் உண்டு. வருஷந் தவறாமல் அவர் கை காட்டும் நபர்தான் சங்கத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்படுவது. கோரிப் பெறாமல் வந்து சேர்ந்த கௌரவங்களுக்கு அவர் கொடுத்திருந்த விலைகள் அதிகம்.

நாட்டுப் படகுகளில் பிடியாளாக அவர் கடலுக்குள் இறங்கிய நாட்களில் அருள்தாஸ் பிறந்திருக்கவில்லை.

பாம்பன் சையாளிபக்கரிடம் அவன் தன் சேமிப்புகளை மொத்தமாகக் கொடுத்தும் ஒரு வருஷத்துச் சம்பாத்தியத்தை எழுதிக் கொடுத்தும் முதல் முதலில் விசைப்படகு வாங்கியபோது தானியேல் நாடார் தான் வந்து சூடம் காட்டி, இஞ்சினை இயக்கித் தந்



தது.

"நான் சொல்லுதேன் எழுதிக்கோ. மூணு மாசத்துல நீ மிச்சத்தை அடைப்பே. இது என்ன பங்குனியா? சித்திரை, வைகாசி, ஆனி... ஆடி அறுவடை உஞ்சொந்தமாகும் எழுதிக்கோ. இதா, மாரியப்பனைக் கூடவெச்சிக்கோ. சோறு போட்டு நாளைக்கு இருவது ரூவா குடு. போதும். தொழில் கத்துக்கிடட்டும், பார்த்துக்கிடலாம்" என்று விட்டுப் போனவர் இதே தானியேல் முதலாளிதான்.

மூன்று மாதத்தில் இல்லாவிடினும் ஐந்து மாதங்களில் அவனால் முழுக் கடனையும் அடைத்து விட முடிந்தது.

முதலாளிதான் அவனிடம் "இந்த வருசம் செயலாளர் 'போஷ்டு'க்கு நிக்கிறியா?" என்று கேட்டது.

"நமக்கெல்லாஞ் சரிப்படாது மொதலாளி. பாடு அம்புடுதா, வீடு பொங்கித் தருதா – அவ்ளதான். பெரியவக நூத்துப் பேரு உள்ளாவ. நா எதுக்கு?" என்று மரியாதையாக மறுத்து விட்டிருந்தான்.

**தா**னியேல் முதலாளி அவனருகே அமர்ந்து, கட்டிலிருந்த ஒரு பீடியை உருவிக் காதைச் சொறிந்தார்.

"தப்பி வந்ததுதான் வந்தே. போட்டெடுத்துட்டு வந்திருக்கலாமில்ல?" என்று கேட்டார் சிரித்துக்கொண்டே.

"போங்க மொல்லாளி, கிண்டலடிச்சுக்கிட்டு. நம்ப நேவி ஆபீசுக்கும் கடல் மட்டத்துக்கும் எத்தினி தூரம்? இருவதடி இருக்குமா. காம்பவுண்டு செவுத்துலருந்து ஒரு 'டைவு' போட்டம்னா, தண்ணி மேல தான் வந்து கால் குத்தும். தலைமன்னாரு நேவி ஆபீசக்காரவுக ஒரு அவசர ஆத்திரம்னாக்கூட தண்ணியத் தொட எட்டுச் சுத்து சுத்தி வரணும். நாம் – பொழச்சதே அந்தோணிசாமி ஆசீர்வாதம். நீஞ்சி வாரப்ப மாரிப்பய அழுகுதான், அழுகுதான், அப்பிடி அழுகுதான். ஏண்டான்னா, நெசமாவே தப்பிச்சமா, கெனாகாணுதனான்னு கேக்கான்!"

"விடுடா. அதையே நினைச்சுக்கிட்டு. மேல என்னஞ் செய்யப் போற? அத்தச் சொல்லு" என்றார் தானியேல் நாடார்.

"புரியல்ல மொல்லாளி. புது போட்டு வாங்கறமாரியெல்லாம் பணமில்ல இப்பம். கொஞ்ச நாளா பாடுஞ் சரியில்ல கேட்டீகளா? செகண்ட் ஹாண்டுல ஒரு இஞ்சின் வாங்கி, சின்னதா ஒண்ணு நாமே கட்டிறலாமுன்னு ரோசிக்கேன்."

"செகண்ட்ஹாண்டு இஞ்சினா? எவங் கொடுக்கான்? பைத்தாரப் பயமக்கா. பத்து தப்பிடில படுத்துரும். கவனிச்சிக்க."

அவன் இதற்கு பதிலேதும் சொல்லவில்லை. தேவிப்பட்டணத்தில் ஒரு சிலோன்காரன் திருட்டு எஞ்சின்கள் விற்பது பற்றிக் காற்று வாக்கில் அவன் கேள்விப்பட்டிருந்தான். லாரி, கார், விசைப்படகு, டி.வி.எஸ். 50 என எந்தவித வாகனமாயினும் சரி. ஆர்டர் கொடுத்த பத்தாவது நாள் கார்டு போட்டு விடுவானாம். கேஸ் வெல்டிங் மூலம் இஞ்சின் நம்பரை மாற்றிவிட்டு, சுத்தமாகப் பெயின்ட் அடித்துப் புதுசு போல கட்டித் தந்து விடுகிறார்கள் என்று வின்செண்ட் சொல்லியிருந்தான்.

"நீடிச்சி வந்திச்சின்னா அது ஒன் அதிர்ஷ்டம். மக்கர் ஆச்சின்னா நஸ்டத்தோட நஸ்டத்தோட நஸ்டம்னு நினைச்சிக்கிற வேண்டியதுதான்" என்று முதல் நாள் மாலை சந்தித்தபோது அவன் சொன்னான்.

"யோசிக்கறேன் வின்செண்டு" என்றவன் மரத்துக்கான சாத்தியங்கள் பற்றியே முதலில் யோசித்தான்.

ஓரளவேனும் வலுவாக ஒரு படகு கட்டுவதென்றால் செலவு நிச்சயம் தனக்குக் கட்டுப்படி ஆகாதென்று தோன்றியது. மேரியின் திருமணத்துக்கென இதுவரை சேர்த்த ஒன்பதாயிரத்துக்கு மேல் வேறு சல்லி கிடையாது. அதில் கை வைக்கவும் முடியாது. அடகு வைக்கவோ, விற்கவோ அம்மை

---

**"சார்! இன்னிக்கு 3 ஆர்டர் கிடைச்சது சார்"**

**"அப்படியா வெரிகுட். என்ன ஆர்டர்?"**

**"அங்கே நில்! வெளியே போ! திரும்பி வராதே!"**

**— ஜீவகன்**



யிடமும் மேரியிடமும் பொட்டுத் தங்கமும் இல்லை.

செகண்ட்ஹாண்ட் இஞ்சினுக்குத் தோராயமாகக் கொஞ்சம் முன்பணம் கொடுத்தால் போதும். பத்து தவணைகளில் அடைத்து விடக் கூடியச் சாத்தியமிருப்பதாக வின்சென்ட் சொன்னான். அப்படியும் ஒரு முப்பதாயிரமில்லாமல் சிறு படகு கூடக் கட்ட முடியாது என்று தோன்றியது அவனுக்கு.

''நீங்கதான் மொதலாளி ஒரு வளி சொல்லோணம்!'' என்று தானியேல் நாடாரிடம் கேட்டான் அருள்தாஸ்.

நாடார் சற்றுநேரம் யோசனையில் இருந்தார். பிறகு இன்னொரு பீடியை எடுத்து பற்ற வைத்துக் கொண்டு, ''சம்மாரிக்க ஆயிரம் வளி உண்டு ராமேசுரத்துல, கேட்டியா? அய்யமாருக்குக் கரையில காசுன்னா, நம்மளவனுக்குக் கடலுல காசு. விசயமென்னன்னா, கொஞ்சந் தடாலடிக்கணும்...''

"நா ஒரு போட்டு வாங்கியே ஆவணும் மொதலாளி. எட்டு வருசம் சொந்தப்படகு ஓட்டிட்டு, பின்ன கூலிக்குப் போவ மனசு கேக்குமா சொல்லுங்க" என்றான் அருள்தாஸ்.

''சேச்சே!'' என்று அவன் தோளைத் தட்டினார் தானியேல்.

"நீ நெசமான கரையண்டா அருளு. தம்மானமுள்ளவன். கூலிக்குப் போறதுங் காட்டி, பட்டினி கெடக்கலாமுன்னு தோணுமே?"

அவன் தலை குனிந்திருந்தான். தன் சோகத்தை இறக்கி வைக்க வலிய ஒரு செவி கிடைத்த திருப்தியில் உணர்வுகள் பீறிடுவதை உணர்ந்தான்.

"இந்தப்பாடே வேணாம்; ஒரு பொட்டிக் கடை போடலாமுன்னுகூட ரோசிச்சேன் மொதலாளி" என்றான் மெதுவாக.

"போக்கத்தவனே! கடை போட்டுக் குந்தி சம்பாதிக்கலாமுன்னு பாக்கியா? போலீசுக் காரனுக்குக் கப்பங் கட்டியே திவாலாயிருவ. ஊருல இப்பம் எட்டடிக்கு எட்டடி இடம் என்ன வெல தெரியுமா? அட, வாடகைக்குத்தான் எடுக்கேன்னாலும் மூவாயிரம் கேக்கான் மாசத்துக்கு. பகடி வேற பத்து ரூவா கொடுத்துக் கட்டுமா ரோசி. எஞ் சகலபாடி திட்டக்குடில துணிக்கட வெக்கேன்னு போனான். யாவாரம் என்னாங்கே? மாசத்துக்குப் பத்து மீட்டர் காடாத்துணி விக்குதுங்கான். ஊருக்காரன் எவன் இங்க ஜாமான் வாங்குறான்? லொங்கு லொங்குனு ராம்நாடுக்கு ஓடுறான். மானாமதுரைக்கு ஓடுறான். அட, பொட்டிக்கட போட்டானாலும் பீடிதான் விக்கும். வேறென்ன விக்கும்? கோயிலாண்ட கட போடுறியா, செரி, ஆனா மீனுக்காரன் கடையில அய்ய மாரு பூணூலு வாங்குவாகளா? ரோசிக்காம செய்யாத, ஆமா."

"அப்பங் கொஞ்ச நாளு கூலிக்குத்தான் வலை போடணும்னு தலையெழுத்து போல" என்றான் அருள்தாஸ்.

"அடுத்த வருசம் தங்கச்சியக் கட்டிக் குடுத்துரலாமுன்னெல்லாம் நெனச்சேன், மொதலாளி. இந்த அளகுல அம்மை வேறு ஒரு செயின் வேணுமுன்னு ஆசப்பட்டா. ப்ச்!"

தானியேல் நாடார் அவன் தோளை அணைத்து நெருங்கி அமர்ந்தார். வெயில் முற்றிலும் தாழ்ந்து வானம் கருமை பூசத் தொடங்கி, காற்றில் ஈரம் கூடியிருந்தது. போட் ஜெட்டியின் பின்புறம் தெரிந்த வேர்க்கோடு சந்தை மார்க்கெட்டில் அறுபது வாட் விளக்குகள் மஞ்சள் உருண்டைகளாக எரியத் தொடங்கி, சந்தடி மிகுந்திருந்தது.

''உனக்கென்னடா வயசு?'' என்று திடீரென்று கேட்டார் தானியேல் நாடார்.

விழியில் தொக்கிய வினாவுடன் அவரை ஏறிட்ட அருள்தாஸ், ''வைகாசி வந்தா முப்பது'' என்றான்.

"இந்த ராமேசுரத்துல இருவத்திரெண்டு, இருவத்தி மூணு வயசுல சொந்த போட்டு



''உன் கணவர்தான் 'வாட்டசாட்டமா' இருக்காரே...?''

''ஆமா அதுக்கென்ன?''

''அப்புறம் ஏன் 'வாஷிங்மிஷின்' வாங்கியிருக்கே?'

— கு. அருணாசலம்

ஓட்டின பய வேற ஒருத்தன் உண்டா சொல்லு? நீ ஓட்டிருக்கே! நீ!"

அவன் மார்பைத் தன் ஆட் காட்டி விரலால் தொட்டு அழுத்திச் சொன்னவர், "உனக்கு ஒரு கொற இல்லறா மவனே. நா ஒண்ணு சொல்லுதேன், கேப்பியா?" என்று கேட்டார்.

"சொல்லுங்க மொதலாளி."

"இந்தக் கட போடற ரோசனையை யெல்லாஞ் தூக்கித் தண்ணில போடு. நமக்கு அதெல்லாஞ் சரிப்படாது, கேட்டியா? நாஞ் சொல்லுதேன், மூணு மாசத்துல நீ லேலண்டு போட்டு வாங்குவ."



**நள்ளிரவு டைரி!**

**ரஷ்யாவின் முன்னாள் துணை ஜனாதிபதி போரிஸ் எல்சின், தம் சுய சரிதையை எழுதிக் கொண்டிருக்கிறார். ஒரு அமெரிக்க நிறுவனம் அதை வெளியிடப் போகிறது. பல திடுக், திடுக் சம்பவங்களைக் கொண்ட இப் புத்தகம் உலக அளவில் பெரும் பரபரப்பை ஏற்படுத்தப் போகிறதாம். இதற்கு, புத்தகத்தின் தலைப்பே சாட்சி! ஆம்! "நள்ளிரவு டைரி" என்பதுதான் தலைப்பு.**

**— எம்.**

அவன் வியப்புடன் நிமிர்ந்து அமர்ந்தான்.

"ஏ அப்பா! லேலண்டா? என்ன சொல்லுதீக மொல்லாளி?"

"சொல்லுதேன். உன் உடம்புல தெம்பு இருக்கில்ல?"

"ஆமா."

"மனசுல ஒரம் உண்டில்ல?"

"நாலு பேத்துக்கு முடியல்லின்னாலும் நீயொருத்தன் செஞ்சி முடிப்பல்ல?"

"ஆமா."

"அப்பஞ் சரி. மொதலாளி உனக்கு நல்லதுதாஞ் செய்யாருன்னு நம்பிக்கை உண்டில்ல?"

"என்ன மொதலாளி இப்பிடி கேக்குறீக? எம் போட்டை மொத மொத ஓட்டி வெச்சவுக இல்ல நீங்க? அப்பனாட்டமில்ல இருக்கிரு?"

"நீ ஆம்பிளைடா. ஜெயிச்சே தீருவ. இருட்டி மணி ஒம்பதானதும் என் டாக்கீஸுக்கு வந்துரு. அப்பஞ் சொல்லுதேன்" என்றார் தானியேல் நாடார்.

ஒருகணம் - தயங்கிய அருள், "மொதலாளி தப்பா நினைக்காதிய. ஏதும் ராவடி ஜோலியா தரப் போறீக?" என்று கேட்டான்.

"ராவடி என்னடா அருளு? எல்லாரும் இங்க செய்யறதுதான். நீ வாயேன்."

"அட, இப்பமே சொல்லியிருங்களேன்? எனக்குத் தரிக்காது."

"நம்ம டாக்கீஸுலே என்னா படம் ஓடுதுன்னு தெரியுமா?"

"கமலு படம். நாயகன். அதானே."

"ஆமா. அதுல ஒரு பேமஸ் டயலாக் உண்டு. அதுந் தெரியுமா?"

இப்போது அவன் யோசித்தான். அவன் அந்தத் திரைப்படத்தைப் பார்த்திருக்கவில்லை. பொதுவாகவே அவனுக்குக் கமல் படங்கள் பிடிக்காது. எல்லா படங்களிலுமே அடி வாங்கும் பாத்திரத்திலே அவர் வருவதுதான் காரணம். 'ஹீரோன்னா அடுத்தவனை பேண்டு கள்ட்மறணுமில்ல? நமக்கு விஜயகாந்துதான் செரி' என்பான் அருள்தாஸ்.

"எனக்கு டயலாகொண்ணும் தெரியலை முதலாளி" என்று ஒப்புக் கொண்டான்.

"தெரியாட்டிப் பரவால்ல. நைட்டு வந்துரு. மொதல்ல பேசுவம். அப்புறம் இஸ்டமிருந்தா படத்தையும் பாரு. இன்றே கடைசி. சொல்லிட்டேன்" என்றபடி எழுந்து கொண்டார் தானியேல் நாடார்.

"வரேன் முதலாளி" என்றவன், அவரை அனுப்பி விட்டு, மீண்டும் அங்கேயே அமர்ந்தான்.

தொலைவில் ராமநாதர் ஆலயக் கோபுரம் விளக்குக் கோடுகளில் தெரிந்தது. ஒருகணம், உமாவின் பாட்டி தனக்குத் திருநீறு பூசி விட்ட காட்சி அவன் மனத்தில் உதித்து மறைய, தன்னையறியாமல் சிரித்துக் கொண்டான்.

உமா ஒரு கரையர் மகளாகவோ, அல்லது தான் ஒரு அய்யர் வீட்டுப் பிள்ளையாகவோ பிறக்காது போய் விட்டது பற்றிய வருத்தம் இப்போது எழுந்தது.

(தொடரும்)

# “திருட்டு நகைத் தொல்லை இல்லை!”



தமிழ்நாடு தங்கநகை வணிகர்கள் சங்கங்களின் கூட்டமைப்புத் தலைவர் வசந்த்லால் சி.மேத்தா நகைகள் குறித்தான நமது சந்தேகங்கள் சில வற்றுக்கு விளக்கம் அளித்தார்:

● ***விற்பனை வரி கேரளத்திலும் ஆந்திரத்திலும் குறைவாக இருக்கிற போது, தமிழ்நாட்டில் மட்டும் நான்கு சதவிகிதமாக இருக்கிறதே?***

முன்பு 16% இருந்தது. எங்கள் சங்கம் எடுத்துக் கொண்ட முயற்சிகள் காரணமாக 4% ஆகக் குறைக்கப்பட்டது. அதே போல் தங்கக் கட்டிகள் மீதான விற்பனை வரியும் 2% லிருந்து 1% ஆகக் குறைக்கப் பட்டிருக்கிறது. 16 சதவிகித விற்பனை வரியிலிருந்து 4 சதவிகிதமாகக் குறைக்கப் பட்டபோது இங்கே வியாபாரம் அதிகரித்தது. ஆனால் ஒரு சதவிகித விற்பனை வரி விதிக்கும் மாநிலங்களில் அது போல் அதிகரிக்கவில்லை.

● ***உங்கள் சங்க உறுப்பினர்களுக்கு வேறு என்ன கூடுதல் பயன்கள் கிடைத்திருக்கின்றன?***

பல வருடங்களாக, திருட்டு நகைகள் புலனாய்வு விஷயத்தில் எங்கள் வணிகர்கள் மிகுந்த தொல்லைக்கு ஆளாகி வந்தார்கள். உயரதிகாரிகள், காவல் துறையினர், அமைச்சர்கள் இவர்களைச் சந்தித்து விளக்கங்கள் அளித்தோம். அரசு இப்போது அது குறித்து எங்களுக்கு அனுகூலமாக ஜி.ஓ. வெளியிட்டிருக்கிறது. இப்போது தொல்லைகள் இல்லை. விற்பனை வரி மேல் முறையீட்டின்போது 100 சதவிகிதம் பணமும் செலுத்த வேண்டும் என்பதை மாற்றி 25 சதவீதம் கட்டினாலே போதும் என்று குறைத்து விட்டார்கள். விற்பனை வரி சுயமதிப்பீட்டுத் திட்டத்தில், தற்போது ஒரு கோடி ரூபாய் வணிகம் செய்பவர்கள் வரை ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கிறார்கள். தங்க நகை ஏற்றுமதியாளருக்கு வங்கிகள் மூலம் பெறும் தங்கத்திற்கு விற்பனை வரி, கொள்முதல் வரி இரண்டுக்குமே விலக்கு

அளிக்கப்பட்டு விட்டன.

● **உங்கள் சங்க அங்கத்தினர்கள் எல்லாருமே ஏன் ஹால் மார்க்கிங் முத்திரை பெறவில்லை?**

ஹால் மார்க்கிங்கை ஒரு மூன்றாவது அமைப்பு செய்தால் ஏற்றுக் கொள்ளலாம். அப்படியின்றி வேறொரு நகை வியாபாரியின் தொழிற்சாலையில் பரிசோதிக்கப்பட்டு ஹால்மார்க்கிங் பெற வேண்டும் என்பதை எப்படி ஏற்பது? அதனால்தான் எல்லாரும் முன் வருவதில்லை. இரண்டாவது, ஹால்மார்க்கிங் அங்கிகாரம் பெற்ற நகைக் கடைகளிலேயேகூட, ஆயிரம் ஐட்டங்கள் இருந்தால், ஆயிரத்துக்குமே ஹால்மார்க்கிங் இல்லை. நூறு ஐட்டங்களுக்குத்தான் இருக்கும்! அப்போது மீதி ஐட்டங்களின் தரத்துக்கு அவர்கள் என்ன உத்தரவாதம் தருவார்கள்?

● **தங்கம் சென்னையில் ஒரு விலையும் மும்பையில் ஒரு விலையும் விற்கப்படுகிறதே?**

இப்போது அப்படி இல்லை. மும்பையைவிடச் சென்னையில் விலை குறைவுதான். ஏன், மதுரை கோவையை விடச் சென்னையில் குறைவு!

● **தமிழ்நாட்டுத் தங்கநகை உற்பத்தியாளர்கள், ஏற்றுமதியில் அதிக ஆர்வம் காண்பிக்காதது ஏன்?**

இங்கே உள்மார்க்கெட் தேவையே அதிகமாக இருக்கிறது. அந்தத் தேவையைச் சமாளித்தாலே போதும். வடக்கே அப்படி அல்ல. மேலும், அமெரிக்க மார்க்கெட் ஏற்றுமதிக்காக மூன்று மாதம் மற்ற வேலைகளை எல்லாம் நிறுத்திவிட்டு, ஏற்றுமதிக்கான ஐட்டங்களை மட்டுமே தயாரித்துக் கொண்டிருந்தால் வழக்கமான உள்ளூர் வியாபாரமும் விற்பனையும் படுத்து விடும்! வடக்கே நிறைய ஆட்கள் ஏற்றுமதிக்கு என்றே வேலை செய்கிறார்கள். அதனால் அது அவர்கள் வழக்கமான வியாபாரத்தைப் பாதிப்பதில்லை. இப்போதைய புள்ளி விவரப்படி, இங்கே இருப்பது போன்ற உள்ளூர் வணிகம் அங்கே இருப்பதாகக் கூற முடியாது.

## 'மென்' பொருளும் கடினப் பெயர்களும்!

'பழந் தமிழ் நாட்டுச் சரித்திரப் பெயர்கள், சிலருக்குப் பெரிதும் தலைவேதனை உண்டாக்கி வந்ததாகத் தெரிந்தது' என்று கல்கி அவர்கள் 'பொன்னியின் செல்வன்' முடிவுரையின் துவக்கத்தில் குறிப்பிட்டிருக்கிறார்.



ஆனால், அத்தகைய சரித்திரப் பெயர்கள் பலவற்றை மிகச் சரியாகச் சொல்லி முதல் கட்ட 'க்விஸ்' போட்டியில் ஓர் இளைஞர் வெற்றி பெற்றிருக்கிறார். (ஸ்டார் பிளஸ் 18.9.2000; நடந்த இடம்: மியூசியம் தியேட்டர்; க்விஸ் மாஸ்டர் சித்தார்த்த பாஸு)

ஆம், முதல் கட்டப் போட்டியில் தேர்ந்தெடுக்கப்பட்ட நான்கு இளைஞர்கள் தாங்கள் நிபுணத்துவம் அடைந்த "பாடங்களை"க் குறிப்பிட்டார்கள். 'மம்முட்டியின் சினிமா, "ஆலிவர் கிராம் வெல்' 'ஆப்பிள் கம்ப்யூட்டர்' போன்றவர்களைத் தொடர்ந்து இடம் பெற்ற 'பாடம்' பொன்னியின் செல்வன்! அந்த இளைஞர் இந்த மகோந்நத சரித்திர நவீனத்தைக் குறிப்பிட்டது மகிழ்ச்சியாக இருந்தது.

'முதலாம் பராந்தகன்' 'பார்த்திபேந்திரன், 'கண்டராதித்தன்' போன்ற சரித்திரப் பெயர்களும், வேறு சில இடங்கள் சம்பந்தப்பட்டதுமான கேள்விகள் கேட்கப்பட்டன; குறிப்பிட்ட இளைஞர் 17 மதிப்பெண்கள் பெற்று முதலாவதாக வந்தார்; போட்டியில் இதர பிரிவுகளில் வாங்கியவை உட்பட, மொத்தம் 26 மதிப்பெண்கள் பெற்று அடுத்த சுற்றுத் தேர்வுக்கான தயார் நிலையை எட்டி விட்டார்!

'தலை சுற்றும்' கடினமான பெயர்களைச் சரியாகச் சொன்ன இளைஞர் பெயர்: ராகவேந்திரன், ஊர்: ஹைதராபாத், தொழில்: 'ஸாப்ட்வேர்' இஞ்சினியர்!

ரசித்தவர்: **ஈஸ்வர்குமார்**

# கிரிமினல்கள் ஜாக்கிரதை 13

ஒரு நண்பர் என்னிடம் "குற்றம் செய்யும் நபர் தடயங்களையும் சுத்தமாக அழித்துவிட்டுப் போக முடியாது என்கிறீர்களா?'' என்று கேட்டார். 'ஆமாம்... நிச்சயமாக... ஏனென்றால் குற்றத்தில் ஈடுபடுபவன் ஒரு டென்ஷனில் இருப்பான். காரியத்தை முடித்துவிட்டுத் தப்பிக்கும் எண்ணத்தில் இருக்கும் அவனால் எல்லா தடயங்களையும் அழித்து விட்டுப் போக முடியாது'' என்றேன் நான். அதே போல் தடய அறிவியல் நிபுணர் என்பவர் ஒரு அரசுத் தரப்பு சாட்சியல்ல; அவர் விஞ்ஞான முறையில் கொடுக்கும் சாட்சியங்களால், ஒரு நிரபராதி விடுதலை செய்யப்படும் வாய்ப்பும் இருக்கிறது.

உலக அளவில் எனக்குப் புகழைப் பெற்றுத் தந்த ஒரு வழக்கைப் பற்றிச் சொல்வதற்கு முன், எல்.ஐ.சி., மூர்மார்க்கெட், ஸ்பென்ஸர் வரிசையில் மற்றொரு தீ விபத்தைப் பற்றியும் சொல்வதுதான் சரியாக இருக்கும். இந்தத் தீ விபத்து நடுக்கடலில் நடந்தது. எம்.வி. சிதம்பரம் என்பது பிரும்மாண்டமான பயணிகள் கப்பல். சென்னைக்கும் சிங்கப்பூருக்கும் இடையே மாதத்திற்கு இரண்டு முறை சென்று வரும். அப்போதெல்லாம் சிங்கப்பூருக்கு அவ்வளவாக விமான சர்வீஸ் கிடையாது. டிக்கெட் கொஞ்சம் குறைவாக இருந்ததாலும், நிறைய லக்கேஜ் எடுத்துக் கொண்டு செல்லும் வாய்ப்பு இருந்ததாலும் பெரும்பாலோர் கப்பல் பயணத்தை மேற்கொண்டு வந்தனர்.



அலைகளின் தாலாட்டில் சிதம்பரம் சென்னையை நோக்கி வந்து கொண்டிருந்தது. அதில் மொத்தம் எழுநூறு பயணிகள், நூற்றிஐம்பது கப்பல் சிப்பந்திகள் இருந்தனர். நண்பகல் ஒன்றரை இருக்கும். எல்லோரும் மதிய உணவை முடித்து விட்டு ஓய்வு எடுக்கும் நேரம். திடீரென்று கப்பல் முழுவதும் ஒரே பரபரப்பு. "ஆபீஸர்ஸ் மெஸ்ஸில் ஒரே புகையாக இருக்கிறது; ஏதோ தீ விபத்தாக இருக்கலாம்'' என்றார்கள். பயணிகளை பீதி பிடித்துக் கொண்டது. அவர்கள் கலவரமானார்கள். 'என்ன நடந்தது?' என்று பயணிகள் தெரிந்து கொள்ளும் முன்பே பெரிய புகைப் போக்கியின் மேல்புறம் தீப்பிழம்பு பற்றி எரிவது தெரிந்தது. பயணிகள் அங்கும் இங்கும் தப்பிப்பதற்காக ஓடினார்கள். எங்கும் ஒரே குழப்பம். பயத்தின் வெளிப்பாடாக ஓலங்கள்.

கப்பலின் ஒவ்வொரு தளத்தையும் 'பங்க்' என்று சொல்வார்கள். சிதம்பரம் கப்பலில் A,B,C,D என்று நான்கு பங்குகள். 'டி' பங்கில், பயணிகள் தங்குவதற்காக 425 பெர்த்துகள் (படுக்கைகள்) அமைக்கப்பட்டிருந்தன. 'டி'பங்கில் இருந்தவர்கள் யாரும் வெளிவர முடியாமல் ஒரே புகையும் அனலுமாய் இருந்தது. அதிலிருந்தவர்களை காப்பாற்றுவது மிகுந்த சிரமமாக இருந்தது. பலமணி நேரப் போராட்டத்திற்குப் பிறகு கப்பல் ஊழியர்கள் தீயை அணைத்தனர். 'டி' பங்கில் பெரும்பகுதி எரிந்து சாம்பலாகிவிட்டது. எல்லா படிக்கட்டுகளிலும் இறந்தவர்களின் உடல்கள். தப்பிக்க முயன்று, மரணத்தைத் தழுவியவர்கள். கப்பல் சென்னைக்குக் கொண்டு வரப்பட்டது. இறந்தவர்கள் மொத்தம் இருபத்தெட்டு பேர்.

கப்பலில் எப்படி தீ விபத்து ஏற்பட்டது? வழக்கம் போல் எங்கள் பணி துவங்கியது. கப்பலை அங்குலம் அங்குலமாக ஆராய்ந்தோம். பயணிகள் இறந்து போன இடத்தில் குண்டு வெடித்ததற்கான தடயம் ஏதுமில்லை. ஏர்கண்டிஷன் குழாய் பெரிதாக டேமேஜ் ஆகாததால்

அந்தக் காரணம் சரியாக வரவில்லை. தீப்பிடித்த நிமிடம் வரை ஏ.சி. வேலை செய்திருக்கிறது. அதன் பிறகுதான் அதிகாரிகள் அணைத்திருக்கிறார்கள். அடுத்ததாக எலெக்ட்ரிகல் பாக்ஸை சோதனையிட்டோம். அதில் தீப்பிடித்த இடம் இடது புறத்திலிருந்து வலது புறமாக எரிந்திருந்தது. ஒயரிங் செல்லும் மரச் சட்டத்தின் எரிந்த பாகத்தை வைத்து அதன் ஆரம்பத்தைக் கண்டுபிடிக்க முடிந்தது. எலெக்ட்ரிகல் பாக்ஸிலிருந்து தீ பரவாமல் வெளிப்புறமிருந்து உட்புறமாக தீ பிடித்திருக்கிறது. உள்ளேயிருந்த ஒயர்களில், ப்யூஸ் கேரியர்களில் எதிலும் ஷார்ட் சர்க்கியூட் ஆகிவிடாமல் எந்த சேதமும் இல்லாமல் இருந்தது. மொத்தத்தில் தீ விபத்து மின்சாரக் கோளாறு காரணமாக நடக்கவில்லை என்பது தெளிவாக புரிந்தது.

# நடுக்கடலில் தீ!



முதன் முதலாக ஆபீஸர் மெஸ்ஸில் பிடித்த தீ, 'டி' பங்குக்கு எப்படிப் பரவியது? என்பதைப் புரிந்து கொள்ள மிகவும் போராட வேண்டியிருந்தது. கப்பலில் மொத்தம் மூன்று சமையலறைகள். இந்த மூன்று சமையலறைகள் தவிர, பேக்கரி, டாய்லெட், ஆகியவற்றின் எக்ஸாஸ்ட் புகையை சுமந்து வரும் கப்பலின் பிரும்மாண்டமான புகைப் போக்கியை ஆராய்ந்தோம். புகைப் போக்கி முடியும் இடத்தில் அதற்கு உட்புற சுவரில் பெயிண்டைத் தெளித்தது போல் ஏதோ தடயம் தெரிந்தது. அதைச் சுரண்டி எடுத்து சோதித்துப் பார்த்தால் நைலான் பிசின் என்று விளங்கியது. இதே போன்று 'டி' பங்கின் எரிந்து போன பொருட்களின் ஊடே இந்த நைலான் பிசின் இருந்ததும் கண்டு பிடிக்கப்பட்டது. தீப்பிடித்து எரிந்தால் கரிப்புகை தானே வர வேண்டும். நைலான் பிசின் எப்படி வந்தது? ஒரு நபரை புகைப் போக்கியின் உள்ளே இறக்கினோம். புகைப் போக்கியில், 'டி' பங்க் அருகே 'ட' போன்று அது வளையும் இடத்தில் ஒரு பெரும் குவியலாக எரிந்து போன நைலான் மெட்டீரியல்ஸ். இன்னமும் துருவியதில் தீப்பிடித்ததற்கானக் காரணம் பளிச்சென்று விளங்கி விட்டது.

ஆபீஸர் மெஸ்ஸில் ஆம்லெட், சப்பாத்தி, தோசை ஆகியவற்றைச் சுட 'ஹாட் பிளேட்' தோசைக்கல் ஒன்று இருந்தது. அது அளவுக்குச் அதிகமாக சூடாகி இருக்கிறது. அதில் டால்டாவைப் போட்டவுடன் 'குப்'பென்று தீப்பிடித்து இருக்கிறது. அந்த தீ உயர எழுந்து 'டி' பங்கிற்கு அருகில் செல்லும் 'ட'போன்ற புகைபோக்கி, வளையும் இடத்தில் பதுக்கி வைக்கப்பட்டிருந்த நைலான் துணிகளைத் தீப் பிடிக்க வைத்திருக்கிறது. அத்தனை துணிகளும் எரிந்து கடுமையான உஷ்ணத்தை உண்டாக்கியதால் புகைப் போக்கி சற்றே உள் நோக்கி வளைந்து உருகத் துவங்கியிருக்கிறது. அந்த 'ட' வளைவிற்குப் வெளிப் புறப் பகுதியில்தான் 'டி' பங்க் பயணிகளின் லக்கேஜ் வைக்கப்பட்டிருந்தது. வளைந்து உருகத் துவங்கிய புகைப் போக்கியிலிருந்து தீ மிகச் சுலப மாகப்

தடய அறிவியல் நிபுணர்
டாக்டர் பி. சந்திரசேகரன்



பயணிகளின் லக்கேஜில் பரவத் துவங்கியிருக்கிறது. அதன் தொடர்ச்சியாக 'டி' பங்க் முழுவதும் தீ பரவியிருக்கிறது. முதலில் தீப்பிடித்த ஆபீஸர் மெஸ்ஸில் தீ அணைக்கப்பட்டாலும் புகைப் போக்கிக்குள் இருந்த துணிகள் தொடர்ந்து எரிந்து கொண்டிருந்ததால் இவ்வளவு பெரிய விபத்து நேரிட்டது. அது சரி; புகைப் போக்கியின் 'ட' வளைவுக் கருகில் நைலான் துணிகள் எப்படி வந்தன? அப்போதெல்லாம் (ஏன் இப்போதும் கூடத் தான்) சிங்கப்பூரில் இருந்து துணிகள், ரேடியோ, டேப்ரிகார்டர்கள் கப்பலில் கடத்திக் கொண்டு வரப்படும். யாரோ ஒரு கடத்தல்காரன் ஒரு டன் எடையுள்ள



''வரவர ரொம்பத் திமிரா மனு எழுதிக் கொடுக்க ஆரம்பிச்சுட்டாங்க, ஸார்!''

''ஏன், என்ன விஷயம்?''

''எங்க வீட்டுக் குழாயில காத்து சரியா வரலை, தயவு செய்து கவனிங்கன்னு மனு எழுதிக் கொடுத்திருக்காங்க!''

- வந்தவாசி பா. ஜெயக்குமார்

நைலான் துணிகளை அந்த 'ட' வளைவில் ஒளித்து வைத்திருக்கிறான். அன்று தோசைக் கல்லிலிருந்து (ஹாட்பிளேட்) தீ சற்று குபுக் கென உயரே எழுந்ததால் துணிகள் பற்றிக் கொண்டன. இப்படி சரக்குகளைக் கொண்டு வரும் கடத்தல்காரர்கள், கப்பல் சென்னையை நெருங்கும் போது அந்தச் சரக்குகளைச் சிறிய படகுகளைக் கொண்டு வரும் அவர்கள் கூட்டாளிகளிடம் தூக்கிப் போட்டு விடுவார்கள். அந்த யுக்தி செயல் படுத்தப்படாத போது கஸ்டம்ஸ் அதிகாரிகளைக் கவனித்து வெளியே கொண்டு வருவார்கள். நடுக்கடலில், கப்பலில் பிடித்த 'தீ'யின் மர்மத்தைக் கண்டுபிடித்ததற்கு ஆதாரம், நைலான் பிசின் தடயம்தானே! ஒரு சிறு முடி இழை கூட குற்றவாளியை அடையாளம் காட்டிவிடும்.

நீலகிரி அருகில் ஒரு கல்லூரி மாணவி மர்மமான முறையில் ஒரு புதரில் இறந்து கிடந்தாள். அவள் பலாத்காரத்தின் காரணமாக ஏற்பட்ட அதிர்ச்சியில் இறந்திருக்கிறாள் என்பது போஸ்ட்மார்ட்டத்தில் தெரியவந்தது. இறந்த மாணவியின் உடையில் ஒரு பாமரேனியன் நாய்க்குட்டியின் ரோமம் இருந்தது. அந்த மாணவியின் வீட்டிலோ அல்லது, அவளது சிநேகிதிகள் வீட்டிலோ, பாமேரனியன் நாய் வளர்க்கப்படவில்லை. சந்தேக ஊசி அந்தப் பெண்ணைச் சுற்றிக் கொண்டிருந்த ஓர் இளைஞனின் மேல் இறங்கியது. அந்த இளைஞன் வீட்டில் பொமரேனியன் நாய் வளர்க்கப்பட்டு வந்தது. போலீஸாரின் 'வழக்கமான' விசாரிப்பில் அவன் ஒப்புக் கொண்டான். அந்த இளைஞனின் உடையிலிருந்த நாய் ரோமம், அந்த மாணவியின் உடையில் படிந்துவிட்டது. பொதுவாக இது போன்று சந்தேகமான சூழலில் ஒருவர் இறந்து போனால் அவரது உடைகளை vaccumல் வைத்து சோதிப்போம். முடி இழைகள், நூல் இழைகள், மணல் துகள்கள் ஏதாவது இருக்கிறதா என்பது மைக்ராஸ்கோப் மூலம் பார்த்தால் தெரிந்து விடும். அதே போல அந்தக் கல்லூரி மாணவியின் உடைகளும் சோதனை செய்யப்பட்ட போது தான் நாயின் ரோமம் இருந்தது கண்டு பிடிக்கப்பட்டு, குற்றவாளி அடையாளம் காண உதவியது.

கொலை, குண்டுவெடிப்பு, தீ விபத்து ஆகிய நிகழ்வுகளில் குற்றம் நடந்த இடத்திற்கு முதலில் செல்ல வேண்டியவர் தடய அறிவியல் நிபுணர்தான். அந்த வகையில் அவருக்குப் பல அனுபவங்கள் கிடைக்கும். உடம்பைச் சில்லிட வைக்கும் அனுபவங்களாக அவை இருக்கக் கூடும். இந்த வகையில் என்னால் மறக்க முடியாத விரல்விட்டு எண்ணக் கூடிய சில கொடிய சம்பவங்களில் ஈழப் போராளி பத்மநாபாவின் மரணமும் ஒன்று. கோடம்பாக்கத்தில் இருந்த அவரது அடுக்குமாடி வீட்டில் ஒரு மாலையில் அவர் கொலை செய்யப்பட்டார். அவருடன் இறந்தவர்கள் பதிமூன்று பேர். சம்பவம் பற்றி கேள்விப் பட்டு உடனே அங்கு உதவியாளர்களுடன் விரைந்து சென்றேன். அவரது வீட்டின் உள்ளே நுழைந்து, சம்பவம் நடந்த அறையைப் பார்த்தேன். அதிர்ச்சியில் உறைந்து நின்றேன்!

(தொடரும்)



# தீபா

முதல் காட்சி

**இடம்:** தண்ணி இல்லா காடு... லாரி வீடு.

**பாத்திரங்கள்:** தண்ணீரை வெகு நாட்களாகக் காணாத பாத்திரங்கள், குடம், பக்கெட் இத்யாதிகள் மற்றும் கங்காதரன், அவர் மனைவி காவேரி, மகள் யமுனா

**யமுனா:** அம்மா, அப்பாவைப் பாரு. தொப்பலா நனைஞ்சிண்டு வந்து நிக்கறார்.

**காவேரி:** ஐயையோ அக்கிரமமாய் இருக்கே... யாரைக் கேட்டு இன்னிக்குக் குளிச்சீங்க... எப்படி குளிப்பீங்க...? உங்க முறை வர இன்னும் ஒரு வாரமிருக்கே...

**கங்காதரன்:** பாவிங்களா! ஏன் இப்படி வயித்தெரிச்சலைக் கொட்டிக்கறீங்க. தண்ணி லாரி பின்னாடி ஓடி வேர்த்து விறுவிறுக்க க்யூவிலே நின்னு கிட்டே போகும்போது, லாரியிலே தண்ணி தீர்ந்து போய், உடம்பெல்லாம் வேர்வையிலே நனைஞ்சு திரும்பறேன்... உங்களுக்கெல்லாம் கொழுப்பு; குளிச்சிட்டு வர்றேனான்னு கேட்கறீங்க.




**காவேரி:** ஒரு குடம் லாரி தண்ணி பிடிச்சு வர துப்பில்லே... கோபம் மட்டும் வருதே எனக்கென்ன... உங்களோட குளிக்கிற முறை இன்னும் ஒரு வாரம் தள்ளிப் போகும்.

**யமுனா:** அப்போ வீட்டிலே எத்தனை தண்ணீர் 'ஸ்டாக்' இருக்கு.

**காவேரி:** காலைலே ஏழு லிட்டர் இருந்தது... நீ இன்னிக்குக் குளிச்சே! அக்கிரமத்துக்கு கால் லிட்டர் தண்ணீரை யூஸ் பண்ணியிருக்கே... மீதி ஆறே முக்கால் லிட்டர் இருக்கு.

**கங்காதரன்:** உங்களுக்கெல்லாம் அறிவிருக்கா... அத்தனை தண்ணியை வீட்லே வைக்கக் கூடாதுன்னு எத்தனை தரம் சொல்லியிருக்கேன். உங்களுக்கெல்லாம் பட்டால்தான் தெரியும்.

**காவேரி:** எங்களுக்கு ஒண்ணும் தெரியாமலில்லே... தெருவிலே திருட்டு பயம் அதிகமா இருக்கு... போன புதன்கிழமை ஆபீஸ் போறப்போ ஒரு லேடி 'அறுத்துட்டு ஓடறான் அறுத்துட்டு ஓடறான்'னு கத்தினா. எல்லோரும் ஏதோ தங்கச் செயினைத்தான் அறுத்துட்டு ஓடறான்னு நினைச்சி தொரத்திப் பிடிச்சாங்க... பாத்தா அவன் கையிலே வாட்டர் பாட்டில்! ஸ்நாட்சிங் அதிகமா போச்சு... இந்த அழகில அத்தனை வாட்டரை எந்தத் தைரியத்திலே தெருவிலே தூக்கிட்டுப் போகிறதாம்.

**யமுனா:** இப்படிதாம்மா... நேத்து அடையார்லே பட்டபகலிலே வீட்டிலே நுழைந்து ஃபிரிட்ஜை திருடிட்டுப் போயிருக்காங்க... போலீஸ் கம்ப்ளெய்ண்ட் கொடுத்ததுக்கு 'இது என்னய்யா பிசாத்து சமாசாரம்னு கேஸை எடுத்துக்கலையாம். அப்புறம் அந்த ஃபிரிட்ஜிலே ஒரு பாட்டில் நிறைய தண்ணி இருந்ததுன்னு சொன்னவுடனே கேஸை புக் பண்ணிக்கிட்டாங்களாம்... ரொம்ப ஜாக்கிரதையா இருக்க வேண்டியிருக்கு... அதனாலதாம்மா அப்பா சொல்றாரு.

**காவேரி:** ஆமாமாம்... எனக்கு ஒண்ணும் நீங்க அட்வைஸ் பண்ண வேண்டாம். முதல்லே நீங்க ரெண்டு பேரும் ஒழுங்கா

அகிலா கார்த்திகேயன்

இருங்க பார்ப்போம். ராத்திரி தாகமா இருக்கு. தண்ணி கொண்டாடின்னா நீ ஒரு ஸ்பூன் நிறைய அப்பாவுக்குக் கொண்டு போறே... அதையும் ஒழுங்கா குடிச்சுத் தொலைக்காம அந்த ரெண்டு சொட்டை கீழே வேற சிந்தறார். காய்கறியை எல்லாம் பச்சையா போட்டா சாப்பிடாம வேக வைக்கணும்னு அடம் பிடிக்கறார். வேக வைக்க அத்தனை தண்ணிக்கு எங்கே போறது?

**கங்காதரன்:** நானென்ன ஆதிவாசியா... பச்சை பச்சையா சாப்பிடறதுக்கு...

**காவேரி:** பச்சையா சாப்பிட்டா என்ன வாம்... சரி போனா போகுதுன்னு இன்னிக்கு வேக வைச்ச சமையல் பண்ணியிருக்கேன்.

**கங்காதரன்:** அடி சக்கை... என்ன சமையல்.

**யமுனா:** அப்பா ரொம்ப சந்தோஷப் படாதீங்க... வேக வைக்க தண்ணி அவசியப் படாத காய் ஒண்ணே ஒண்ணு இருக்கு... அதுலேதான் இன்னிக்கு எல்லாம்... தர் பூசணி கூட்டு, தர்பூசணி பொரியல், தர் பூசணி சாம்பார்.

**கங்காதரன்:** அட சனியனே... இந்தக் கொடுமையிலிருந்து விடுதலை கிடைக்காதா?

**யமுனா:** 'கிருஷ்ணா' வந்தாதாம்பா விடிவுகாலம்.

*(தரகர் 'அருணாஜலம்' உள்ளே வருகிறார்)*

**அருணாஜலம்:** அட உம்ம பொண்ணு யமுனாவுக்கு ஒரு பேஷான வரன் வந் திருக்கு. பையன் பேரு 'கிருஷ்ணா' வாட்டர் போர்டிலே என்ஜினியரா இருக்கான். அப்பா தணிகாஜலம் வாட்டர் டிவைனர்... அம்மா கோதாவரி. பூர்வீகம் ஜலகண்டா புரம்.

---

**"இன்னும் கொஞ்சம் பெரிசா வாயைத் திறங்க..."**

**"இதுக்கு மேல திறந்தால் வாய் கிழிஞ்சிடும் டாக்டர்...?"**

**"எப்படியும் என்னோட டார்ச்லைட்டை வெளியே எடுத்தாகணுமே சார்...!**

**— சீர்காழி வி. ரேவதி**



**கங்காதரன்:** பையனுக்கு எந்த ஊர்லே வேலை?

**அருணாஜலம்:** பவானி சாகர்லே வேலை... ஜாதகம் ரெண்டும் பொருந்தி யிருக்கு. பொண்ணை எப்போ பார்க்க வர லாம்னு கேட்கறாங்க.

**கங்காதரன்:** அதுக்கென்ன... தண்ணி லாரி வாரத நாளா பாத்துச் சொல்லிடறோம்.

**அருணாஜலம்:** அதுலே ஒரு சிக்கல்... அவங்களுக்கு இந்த ஊர்லே சொந்தக் காரங்க இல்லே... அதனாலே நேரே இங்க வந்துதான் தங்கியாகணும்.

**கங்காதரன்:** அத்தனை பேரும் இங்க வந்து குளிச்சி தெளிச்சாகணும்னா கம் மாவா... அத்தனை தண்ணிக்கு எங்கே போறதாம்? இந்த வரனே வேண்டாம்னு சொல்லிடுங்க.

**காவேரி:** நல்லாயிருக்கு போங்க நீங்க பேசறது... கொஞ்சம் கூட பொறுப்பில்லாம! எப்படியோ வயத்துக்குத் தண்ணி காட்டாம, வாய்க்குத் தண்ணி காட்டாம சேகரிக்க வேண்டியதுதான். என் தம்பியை அவன் ஊரிலிருந்து நாலு குடம் தண்ணி கொண்டு வரச் சொல்லி எழுதறேன். பக்கத்து வீட்டு மாமிகிட்டே தினம் ஒரு பாக்கெட் தண்ணி வாங்கி சேகரிச்சுக்கலாம்... அப்பப்ப அந்த மாமிக்கு நாம் ஆயிரம் இரண்டாயிரம்னு கொடுத்து உதவி பண்ணலையா... அதை வேணா திருப்பித் தர வேண்டாம்னு சொல் லிட்டா போச்சு... தரகர் சார்... இருபது நாள் கழிச்சு ஒரு நாள் பாருங்க... நாங்க ரெடி ஆயிடறோம்...

**அருணாஜலம்:** ஹி...ஹி...ஹி... ரொம்ப சரி... ஹிஹி... அப்ப என் கமிஷன்... கொஞ் சம் அட்வான்ஸ்...

நூறு ரூபாய் நோட்டை பர்ஸிலிருந்து கங் காதரன் நீட்ட, அருணாஜலம் அதிர்ச்சி அடைகிறார்.

**அருணாஜலம்:** ரூபாய் யாருக்கு சார் வேணும்? நூறு மில்லி தண்ணி கொடுங்க...

*(இப்போது கங்காதரன் அதிர்ச்சி அடைகிறார்)*

**இரண்டாவது காட்சி**

இடம்: தண்ணீர்க் காடாய் அதே வீடு

பாத்திரங்கள்: இருபது நாளாய்க் குளிக் காத அதே உயிருள்ள பாத்திரங்கள் மற்றும் கிருஷ்ணா, தணிகாஜலம், கோதாவரி, தண்ணீரில் மிதக்கும் குடம், பக்கெட், டம்ளர், இத்யாதிகள்...

**கங்காதரன்:** ஏண்டி இப்படி பாடாய்ப் படுத்தி இத்தனை தண்ணியைச் சேர்த்துட்டே வர்றவங்க பொண்ணைப் பார்க்க வராங்களா... தண்ணியைப் பார்க்க வர்றாங்களா...

**காவேரி:** நீங்க பேசாம இருங்க... பவானியிலிருந்து வர்றவங்களுக்கு மெட்ராஸ் தண்ணி கஷ்டத்தைக் காட்டணுமா என்ன... ஊர்லேருந்து வர்றவங்க குளுகுளுன்னு குளிச்சிட்டு ஜில்லுனு பொண்ணைப் பார்த்தாதானே நல்லாயிருக்கும்... நாம அரை டம்ளர், ஒரு டம்ளர் தண்ணிக்கு லாட்டரி அடிக்கிறதா அவங்ககிட்டே காட்டிக்கணுமா அதனாலதான் இருபதுநாளா சிக்கன நடவடிக்கை எடுத்து சேர்த்திருக்கேன்... இப்போ அவங்க வந்தா தாராளமா எடுத்து செலவு பண்ணலாமே...

**கங்காதரன்:** இன்னிக்காவது நான் குளிக்கலாமில்லே...

**காவேரி:** மூச்... இன்னிக்கு கங்காதரன் ஸ்நானம் கிடையாது... யமுனா ஸ்நானம் மட்டும்தான் சாங்ஷன் பண்ணியிருக்கேன்... இன்னும் ரெண்டு மூணு நாளில் தீபாவளி.... அப்போ கங்காஸ்நானம் கங்காதரன் பண்ணினா போதும்...

**கங்காதரன்:** அடிப்பாவி...! உன் தலையிலே இடி விழ...

**காவேரி:** ஆமாம்... சாபமாவது ஒழுங்கா விடத் தெரியுதா பாரு.... இடி மின்னல் மழைன்னு... நடக்கக்கூடியதாச் சொல்லுங்க. *(பெண் பார்க்க பிள்ளை வீட்டார் வருகிறார்கள்)*

**கங்காதரன்:** வாங்க... வாங்க... பார்த்து மெதுவா வாங்க... வீடெல்லாம் ஒரே தண்ணி. வழுக்கிட போறது...

**தணிகாஜலம் (பிள்ளையின் அப்பா):** ஆகா... நல்ல சகுனம். வரும்போதே தண்ணீன்னு காதுலே விழுதே.

**கோதாவரி (பி.அம்மா):** சரி, சரி, வந்த உடனேயே வழியாதீங்க... பெண்ணைப் பிடிக்க வேண்டாமா?

**கோதாவரி:** யாரும் குளிக்கக் கூடாது... சம்பந்தம் பேச வந்த இடத்திலே கையையே நனைக்கக் கூடாதுன்னு சொல்றது வழக்கம்... நீங்க ரெண்டு பேரும் உடம்பையே நனைக்கறேன்னா எப்படி... முதலில் பெண்ணைப் பார்ப்போம்... ஆங் மாமி பெண்ணைக் கொஞ்சம் தண்ணி கொண்டு வரச் சொல் நீங்களா... ஒரே தாகமா இருக்கு. குடிக்கணும்.

*(யமுனா பெரிய சொம்பில் தண்ணீர் கொண்டு வந்து கோதாவரி மாமி முன்னால் வைக்கிறாள்)*



''நம்ம இன்ஸ்பெக்டர் ஐயா புது சினிமா எடுக்கப் போறாராம்!''

''வெரிகுட்... படத்தோட பெயர்?''

''கேடி வாழ்ந்தால் கோடி நன்மை!''

— புளியரை கணேசன்

---

**கோதாவரி:** ஏம்மா... இத்தனை தண்ணி எதுக்கு... நாங்கதான் குளிக்கப் போறதில்லையே.

**யமுனா:** இது குடிக்கிற தண்ணி மாமி.

**காவேரி:** ஹி..ஹி.. எங்க யமுனா தண்ணி விஷயத்திலே கொஞ்சம் தாராளம்.

**கோதாவரி:** தாராளம்னா... குளிச்சிண்டு இருக்காளா?

**தணிகாஜலம்:** என்னடி இது கேள்வி.... கல்யாணமாகாத பொண்ணைப் பார்த்து...

**கோதாவரி:** நான் ஆர்டினரி குளியலை தான் சொன்னேன்.

**கங்காதரன்:** ஓகோ அதுவா என் பொண்ணு தினமும் ரெண்டு தரம் குளிக்கலைன்னா சரிபடாது... ரொம்ப சுத்தம்.

**கோதாவரி (யமுனாவிடம்):** சரி ஒரு புடைவை அலச எத்தனை பக்கெட் தண்ணி யூஸ் பண்ணுவே.

**யமுனா:** புடைவையை எல்லாம் அலசற வேலை இல்லே... வருஷத்துக்கு ஒரு தரம் கட்டறதாலே... சூடிதார். சல்வார் கம்மீஸ் தான். சல்வாருக்கு ஒரு பக்கெட். கம்மீஸ்க்கு இன்னொரு பக்கெட். துப்பட்டாவுக்கு அரை... கடைசியா மொத்தமா எல்லாத்தையும் அலச ஒரு பக்கெட் ஆக மொத்தம் மூணரை பக்கெட்.

**கோதாவரி:** சரி. உன்னோட ஹாபி என்ன?

**யமுனா:** தோட்டத்துக்கெல்லாம் தண்ணி ஊத்துவேன்... அப்பப்ப வீட்டைக் கழுவி சுத்தம் பண்ணுவேன்.

**கோதாவரி:** படம் பார்ப்பியா?

**யமுனா:** ஓ... பார்ப்பேனே.

**கோதாவரி:** யார் படத்தை விரும்பி பார்ப்பே?

**யமுனா:** மணிரத்னம் படம்தான்... அதுலேதான் மழை சீன் வரும்...



"டாக்டர், நீங்க பயங்கரமான கிரிக்கெட் ரசிகரா இருக்கலாம்; அதுக்காக நெஞ்சு வலிக்குதுன்னு சொன்னா, 'ஆன் சைடா? ஆஃப் சைடா?'ன்னு கேக்கறது நல்லது இல்லே!"

— சீர்காழி வி. ரேவதி

**கோதாவரி:** ஒரு பாட்டு பாடு கேட்போம்.

**யமுனா (பாடுகிறாள்):** நதியே... நதியே... காதல் நதியே...

*(கோதாவரி முறைக்க, யமுனா பாட்டை நிறுத்துகிறாள்)*

**கிருஷ்ணா:** ஏன் பாட்டை நிறுத்தி விட்டாய்.

**யமுனா:** உங்க அம்மா முறைத்து விட்டாள்.

**கோதாவரி:** மாதங்களில் சிறந்தது எது?

**யமுனா:** ஐப்பசி... அந்த மாதத்திலே தானே அடை மழை.

**கோதாவரி:** சரி போதும்... எல்லோரும் கிளம்புங்க... இந்த இடம் நமக்கு ஒத்து வராது... இந்தப் பொண்ணு தண்ணி கஷ்டமே தெரியாம வளர்ந்திருக்கு... ஏதோ மெட்ராஸ் பொண்ணாச்சே தண்ணி கஷ்டம் அறிந்து பொறுப்பா இருப்பான்னு வந்தது தப்பாப் போச்சு... நம்ப ஊர் தண்ணி கஷ்டத்துக்கு இவ லாயக்கில்லே.... ஆச்சுன்னு கிளம்புங்க..... தரகர் இன்னொரு இடம் சொல்லியிருக்கார்.

**காவேரி:** நீங்க சரின்னு சொன்னாலும் உங்க சம்பந்தம் எங்களுக்கும் வேண்டாம். ஏதோ போற இடத்திலேயாவது எங்க பொண்ணு தண்ணி கஷ்டம் இல்லாமே இருக்கணும்னு நினைச்சோம்... அங்கேயும் தண்ணி கஷ்டம்னா எங்க பொண்ணு அங்க வந்தும் கஷ்டப்பட என்ன தலையெழுத்தா...

**கோதாவரி:** ஓகே. நாங்க வர்றோம்... டேய் கிருஷ்ணா எங்கேடா போய்த் தொலைஞ்சே... கிளம்பு...

**காவேரி:** எங்கே யமுனாவையும் காணோம்.

**தணிகாஜலமும் கங்காதரனும்:** ஹி..ஹி... நாங்கதான் இரண்டு பேரையும் தண்ணியா பேச... அடச்சே..! தனியா பேசிட்டு வாங்கன்னு அனுப்பியிருக்கோம்.

*(இருவரும் தனியாகப் பேசிவிட்டு' வருகிறார்கள்)*

**கிருஷ்ணா:** அம்மா நீ நினைக்கறது போல யமுனா இல்லேம்மா... நல்ல தண்ணி சிக்கனம் தெரிஞ்சவ... சும்மா கேள்விக்குப் பதிலையாவது தண்ணி சம்பந்தமா சொல்லி ஆதங்கத்தைத் தீர்த்துக்கிட்டு இருக்கா... தண்ணின்னு சொன்னா நாக்கு ஜில்லுன்னு போயிடுமான்னு சும்மா கற்பனையா சொன்னாளாம்... எனக்குப் பிடிச்சிருக்கு.

**யமுனா:** எனக்குக் கூட கிருஷ்ணாவைப் பிடிச்சுப் போச்சுப்பா... தண்ணி லாரி பின்னாடி ஓடறது , சைக்கிள்ளே நாலு கிலோ மீட்டர் போய் தண்ணி அடிச்சிட்டு வர்றது எல்லாம் அத்துபடி. ஒரு டம்ளர் தண்ணியிலேயே குளிக்கக் கூட தெரியுமாம்... அப்புறம் கேன் கேனா தண்ணி கிம்பளமா வேற வருதாம். 'உன்னை கண் கலங்கும்படியா பார்த்துப்பேன் போதுமா'ங்கறாரு.

**கங்காதரன்:** என்ன கண் கலங்கும் படியா பார்த்துப்பாரா?

**யமுனா:** ஆமாம் கண்கலங்கினாதானே தண்ணி வரும்.... அதையும் விட்டு வைப்பானேன்னு சொல்றார். அதனாலே இந்த மாப்பிள்ளையே எனக்கு முடிச்சிடுங்கப்பா...

**கோதாவரி:** உங்க ரெண்டு பேரு மனசும் ஒத்துப்போனா சரி... நிச்சயம் பண்ணிட வேண்டியதுதான்.

**காவேரி:** நிச்சயதார்த்தம் எங்கே வைச்சுக்கலாம்?

**கோதாவரி:** எங்களுக்கு வரதட்சணை ஒண்ணும் வேண்டாம். நிச்சயதார்த்தத்தை உங்க வீட்டிலேயே அதுவும் தீபாவளி அன்னிக்கு வைச்சுட்டா போதும். எங்க மனுஷாளெல்லாம் கங்காஸ்நானம் பண்ண ஏற்பாடு பண்ணினா போதும்.

**காவேரி:** அதுக்கென்ன? பேஷா பண்ணிடலாம்.... *(கங்காதரனிடம்)* இதோ பாருங்கோ... இன்னியிலேர்ந்து நீங்க வாளியும் கையுமா லாரி பின்னாடி அலையறீங்க. அப்பதான் தீபாவளிக்கு அத்தனை பேருக்கும் குளிக்க தண்ணி சேகரிக்க முடியும்.

**கங்காதரன்:** என்ன...? தீபாவளின்னு சொல்லாதே... தீபா'வாளி'ன்னு சொல்லு.

# வட்டமேஜை

# சரியான எச்சரிக்கை!

✉ தொழில் நஷ்டம் ஏற்பட்டபோதும் மனம் ஒடிந்து போகாமல் உண்மையை உரைத்து, உழைப்பை நம்பி மறுபடியும் நகை வியாபாரத்தைத் தொடங்கி அதில் வெற்றி வாகை சூட நினைக்கும் பாலு ஜுவல்லர்ஸ் ஐயப்பனுக்கு முதலில் வாழ்த்துக்களை தெரிவித்துக் கொள்வோம்.

**லால்குடி, இராஜேந்திரன்**

✉ சரித்திர சான்றுக்கு சாட்சியாக திகழும் கங்கை கொண்ட சோழபுரம் கரைந்து வருவது வருத்தம் அளிக்கிறது. தொல் பொருள் ஆய்வுத் துறை தூக்கம் கலைந்து தொடர வேண்டும் தூய பணி.

**கல்விடைக்குறிச்சி, திருவருள் லத்தீப்**

✉ தத்துப்பிள்ளை என்று சொல்வதால் சிக்கல்கள் ஏற்படுமோ என்று கவலைப்படுவதைவிட சொல்லாவிட்டால் விளையக்கூடிய ஆபத்துக்கள் அதிகம் என்பதை உணர வேண்டும் என்று மணிமேகலை குமார் கூறியிருப்பது குழந்தைகளை தத்தெடுத்து வளர்ப்பவர்களுக்கு ஒரு சரியான எச்சரிக்கை.

**சென்னை, கே.வி.ராமன்**

✉ 'ராவ் நடத்திய லஞ்ச அரசியல்' தலையங்கம் எங்களின் எண்ணங்களை அப்படியே பிரதிபலித்தது. சட்டத்தின் பிடியிலிருந்து எப்பேர்ப்பட்டவரும் தப்ப முடியாது என்பதை அரசியல்வாதிகள் உணர்ந்து இனியாவது நடப்பார்களா? தவிர லஞ்சம் பெற்றவர்களுக்குத் தண்டனை இல்லை. லஞ்சம் கொடுத்தவர்களுக்குத்தான் தண்டனை என்பது மனத்தை வருந்தச் செய்துள்ளது. சிந்தினைக்கு உரிய தலையங்கம்! பாராட்டுகள்.

**திருவண்ணாமலை, என்.சண்முகம்**

✉ முதுமை காரணமாக வீட்டினரால் ஒதுக்கப்பட்டு, பேசக்கூட ஆள் இல்லாத நிலையில் மிகவும் நொந்து, பேசுவதற்கு யாராவது அகப்படமாட்டார்களா என்று அலையும் முதியவரின் நிலையைப் படம் பிடித்துக்காட்டிய ஜி.ஆர்.சுரேந்தர்நாத்தின் 'கொடிது கொடிது' சிறுகதை அருமை.

**திருப்பரங்குன்றம், டி.கே.சுப்பிரமணியன்**

✉ ஜெயலலிதா போலல்லாமல் மம்தாவின் பெரியபலம் அவரது கறைபடியாத கரங்கள்தான் என்று, இருவருக்கும் உள்ள வேறுபாடுகளை அழகாக ஒப்பிட்டுவிட்டு, அதன்பிறகு என்ன வேண்டியதிருக்கிறது. 'உருவம் இரண்டு உணர்வு ஒன்றுதான்' என்ற தலைப்பு.

**மடிப்பாக்கம், அஸ்வதிமணாளன்**



✉ இருபத்தி ஆறு வாரங்களாக ஆங்கிலத்துடன் எங்கள் அருகில் வந்த விவேகானந்தா கல்வி நிலையத்தின் வி. ராஜகோபாலனுக்கும் கல்கிக்கும் நன்றி. தொகுத்து சிறு புத்தகமாக வெளியிட்டால் மிகவும் உபயோகமாக இருக்கும்.

**விருதுநகர், வனஜா ராணி**

✉ ஆங்கிலத்தை எங்கள் அருகில் அழைத்து வந்து என் போன்றோரின் அச்சத்தைப் போக்கி ஆங்கிலத்தில் பேச ஆர்வத்தையும் தன்னம்பிக்கையையும் வழங்கிய வி. ராஜகோபாலுக்கு மிக்க நன்றி. Thanks a lot.

**திருவாரூர், ந. இராஜேஸ்வரி**

✉ 'ஆங்கிலமே அருகில் வா' தொடர் All the best கூறி முடிவுற்றதும் ஆங்கில வரிசை எழுத்துக்கள் இருபத்தி ஆறுக்குப் பதிலாக 52 ஆக இருக்கக் கூடாதா என்ற ஏக்கம் நெஞ்சில் எழுந்தது. கோபுலுவின் ஓவியங்கள் தொடருக்குப் பக்கபலமாய் இருந்தன!

**நெய்வேலி, சு.ஸ்ரீகாந்த்**

✉ ஓரளவே ஆங்கிலம் தெரிந்திருந்த என்னை என் பிள்ளைகளுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கும் அளவுக்கு 'ஆங்கிலமே அருகில் வா' தேற்றிவிட்டது என்றால் மிகையாகாது.

**பெத்தானியாபுரம், வி.பி.மகராசி**

# ஜுவல்லரி டிசைனிங்



மும்பையில் மிகச் சிறந்த இரண்டு பயிற்சி நிலையங்கள் ஜுவல்லரி டிசைனிங்கில் டிப்ளமா வகுப்பு நடத்துகின்றன.

ப்ளஸ் டூ பாஸ் செய்திருந்தால் போதும். இரண்டு நிலைகளாக டெஸ்ட் உண்டு. தேறிவிட்டால் நேர்காணல்!

முகவரிகளைக் குறித்து வைத்துக் கொள்ளுங்கள்:

1. The Gemmological Institute of India,
29, Gurukul Chambers,
187-189
Mumbadevi Road
Mumbai 400 002.

2. Jasani Department of Jewellery
Design & Manufacture, 3rd Floor,
P.V. Polytechnic
SNDT Women's University
Juhu Campus,
Santa Cruz (W)
Mumbai
400 049.

குறுகிய காலப் பயிற்சி அளிக்கும் நிலையங்களும் இருக்கின்றன.

அவை:

1. Department of Geology,
St. Xavier's college
Mumbai 400 001.

2. Indo - American Society
Kitab Mahal,
Near New Excelsior Cinema, Fort,
Mumbai 400 001.

இவை தவிர, 24 வார, 48 வார, 52 வார விரிவான பயிற்சி வகுப்புகளை, சூரத்தில் கீழ்க்கண்ட முகவரியில் நடத்துகிறார்கள்.

Indian Diamond Institue
Katargam, GIDC, Sumul Dairy Road,
SURAT 395 008.

இருபத்திநான்கு வார வகுப்புகளில் ஜுவல்லரி டிசைனிங் மட்டுமே சொல்லித் தருகிறார்கள். 48 வார

வகுப்புகளில் Jewellery Manufacturing Machine Cast கற்பிக்கிறார்கள். 52 வாரப் பயிற்சி, பட்டதாரிகளுக்கு மட்டுமே. இதில் டிசைனிங் தவிர, Manufacturing & Apprasing பாடங்கள் கூடுதலாகக் கற்பிக்கப்படுகின்றன.

நமக்கு இந்த விவரங்கள் தந்த மும்பை ஜுவல்லரி நிறுவன அதிபர் ஒருவர், டிசைனிங் செய்பவர்கள் சந்திக்க வேண்டிய சவால்களையும் குறிப்பிட்டார்.

மிக நுணுக்கமான வேலைப்பாடுகளைத் தயாரிப்பதால் வெகு கவனமாகச் செய்ய வேண்டும். கான்சென்ட்ரேஷன் மிக அவசியம். குனிந்து



ஃபினிஷிங், பாலிஷிங், பிளேடிங், டெக்னிகல் டிராயிங், ஜெம்மாலஜி, கம்ப்யூடர் டிசைனிங், காஸ்ட்யூம் ஜுவல்லரி, பிஸினஸ் அன்ட் மார்க்கெட் ரிசர்ச் இத்தனையும் அடங்கும்.

வருடா வருடம் வளர்ந்துகொண்டே வரும் தங்க, வைர நகை வணிகத்தில், டிசைனர்களின் தேவையும் அதிகரித்துக் கொண்டே போகிறது.

இயற்கையாகவே டிசைனிங்கில் ஆர்வம் உள்ள இளைஞர்களும் இளைஞிகளும் அதனால்தான் ஜுவல்லரி டிசைன் பயிற்சி வகுப்புகளில் ஆர்வம் காட்டி வருகிறார்கள்.



ஒரு ஜுவல்லரி நிறுவனத்தில்



# எங்கு படிக்கலாம்?

உட்கார்ந்து டிசைன் செய்வதால் சற்றுக் கஷ்டமாகத்தான் இருக்கும். அதற்குப் பழகிக் கொள்ள வேண்டும். CAD/CAM வசதியுள்ள கம்ப்யூட்டர்கள் இருந்தால் டிசைன்கள் வெகு எளிதாகவும், துல்லியமாகவும் தயாரிக்க முடியும். விரைவாகவும் முடியும்.

ஜுவல்லரி டிசைன் கோர்ஸில் பேஸிக் டிசைன், அட்வான்ஸ்ட் டிசைன் ஃபர் புரொடிக்ஷன், லோக்கல் மார்க்கெட் மற்றும் எக்ஸ்போர்ட், பெஞ்ச் வொர்க்கிங், ஸ்டோன் ஸெட்டிங், டெகொரேடிவ் பிராஸஸ், காஸ்ட்டிங்,





சேர்ந்துதான் வேலை பார்க்க வேண்டும் என்றில்லை. தனிப்பட்ட முறையில் freelancer ஆகவும் இந்தத் தொழிலில் ஈடுபடலாம்.

மும்பைக்கும், சூரத்துக்கும் போய்த்தான் படிக்க வேண்டுமா, சென்னையில் இல்லையா? என்று கேட்கலாம்.

சென்னை தரமணியில், தங்க நகை வடிவமைப்புத் தொழில் நுட்பப் பயிலகம்- ஜுவல்லரி பாலிடெக்னிக் - இருக்கிறது. கோல்டு ஸ்மித்திங், ஸ்டோன் கட்டிங், காஸ்டிங், குவாலிடி கன்ட்ரோல் எல்லாம் இந்தப் பயிற்சியில் உண்டு. தர்மாம்பாள் பாலிடெக்னிக் வளாகத்தில் அமைந்திருக்கிறது.

# பாராளுமன்றத்துக்கு வந்த 'குரோர்பதி!'

'கௌன் பனேகா குரோர்பதி' நிகழ்ச்சியில் அமிதாப் கேட்ட கேள்வி இது. "ஆளுனரின் பதவிக்காலம் எவ்வளவு?" கொடுக்கப்பட்ட நான்கு விடைகளில் "ஐந்து வருடங்கள்" என்பதுதான் சரியான விடையென்று விஷயமறிந்தவர்கள் அறிந்திருக்க, "ஜனாதிபதி விரும்பும்வரை" என்ற பதிலே சரியானது என்றது அமிதாப் லாக் செய்த கம்ப்யூட்டர். சில நாட்களில் தாங்கள் கூறியவிடை சரியானது அல்ல என்று அறிவித்தார்கள். ஸ்டார் டீ.வியின் நல்ல காலம் இந்தக் கேள்விக்குப் பதிலளித்தவர் மேலே குறிப்பிட்ட இரண்டு விடைகளையுமே சொல்லாமல் "பிரதமந்திரி விரும்பும்வரை" என்று பதிலளித்து அவுட்டானார். அவர் மட்டும் "ஐந்து வருடங்கள்" என்று கூறி அவுட்டாக்கப்பட்டிருந்தால் அது பரபரப்பான விஷயமாகியிருக்கக் கூடும்.

ஆனால் பிரான்ஸில் இந்த நிகழ்ச்சி பாராளுமன்றம் வரை சென்றிருக்கிறது. "இந்த" என்றால் அமிதாப் நடத்தும் ஸ்டார் டீ.வி. நிகழ்ச்சியல்ல. அங்கும் இதேபோல் "யாருக்குக் கோடீஸ்வரராக ஆசை?" என்ற இதேபோன்ற தொலைக்காட்சி நிகழ்ச்சி உண்டு. அதில் கேட்கப்பட்ட ஒரு கேள்விதான் பிரச்னைக்கு வித்திட்டது.

"டின்டின் மேற்கொண்ட சாகசப் பயணங்களின் போது கேப்டன் ஹாடக் என்பவருக்கு மருத்துவ சிகிச்சை செய்த டாக்டரின் பெயரென்ன?" இந்தக் கேள்விக்கு அளிக்கப்பட்டிருந்த நான்கு விடைகளில் எது சரியானது என்று தெரியவில்லை அந்த நிகழ்ச்சியில் கலந்து கொண்டவருக்கு. தமக்கு அளிக்கப்பட்ட "லைஃப் லைன்"களில் ஒன்றான "பார்வையாளர்களின் முடிவு" என்பதை நாடினார். பார்வையாளர்களில் 73 சதவிகிதத்தினர் "டாக்டர் ரெளட்யூல்" என்ற சரியான விடையைக் குறிப்பிட்டனர். அதை வழிமொழிந்து, அதற்குப் பிறகு கேட்கப்பட்ட கேள்விகளுக்கும் அவர் சரியான விடைகளை அளித்து, நாலு மில்லியன் ப்ராங்குகளை அள்ளிச் சென்றார்.

உடனே பிரான்ஸின் பல பகுதிகளில் ஒரு பயங்கரமான சந்தேகம் எழுப்பப்பட்டது. "நிகழ்ச்சியே (பார்வையாளர்கள் உட்பட) ஒரு செட்டப்போ?" இந்த சந்தேகம் எழுந்ததற்குக் காரணம், எக்கச்சக்கமான டின்டின் காமிக்ஸ்களில் ஒன்றே ஒன்றில் (டெஸ்டினேஷன் மூன்) இடம் பெற்ற ஒரே ஒரு கார்ட்டூனில் மட்டுமே வந்து போகிறது டாக்டர் ரெளட்யூல் என்பவரின் பெயர். அப்படியிருக்க பார்வையாளர்களில் 73% பேர்களுக்கு இது எப்படி நினைவில் இருக்க முடியும்? இதனால்தான் அந்த ஐயம். டின்டின் காமிக்ஸ் படிக்கும் பிரெஞ்சுக்காரர்கள் நிறையபேர் உண்டு (ஆங்கிலத்தில் வருவது மொழிபெயர்ப்பு. மூலம் பிரெஞ்சுமொழிதான்) என்ற சமாதானத்தைப் பலர் ஏற்றுக் கொள்ளவில்லை. பல எம்.பி.க்கள் இது குறித்து அந்த நாட்டுப் பாராளுமன்றத்தில் காரசாரமாக விவாதிக்கத் தொடங்கியுள்ளனர்.

— ஜி.எஸ்.எஸ்.

**சி.டி.ஜி. என்ற சுற்றுச் சூழல் அமைப்பின் அழைப்பின் பேரில் ஜெர்மனியில் நடந்த மாநாடு ஒன்றில் கலந்து கொண்டார் பா.ம.க. தளபதியும், 'பசுமைத் தாயகம்' என்ற அமைப்பின் தலைவருமான டாக்டர் ஆர். அன்புமணி. அந்த அனுபவங்களை நம்மிடம் பகிர்ந்து கொண்டார்.**

● நான் கலந்து கொண்ட மாநாடு ஜெர்மனியில் உள்ள ஹானோவர் நகரில் நடந்தது. ஹானோவர் இயற்கை தேவதையின் இருப்பிடம். எங்கு நோக்கினும் பசுமை. 'டிரிம்' செய்யாமலேயே சாலையின் இருபுறமும் வைக்கப்பட்டிருக்கும் மரங்கள் ஒரே அளவாக வளர்ந்து வருவது கண் கொள்ளாக் காட்சி. ஒரு உள் அரங்கத்தில் rain forest போன்றே அமைத்திருக்கிறார்கள்.

● ஜெர்மன்காரர்களுக்கு உதவும் மனப்பான்மை அதிகம். ரயில்வே ஸ்டேஷனில் எங்கே டிக்கெட் வாங்க வேண்டுமென்று கேட்டால் கூடவே வந்து டிக்கெட் வாங்கிக் கொடுத்து, பிளாட்பாரத்திலும் விட்டுச் செல்கிறார்கள்.

● ஹானோவரில் வீடுகளுக்கும், கடைகளுக்கும் 'கிரில்' வைத்த கதவுகளையோ, ஜன்னல்களையோ வைப்பதில்லை. எல்லாம் கண்ணாடி கதவுகள், ஜன்னல்கள்தான். இரவானால் கடைகளின் உள்ளே விளக்கைப் போட்டுவிட்டு பூட்டி போய்விடுகிறார்கள். பூட்டி இருந்தாலும் கடையில் என்னென்ன இருக்கிறது என்பதைத் தெரிந்து கொள்ளலாம்!

● ஜெர்மன் மக்களுக்கு சுற்றுச் சூழல் மீது ஆர்வமும், அக்கறையும் அதிகம். இல்லையென்றால் அதற்காகவே போராடும் கிரீன் பார்ட்டியை நாடாளுமன்றத் தேர்தலில் 47 இடங்களில் வெற்றிபெற வைப்பார்களா? ஆளும் கூட்டணியில் கிரீன் பார்ட்டி சார்பில் மூன்று அமைச்சர்கள் உண்டு.

● அங்கே எம்.பி. அமைச்சர்களையெல்லாம் நம்ம ஊர் போல எப்போதும் பார்க்க முடியாது. எல்லோருக்கும் தனியாக



● க்ரீன் பார்ட்டி எம்.பியுடன் அன்புமணி

அலுவலகம் உண்டு. அங்கே பத்திலிருந்து ஐந்துவரை அலுவலக நேரத்தில், வார நாட்களில் மட்டும் பார்க்கலாம். சனி, ஞாயிறு அன்று தலையே போவதாக இருந்தாலும் நோ அப்பாயின்ட்மென்ட்.

● ஹானோவரிலிருந்து பெர்லினுக்கு ரயிலில் சென்றேன். தூரம் 250 கி.மீ. மாலை 3.01 புறப்பட்ட ரயில் அறிவித்தபடி சரியாக, 4.27க்கு பெர்லின் ஸ்டேஷனுக்குள் நுழைந்தது. ஏதோ விமானத்தில் செல்வது போன்ற அனுபவம்.

● கிழக்கும்-மேற்கும் இணைந்த ஜெர்மனியின் இடையில் 150கி.மீ. தூரத்துக்கு இருந்த பெர்லின் சுவர் உடைத்தெறியப்பட்டது அல்லவா. வரலாற்றை நினைவு படுத்தும் வண்ணம் 200 மீட்டர் சுவரை உடைக்காமலேயே வைத்திருக்கிறார்கள். கம்யூனிஸ்ட் பிடியில் இருந்த கிழக்கு ஜெர்மனி பகுதி கொஞ்சம் கூட வளர்ச்சியடையாமல் இருப்பதும், மேற்கு ஜெர்மன் பகுதி வளமாக இருப்பதும் மக்களைப் பார்த்தால் பளிச்சென்று தெரியும். இப்போது கிழக்கு ஜெர்மனி பகுதியில் எங்கு பார்த்தாலும் பழைய கட்டடங் களை இடித்து விட்டுப் புதிதாகப் பலமாடிக் கட்டடங்கள் கட்டும் வேலைகள் பரவலாக நடந்து வருகின்றன.

● இந்தியா திரும்பும் வழியில் லண்டனில் இரண்டு நாட்கள் தங்கியிருந்தேன். என்னுடன் மருத்துவம் படித்த நண்பர்களில் 32 பேர் லண்டனில் தொழில் செய்கிறார்கள். ஒரே அரட்டை, ஊர் சுற்றிப் பார்த்தல் என்று பொழுது கழிந்தது. லண்டன், திருடர்கள் ஊர் ஆகிவிட்டது என்கிறார்கள். பார்க் செய்துவிட்டு, ஷாப்பிங் சென்று திரும்பி வந்தால் காரிலுள்ள ஏ.சி.மிஷின், டேப்ரிகார்டர் எல்லாம் காணாமல் போய் இருக்குமாம். ஏன், சமயத்தில் காரே காணாமல் போய்விடுமாம். லண்டனில் 1600 பிச்சைக்காரர்கள் இருப்பதாகக் கணக்கெடுத்து வைத்திருக்கிறது அரசு. "யாரும் அவர்களுக்குப் பிச்சை போட வேண்டாம்" என்றும் அரசு விளம்பரம் செய்கிறது.

● லண்டன் விமான நிலையத்தில் பெட்டியைக் கீழே வைத்துவிட்டு ஏதோ வேலையாக அருகில் உள்ள கவுண்டருக்குப் போய்த் திரும்புவதற்குள் யாரோ என் சூட்கேசுடன் ஜூட் விட்டுவிட்டார்கள். உள்ளே உடைகள், விஸிட்டிங் கார்டு, லெட்டர்பேடு

# லண்டனில் தவித்த அன்புமணி!

டிக்கெட் ஆகியவை இருந்தன. நல்ல வேளையாக பாஸ்போர்ட் பாக்கெட்டில் இருந்தபடியால் பிழைத்தேன்.

சந்திப்பு: ஸ்ரீநிவாசன்

**த**ங்க நகைகள் வாங்கும் பொதுமக்கள், தாங்கள் வாங்கும் நகையின் தரம் உயர்வானது தானா என்று அறிய, இந்திய அரசின் நுகர்வோர் மற்றும் பொது விநியோக அமைச்சகத்தின் கீழ் இயங்கும் பீரோ அஃப் இந்தியன் ஸ்டாண்டர்ட் (பிஐஎஸ்) – சில ஆலோசனைகளை வழங்கியிருக்கிறது. (இந்த பிஐஎஸ்ஸின் பூர்வாசிரமப் பெயர் ISI. முன்பு ஐஎஸ்ஐ முத்திரை என்று சொல்லப்பட்டது; இப்போது BIS எனப்படுகிறது!)

இதன் சென்னைக் கிளையின் டைரக்டர் எஸ். ரவிசங்கரின் பேட்டி:

● **ஹால் மார்க்கிங் திட்டம் என்றால் என்ன?**

எங்கள் இந்திய தர நிர்ணய அமைப்பு தரும் தர முத்திரைத் திட்டம், BIS விதி 1986ன் கீழ், தாமாக முன் வந்து கேட்கும் நகை வியாபாரிகளுக்கு மட்டுமே கொடுக்கப்பட்டு வருகிறது.

தங்கத்தினால் செய்யப்படும் பொருள்கள் சரியான மதிப்பீடு செய்யப்பட்டது எனவும், அதிகாரபூர்வமான அஸேயிங் மற்றும் ஹால் மார்க்கிங் மையத்தில் பரிசோதனைக்கு உட்படுத்தப்பட்டது எனவும், அவற்றில் உபயோகப்படுத்தியிருக்கும் உலோகம் தேசிய/உலகளாவிய தர நியமங்களுக்கு ஏற்ப சுத்திகரிக்கப்பட்டதையும் குறிக்கிறது, ஹால்மார்க்கிங் முத்திரை.

● **ஏன் எல்லா நகை வியாபாரிகளும் இதைப் பெறுவதில்லை?**

தங்க நகைகளுக்கு உயர்தர முத்திரை – ஹால் மார்க்கிங் – பெற வேண்டும் என நினைக்கும் நகை வியாபாரிகள், முதலில் எங்கள் அமைப்பின் சான்றிதழ் பெற்ற நகை வியாபாரியாக இருப்பது அவசியம்.

தர நிர்ணய அமைப்பின் சான்றிதழ் பெற, அவர்கள் பிஐஎஸ்ஸுக்கு விண்ணப்பிப்பதோடு, முறையான தர நிர்வாகத்தையும் பின்பற்றுவதாக உறுதி செய்தல் அவசியம்.

இந்திய தரத்தினை உலகம் பூராவும் ஏற்றுக் கொள்ளும் வண்ணம் இதற்கான வழிமுறைகள் வரையறுக்கப்பட்டுள்ளன.

● **என்னென்ன வழிமுறைகள்?**

அ. மாதிரி எடுத்துப் பரிசோதித்தல் அவசியம்.

ஆ. அப்படிப் பரிசோதனை செய்வதற்கான வசதிகள் வேண்டும்.

இ. பயிற்சி பெற்ற, திறமையான நபர்கள் இருந்தால் மட்டுமே அஸேயிங் எனப்படும் சுத்திகரிப்பு, மற்றும் உயர்தர நிர்ணயம் (ஹால்மார்க்கிங்) செய்யும் அங்கீகார மையங்களை, எங்கள் அமைப்பு உறுதி செய்யும்.

● **தரச் சான்றிதழ் பெற்றுவிட்டு, மீறினால்...?**

தெரிந்தே விதிமுறைகளை மீறுபவர்களின் உரிமத்தைத் தற்காலிகமாக நிறுத்தி வைப்பதிலிருந்து, அதிகபட்ச அபராதம் விதிப்பது வரை தண்டனை உண்டு.

**சா**ன்றிதழ் பெற்ற நகைக் கடைகளில் நகைகள் வாங்கினால், நம்பகத்தன்மை, தரத்துடன் உறுதியான உத்தரவாதம் கிடைக்கிறது. தரம் குறைந்த தங்க நகை வாங்கிவிட்டுத் தூக்கம் இழந்து தவிப்பதற்குப் பதில், ஹால்மார்க்கிங் வசதி



யுள்ள நகைக் கடைகளில் வாங்குவது நுகர்வோருக்கு நிம்மதி மட்டும் அல்ல; பழுதில்லாத தங்கம் வாங்கிய திருப்தியும் கிடைக்கும்!

தங்கத்தில் நல்லது – கெட்டது என்று தரம் பிரித்துச் சொல்லி, பொதுமக்களைப் பாதுகாக்கும் முறை எழுநூறு வருடங்களாகவே இருந்து வருகிறதாம்!

"லொள் லொள்..." என்று பசிக் களைப்பில் ஈனஸ்வரத்தில் மெல்ல குரைத்தது. புண்ணாகிப்போன தன் வாலின் வலியைக்கூட பொருட்படுத்தாது நன்றியின் அடையாளமாய் மெல்ல அசைத்தது.

பானையில் கிடந்த நாலு சாதத்தை அலுமினியக் கிண்ணத்தில் போட்டு நிறைய சாதப்பானைத் தண்ணீரை ஊற்றி அள்ளி வாயில் போட்டாள் அஞ்சலை. தன்னையே வைத்த கண் வாங்காது பார்த்தபடி குரைக்கும் நாய்க் குட்டியைக் கண்டு எரிச்சல் எரிச்சலாக வந்தது.

"கெடந்ததெல்லாம் கெடக்கு. கெழவனைத் தூக்கி மணையில வையுன்னாளாம். அந்த கதையா இல்லே இருக்கு... எனக்கே சோத்துக்கு வழியில்லே. ச்சீ... ஓடு... நாயே...!"

வறுமையின் சலிப்பில் பிறந்த கோபத்தை அஞ்சலை தான் வளர்த்த நாயிடம் காட்டினாள்.

நாய்க்குட்டி 'நமக்குச் சாப்பாடு கிடைக்காது' என்பது புரிந்தது போல வாசலுக்கு ஓடி மரத்தடியில் சுருண்டது.

"பாவம்...!"

மறுகணமே மனசு இளகிப் போன அஞ்சலை, அவசரமாய் ஒரு மண் சட்டி எடுத்து அதில் மீதமிருந்த சாதத் தண்ணீரை ஊற்றி, வாசலுக்கு எடுத்துப் போய் நாயின் முன் வைத்தாள்.

ஒரு பார்வை பார்த்துவிட்டு, எழுந்திருக்காது மறுபடியும் முடங்கிப் போனது நாய்க்குட்டி.

"அட.... சரிதான்... சாப்பிடு. கோபமாக்கும்" கவலை மறந்து சிரித்துக் கொண்டாள் அஞ்சலை.

அஞ்சலையின் முகத்தைப் பார்த்து நாய்க்குட்டி, அதில் கோபம் கலைந்து, சற்று சிரிப்பு தெரிவதைப் பார்த்ததும் எழுந்து குடிக்க ஆரம்பித்தது...

குடித்துவிட்டு சற்று தெம்புடன், வாலை அசைத்தது.

"இம்... நம்ம வருத்தம்.. நம்ம கோபம் நம்மோடு. இந்த வாயில்லா ஜீவன் என்ன செய்யும்?" வாய்விட்டு பேசிக் கொண்டாள் அஞ்சலை.

பக்கத்து டூரிங் தியேட்டர்ல இரண்டாவது காட்சி சினிமா பார்த்துட்டு திரும்பும் போது இருட்டுல ஆத்து ஓரமாகக்கிடந்த நாய்க்குட்டியை இரண்டு மாசத்துக்கு முன்பு தான் தூக்கி வந்திருந்தாள் அஞ்சலை.

'ராசா' என்று பெயரிட்டு பத்துகாக



ரொட்டியில ஒண்ணு ரெண்டு வாங்கிப் போட்டவள் தான் இந்த அஞ்சலை.

ஆனால்...

இந்த இரண்டு மாசத்துல வரிசையா நடந்த துயரங்கள் அந்த நாய் மீதும் எரிந்து விழச் செய்தது.

சதா பட்டைச் சாராயம் குடித்து வந்த புருஷன் முனியன் விஷச் சாராயத்துல செத்துப் போனது. ஆத்துல சரியா தண்ணி வராததுல பாதிக்கப் போன விவசாயம். நடவு வேலை இல்லாதது மட்டுமில்லாது காலுல வேலிக் கருவை முள்ளு குத்தி வீங்கிப் போனது.

அதுமட்டுமில்லாது...

புதுசா வந்த மருமகள், ஒரே பையனை 'அட இந்த ஊர்ல என்னய்யா கிழிச்சே... வா... டவுனுக்கு'ன்னு ரிக்ஷா ஓட்ட இருத் துறைப்பூண்டிக்கு அழைச்சிட்டுப் போனது...

எல்லாமே மனசை என்னவோ செய்தது...

'ச்சே...நன்றி கெட்ட உலகம்...' தனியே அமர்ந்து புலம்பிக் கொள்வாள் அஞ்சலை.

"என்ன அஞ்சலை. சாப்பிட்டியா...?" பக் கத்து வீட்டு அலமேலு கேட்டுக் கொண்டே வந்தாள்.

"நாலு சோறு பாணையில

**கமலா கந்தசாமி**

# நாய்க்குட்டி

கெடந்துச்சு... அதை எடுத்து வாயில வைக் கிறதை இந்த சனியன் பார்த்துட்டு வாலை ஆட்டிச்சி... அதுகிட்ட ஊத்திட்டேன்..." நாய்க் குட்டியைப் பார்த்தபடி அஞ்சலை சொன்னாள்.

"ஆமாண்டி... சொர்க்கத்துக்குப் போனா லும் கக்கத்துல ஒண்ணு... இந்த சனியனைத் தொரத்தி அடி.. அது வந்த ராசிதான். இந்த ரெண்டு மாசத்துல உன்னை இப்படி ஆட்டி வைக்குது..."

அலமேலு சொன்னதும்தான்,

ஆமாம்... இந்த நாய்க்குட்டி வந்த ராத் திரியே பசுமாடு கன்னு போட்டு கன்னுக் குட்டி செத்துப்போச்சு... புருஷன் போய்ச் சேர்ந்தான். காலில முள் குத்துச்சி.. மருமகளும் புள்ளையும் விட்டுட்டுப் போனாங்க...

எல்லாமே வரிசையாய் ஞாபகம் வந்தன.



"சீ... ஓடு..."

கூரையில் சொருகியிருந்த கம்பை எடுத்து நாய் மீது வீசினாள் அஞ்சலை.

கம்பு காலில் பட்டு நல்ல அடி...

'என்ன ஆச்சு இவளுக்கு... இப்பதானே சிரித்தபடி சோறு ஊத்தினாள். ஏன் அடிக் கிறா...?' என்று புரிந்து கொள்ள முடியாத நாய்க் குட்டி, பரிதாபமாக குரைக்கக்கூட முடி யாது பார்த்தது...

"ஓடு... சனியனே! தொலைஞ்சி போ...

எல்லாம் உன்னாலதான்..."

மறுபடியும் ஒரு கல்லை எடுத்து வீசினாள் அஞ்சலை. அதே காலில் பட்டது கல். வீல் என்று கத்திக் கொண்டு ஓட ஆரம்பித்தது.

ஆவேசம் வந்தவள்போல பின்னாடியே துரத்தினாள். ஊர்க் கோடியில் இருந்த கோயில் வரை துரத்தி அடித்தாள்.

"அப்பாடி... விட்டது சனியன்..."

என்றபடி திரும்ப நடக்கும்போது முள் குத்திய காலில் மீண்டும் வலி...

நடக்க முடியாமல் உட்கார்ந்தாள்.

"இம்... தர்ம ஆஸ்பத்திரியில காட்டணும்"

மறு நாள் டவுனுக்குப் போய், மருந்து சீட்டு வாங்கி டாக்டரிடம் காட்டியபோது...



"அட என்னம்மா நீ... உடனே கவனிக்கிறதில்லே... புரையோடிப் போச்சே... விஷமுள்... ஒரு காலையே எடுக்கணும்... இல்லாட்டி உயிருக்கே ஆபத்தும்மா." என்றதும் இடிந்து போனாள் அஞ்சலை.

- பட்டாசு செய்யும் கலைக்கு 'பைரோ டெக்னிக்' என்று பெயர்.
- ரோல் கேப் வெடி, இந்தியாவில் சிவகாசியில் மட்டுமே தயாராகிறது.
- இத்தாலி, பிரான்ஸ், பெல்ஜியம், நியூசிலாந்து நாடுகளில் பெரியோர் மட்டுமே வெடி வெடிக்கலாம்.
- கனடாவில் 18 வயதுக்கு மேற்பட்டவர்களுக்கே பட்டாசுகள் விற்கப்படுகின்றன.
- ஹாலந்து நாட்டுச் சட்டப்படி குழந்தைகள் பட்டாசு வெடிக்காமல் பார்த்துக் கொள்வது பெற்றோர்களின் கடமை ஆகும்.

**தொகுப்பு :**
**மலர் சூர்யா**

மறுவாரமே அஞ்சலையின் ஒரு கால் எடுக்கப்பட்டது. பிள்ளைக்குச் சொல்லி அனுப்பினாள். பிள்ளையோ மருமகளோ வந்துகூட பார்க்கவில்லை. அலமேலுதான் இரக்கப்பட்டு இரண்டு நாள் துணை இருந்தாள்.

டிஸ்சார்ஜ் ஆனபோது, ரோட்டரி கிளப் மூலம் கிடைத்த ஊன்றுகோல் உதவியுடன் ஊர் வந்தாள். மினி பஸ்ஸில் இருந்து இறங்கும்போது தடுமாறினாள்.

"ச்சே... இனியும் இந்த உயிர் வாழணுமா?" சலிப்புடன் வாய்விட்டே தன் சுபாவப்படி பேசிக் கொண்டாள்.

'ஆள்றதுக்கு என்ன சொத்து கொட்டிக் கெடக்குது... யாருக்காக இனி வாழப் போறோம்...' என்றது உள் மனசு. மெல்ல நடந்தாள்.

சிவன் கோவில் வந்தது.

சிதிலமடைந்த காம்பவுண்ட் ஓரமாக பூத்திருந்த அரளிச் செடியைப் பார்த்ததும் சட்டென்று நினைவுக்கு வந்தது.

அரளிக் கொட்டை நல்ல விஷம். நன்றாக அரைத்து நல்லெண்ணெய்க் கலந்து சாப்பிட்டா பொட்டென்று போய்ச்சேர்ந்துடலாம்.

யோசனை முடிவானது. ஊன்று கோலை வேகமாக ஊன்றி அரளிச் செடியை நோக்கி நடந்தாள்.

நிறைய கொட்டைகள் கொட்டிக் கிடந்தன. ஏழெட்டு கொட்டைகளைப் பொறுக்கி மடியில் கட்டிக் கொண்டாள்.

''லொள்... லொள்...''

ஈனஸ்வரத்தில் ராசாவின் குரல் ஒலித்தது.

"அட..." வியப்புடன் திரும்பினாள் அஞ்சலை. சுருட்டி மடக்கி படுத்திருந்த நாய்க் குட்டி எழுந்து ஓடி வந்து அஞ்சலையைச் சுற்றி சுற்றி வந்து வாலை அசைத்தது. பசியால் களைத்த விழியில் ஒரு சந்தோஷம் மின்ன அஞ்சலையின் புடைவைத் தலைப்பை இழுத்தது.

"ராசா..." ஆசையுடன் தூக்கி அணைத்தாள் அஞ்சலை.

''பசியாடா?'' என்றபடி, ஆஸ்பத்திரியில் கொடுத்த பிரட் துண்டினை எடுத்து வாயில் கொடுத்தாள். பசி அடங்கியதும் சந்தோஷத்துடன்,

"லொள்... லொள்..."

குரைத்து... முத்தமிடுவதுபோல முகத்தில் நாயின் நாக்கு பட்டதும்...

''ராசா... என் ராசா... யாரு போனா என்ன... நீ இருக்கே... நீ இருக்கே... நன்றியோட... அது போதுண்டா...'' மடி அவிழ்ந்து, அதில் இருந்த அரளிக் கொட்டைகள் சிதறின.

அது பற்றிக் கவலைபடாத அஞ்சலை... ஒரு கையால் நாய்க்குட்டியை அணைத்து, மறு கையால் ஊன்று கோலை ஊன்றி வீட்டை நோக்கி நடக்க ஆரம்பித்தாள். ●

# பழசுக்கு மரியாதை!

பரம்பரை பரம்பரையாக ஒரே பொற்கொல்லரையும், கடையையும் விடாப்பிடியாகப் பல குடும்பங்கள், ஆதரித்து வருகின்றன என்றால் ஆச்சரியமாக இல்லை.

அப்படிப்பட்ட புகழ்பெற்ற மைலாப்பூர் டி.கே.மூர்த்தி அன்ட் கோ நிறுவனம், *1948 முதல் 1996* வரை வடக்கு மாட வீதியில் இருந்தது? ஆனாலும் வாடிக்கையாளர்களை மறந்து விடாமல், மூர்த்தி ஜுவல்லர்ஸ் என்ற பெயரில், அவருக்குப் பிறகு சி.கே. ரகுபதி தொடர்ந்து வருகிறார்.

நாட்டியத்துக்கான நகைகளை அறிமுகப்படுத்தியவர்கள் இவர்கள் என்று கூடச் சொல்லலாம். திருப்புவனம் அருகேயுள்ள அம்மன் கோயிலுக்கு வெள்ளிக் கவசமும், மயிலை சீனிவாசப் பெருமாளுக்கு முத்தங்கியும் செய்திருக்கிறார்கள். நெக்லெஸ், பூத்தாலி, மாங்காய் மாலை, ஜடை நாகர், சந்திரசூரியர், அட்டிகை, ராக்கொடி, சோக்கர் நெக்லெஸ், ஒட்டியாண முகப்பு, மகரகண்டி என்று ரகுபதி அடுக்கும் நகைகளின் பட்டியல் மிக நீண்டது. (சில நகைகள் இப்போது யாரும் போட்டுக் கொள்கிறார்களா என்றே தெரியவில்லை!)

"அந்த நாள் நகைக்கும் இந்த நாள் நகைக்கும் என்ன வித்தியாசம், ரகுபதி?"

"அந்த நாள் எட்டு பவுன் பத்து பவுன்ல செயின் போட்டுக்கிட்டாங்க. இப்ப மூன்று பவுன் நான்கு பவுன்ல போதும்!"

அன்றைய டிசைன்களையேதாம் இப்போதும் பலர் விரும்பி வாங்குவதாகவும், குறிப்பாக பழைமையான, hand-made நகைகளுக்குத்தாம் இன்னும் தமது வாடிக்கையாளரிடையே வரவேற்பு இருப்பதாகவும் சொன்னபோது கொஞ்சம் வியப்பாகத்தான் இருந்தது.



• சி.கே. ரகுபதி

• பாரம்பரிய நகை

கற்பனை வளம் மிகுந்த, பயிற்சி பெற்ற டிசைனர்கள் ஒரு பக்கம் தங்கள் கைவரிசையைக் காட்ட, கம்ப்யூட்டரில் வேறு கன்னாபின்னா என்று ஏராளமான டிசைன்கள் தோன்றிக் குழப்பி வைக்க—

பழசே போதும், ஓல்ட் ஈஸ் கோல்ட் என்பவர்களும் இன்னும் இருக்கிறார்களே!

"அவர்களில் சில பேரது விலாசங்கள் தாருங்கள். அவர்களையே நேரில் கேட்டு விடுகிறோம்" என்று ரகுபதியிடம் அவரது பரம்பரை வாடிக்கையாளர் முகவரிகள் சில வாங்கிக் கொண்டோம்.

சிம்ப்ஸன் உயர் அதிகாரிகளில் ஒருவரான ஆர்.வி. நாகராஜன் அவர்களது மனைவி அன்னபூர்ணா நாகராஜன், பழைய பாணி நகைகளானாலும், புதிய பாணி நகைகளானாலும் இவர்களிடமே ஆண்டாண்டுக் காலமாக வாங்கி வருவதாகச் சொன்னார். அனந்தலட்சுமி சடகோபன்–சுஜாதா விஜயராகவன் குடும்பங்களும் இந்தப் பட்டியலில் இருக்கின்றன! ●



• கமல்

"சூப்பர் ஆக்டரு கமலு கொஞ்ச காலமா ஒரு பாலிசியை ஃபாலோ பண்றார், கண்டுக்கினியா செல்வம்"ன்னு சக்கரம் விடுகதை போட்டுக்கிட்டே வண்டில குந்திக்கிச்க. நா கண்டக்கஞ்சி குடிச்ச சோம்பேறி கணக்கா திருதிருன்னு முழிச்சிட்டு மீட்டரைப் போட்டேன்." அதாவது ஒரு நல்ல படம் எடுத்தா அதுக்குப் பரிகாரமா ஒரு மசாலா படம் எடுக்குறார். இந்த தபா ரெண்டு மசாலான்னு சக்கரம் சொன்னதுமே புரிஞ்சி போச்சி... பார்ட்டி 'ஆளவந்தான்' படத்தைப் பத்திதான் பினாத்துதுன்னு.. அப்பாலே க்மலையும், ஆளவந்தான் தயாரிப்பாளர் தாணுவையும்தான் இப்போ பாக்கப் போறோம்ன்னு சொன்னதும் எனக்கு ஒரே குஷி.

பிரஸ்மீட் நடந்த ஜி.ஆர்.டி ஓட்டலுக்கு வந்தா கமலு வந்து பேசினு இருந்தாரு. இன்னாடா... மொட்டை தலையோட போஸ் குடுத்து பேப்பர்லே போட்டோ வந்துது. இப்போ தலை நிறைய இம்மாம் முடியோட இருக்காரேன்னு எம் மண்டையைப் பிச்சிகினேன். நல்ல வேளையா கமலே அந்த ரகசியத்தை ரிலீஸ் பண்டாரு. 'பல லட்சம் செலவிலே மொட்டை தலை விக் வெச்சு இந்தப் போட்டோவை எடுத்தோம். ஆனாகாட்டியும்; படப்பிடிப்புல நெசமாலுமே மொட்டை போடுறதா இருக்கேன்னு' சொன்ன கமலு. இந்தக் கதைய பாலசந்தரு கம்பெனிக்குத்தான் மொதல்ல ரெடி பண்ணியிருந்தாராம்! ஆளவந்தான் படத்துல வரப் போற வில்லன் கமலுக்குத்தான் பெரிய அப்ளாஸ் கிடைக்கப் போவுதாம்.

# மொட்டை ரகசியம்!



• நாராயணசாமி

பிரேக் பெயிலியர் ஆன ஆட்டோ கணக்கா சீறிக்கிட்டு வந்த பல ஆயிரம் வெப்சைட்டுங்க, வந்த வேகத்துலயே வூட்டுக்குப் பூடிச்சி. இந்த ஆளுங்க எந்தத் தைரியத்துலே அதுவும் ஒரே சமயத்துலே பதினோரு வெப்சைட்டுங்க தொடங்குறாங்கன்னு வழி நெடுவ சக்கரம் புலம்பிக்கிட்டே வந்துச்சி. இன்னா மேட்டருன்னு பார்த்தா, பிபிஎல் மொபைல்போனு, கிரெடிட் கார்டு வித்து அனுபவப்பட்ட இன்ஃபோ நெட்ஒர்க் மேனேஜ்மெண்ட் கம்பெனிதான் இந்த வெப்சைட்டுகளைத் தொடங்கியிருக்குது. ஹாலிடே, டொமஸ்டிக், ஆட்டோ, ஸ்டுடண்ட், ஹோட்டல், சர்வீசஸ், பிராப்பர்ட்டி, கம்ப்யூட்டர், மெடிக்கல்ன்னு மொத்தம் பதினோரு ஃபீல்டு பத்தின தனித்தனி தகவல் சைட்டுங்க. இதுங்க எல்லாத்துக்கும் தலைவரு சைட் Indiaclick info.com ஒரு சைட்டுக்கு மாசம் பன்னிரண்டு ரூவா கட்டணும். அப்போதான் பாஸ்வேடு தருவாங்க. இப்போ டொமஸ்டிக் டாட்காம்லே பூந்து, உங்க ஏரியாவுலே எலக்ட்ரீசியன் எங்கே இருக்காருன்னு பார்க்கலாம். ஸ்டுடண்ட் டாட்காம்ல பூந்து, வீட்டுக்கு வந்து உங்க புள்ளைக்கு ஹிந்தி டூஷன் சொல்லித் தர்ற அழகான டீச்சரு எங்க இருக்காங்கன்னு தெரிஞ்சுக்கலாம். இந்த சைட்டுங்க போதாதுன்னு வர்ற டிசம்பருக்குள்ளே இன்

நகர்வலம்

## ஆட்டோ செல்வம்



னும் நாற்பது சைட்டு ஆரம்பிக்க போறாங் களாம். அப்போ ஒரு பெரிய கூட்டத்தை மேய்க்கணுமே? யாரு இந்த கம்பெனிக்கு எம்.டின்னு பார்த்தா டி.எஸ். நாராயணசாமி யாம். நடிகரு அரவிந்தசாமி அண்ணன் கணக்கா இங்கிலிபீசுல ரவுண்டு கட்டி பேசினதுமே சக்கரம் எஸ்கேப் ஆயிடுச்சி...

**ந**ம்ம சிங்காரச்



சென்னைக்கி 'குவாரன்டைன்' ஸ்டேஷன் கொண்டு வரதுக்கு ஐம்பத்துரெண்டு வருஷம் ஆகிப்பூடுச்சின்னு சக்கரம் வாயைத் தொறந்தப்போ எனக்கு டென்ஷன் ஆகி பூடுச்சி. எங்கையில சொல்றப்போ எதா இருந்தாலும் தெளிவா சொல்லிடுன்னு எத்தனை தபா சொல்லியிருக்கேன்னு முறைச்சதும் பார்ட்டி பயந்து சொல்லிடிச்சு. நம்ம மீனம்பாக்கம் ஏர்போட்டுக்கு எதுத்தா போல மத்திய அரசாங்கம் புதுசா தொடங்கியிருக்கு. நீயே நேர்ல பார்த்தியானா புரியும்"ன்னு. அங்க போனா ஏகப்பட்ட மிஷினுங்க. நம்ப சுற்றுச் சூழல் அமைச்சரு டி.ஆர்.பாலு, மத்திய விவசாய அமைச்சரு ஸ்ரீபத்நாயக்ன்னு விஐபிங்க வந்து தொறந்து வெச்சாங்க. அப்பால குவாரன்டைன் பத்தி விவரம் தெரிஞ்சதும் பகீர்ன்னு ஆயிப்போச்சி. வெளிநாட்டுலேர்ந்து, தானியம், விதை, பழம், இறக்குமதி பண்றோம். அதுல எல்லாம் கிருமி, பூஞ்சாளம் இதையெல்லாம் வெச்சு அனுப்பினா, விவசாயம் அழிஞ்சு, மக்கள் வியாதி வந்து அப்புறம் மருந்தை இறக்குமதி பண்ணுவாங்கன்னு பல வளர்ந்த வெளிநாடுங்க சதி பண்ணுமாம். காளியாத்தா! இது கம்ப்யூட்டர் வைரசைவிட பெரிய கதையா இருக்கே! இந்த மாதிரி வைரஸ், பூஞ்சாளம் இருந்தா அதைக் கண்டுபிடிச்சி, இறக்குமதி செய்யாம திருப்பி அனுப்பத் தான் இந்த குவாரன்டைன் ஸ்டேஷன். மொத்தம் பதினாலு ஆராய்ச்சி வசதி இருக்கு. ஒரு விஷயம் தெரியுமா நம்ம நாட்டுல பரவின 'பார்த்தீனியம்' செடி இப்படி வெளிநாட்டுலேர்ந்து தொத்திகிட்டு வந்ததுதானாம்.

**டை**டல் பார்க் பக்கத்துலே நடந்த எர்த் ஸ்டேஷன் திறப்பு விழாவுலேயும் நம்ம டி.ஆர். பாலுதான் ஹீரோ. டைடல்பார்க்குல சாப்டுவேரு தயாரிக்கிற எல்லா கம்பெனிக்கும், வானத்துல சுத்திகினு இருக்கிற சாட்டிலைட்கூட தொடர்பு ஏற்படுத்தி கொடுக்கிற எர்த் ஸ்டேஷனை சாப்டுவேர் டெக்னாலஜி பார்க்ஸ் ஆப் இந்தியாங்கிற மத்திய அரசு நிறுவனம் உருவாக்கியிருக்கு. அதைத் தொறந்து வெச்சது தகவல் தொழில் நுட்ப மினிஸ்டரு பிரமோத் மகாஜன். தென் சென்னை தன்னோட தொகுதிங்கறதுனால கம்ப்யூட்டர், இன்டர்நெட், சாப்டுவேர் துறையில இந்தியாவும் தமிழ்நாடும் எப்படி இருக்குன்னு ஒரே புள்ளிவிரமா கொடுத்து டி.ஆர். பாலு பேச விழாவுக்கு வந்தவங்க விசில் மட்டும்தான் அடிக்கலே. பிரமோத் பேசும்போது டி.ஆர். பாலுவுக்கு ஐடி பாலுன்னு பட்டம் கொடுக்கலாம்ன்னாரு. அப்பாலே மலைஜாதி ஜனங்க அதிகம் வாழும் ஏற்காடு, கொல்லிமலை, ஜவ்வாது மலை, கல்வராயன் மலை ஆகிய நாலு இடத்துலேயும் இன்டர்நெட், கம்ப்யூட்டர், எஸ்.டி.டி வசதியுள்ள கம்யூனிட்டி சென்டர் ஆரம்பிக்க தாங்கன்னு பாலு கேக்க, மேடையிலேயே பிரமோத் ஓகேன்னுட்டாரு. தேர்தல் வரும்போதுதான் நம்ம ஆட்களுக்கு மலைஜாதி ஜனத்தும் பேர்ல அக்கறை வரும்ன்னு சக்கரம் புச்சா ஒண்ணுத்தைக் கண்டு பிடிக்க.. கம்மா காட்டியும் வாயை மூடிக்கிட்டு வா. இப்புடியாவது நல்லது நடந்தா சரின்னு வுட்டோம் சவாரி!!

— மீண்டும் சந்திக்கும் வரை மீட்டருக்கு மேல் கேட்காத செல்வம்.



**மேஷம் :** *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

இந்த வாரம் எல்லார்ட்டயும் நீங்க இனிமையா பழகறது அவசியம். டென்ஷன் ஆனா கட்டுப்படுத்திக்குங்க. அரசியல்வாதிகள் கொஞ்சம் ஜாக்கிரதையா அறிக்கை விடுங்க. புதியவங்ககிட்ட பேசும்போது எச்சரிக்கையா பேசறது நல்லது. வெளிநாட்டுல இருந்து நல்ல செய்தி வரும். உங்க திறமை பளிச்சிட்ற மாதிரி ஏதாவது செய்வீங்க. கலைத்துறையைச் சேர்ந்தவங்களுக்கு இது நல்ல நேரம். பெண்கள் புதுசா நகைகள், ட்ரெஸ் வாங்க வாய்ப்பிருக்கு. திடீர் அதிர்ஷ்ட வாய்ப்புகள் வந்து ஆச்சர்யப்பட வைக்கும். கணவன் மனைவி உறவு சீரா இருக்கும். பெரியவங்க அட்வைஸ்படி நடந்தா பிரச்னைகள்லயிருந்து தப்பலாம்.



**ரிஷபம் :** *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)*

இந்த வாரம் பொருளாதாரப் பிரச்னை இல்லை. இருந்தாலும் சின்னச் சின்னப் பிரச்னைகள் வந்து டென்ஷன் ஆக்கும். கவலைப் படாதீங்க. உடல் ஆரோக்கியத்துல கவனம் வையுங்க. அலைச்சலைத் தவிர்த்தா ஆஸ்பத்திரி செலவு குறையும். சாப்பாடு விஷயத்துல வாயைக் கட்டுறது நல்லது. கண்டதைச் சாப்பிடாதீங்க. கொடுக்கல் வாங்கல்ல ஜாக்கிரதையா இருங்க. வெளியூர் போறதா இருந்தா தவிர்த்திடறது நல்லது. மின்சாரம், நெருப்பு சம்பந்தமான துறைகள்ல வேலைப் பாக்கறவங்க கவனமா செயல்படறது அவசியம். வீடு, மனை, வாகனம் வாங்கறதா இருந்தா இப்ப வேண்டாம். வீண் வம்பு வழக்குகள்ல தலையிடாதீங்க.



**மிதுனம் :** *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*

உங்களோட திறமை புத்திசாலித்தனம் வெளிப்பட்ற வாரம். எந்தக் காரியத்தையும் எப்பாடுபட்டாவது நிறைவேற்றிடுவீங்க. எதிர்ப்புகள் இருக்காது. வீடு, மனை, வாகனம் ஏதாவது வாங்க இப்ப வாய்ப்பு இருக்கு. போட்டிப் பந்தயங்கள்ல பரிசுகள் கிடைக்கலாம். காவல், இராணுவம், சட்டம் ஆகிய துறைகள்ல வேலை பார்க்கறவங்களுக்குப் புகழ், பாராட்டு கூடும். பொருளாதாரத்துல இப்ப அபிவிருத்தி காணலாம். வீண் அலைச்சலைத் தவிர்க்கறது நல்லது. செலவு எகிறும். பயணத்துல எச்சரிக்கை அவசியம்.



கடக ராசிக் காரரான தீபா வெங்கட் நினைச்ச காரியத்தை இப்ப முடிக்கலாமாம்.



**கடகம் :** *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

உங்களோட திட்டங்கள், எண்ணங்கள்லாம் வெளிப்பட்ற நேரம். சினிமா, கலைத்துறையைச் சேர்ந்தவங்களுக்கு வெற்றிகள் குவியும். அதுக்காக மகிழ்ச்சியில குதிக்காதீங்க. வருமானம் குவியும். பெண்கள் நினைச்ச காரியத்தை இப்ப முடிக்கலாம். உல்லாசம் கேளிக்கைனு ஜாலியா இருக்கப் போறீங்க. புதுசா நகைகள் வாங்க சான்ஸ் இருக்கு. சின்னச் சின்னப் பிரச்னைகள் அப்பப்ப தலை நீட்டும். பக்குவமா சமாளிங்க.

# நடக்குமென்பார், நடக்கும்!

பேச்சுல நிதானம் ரொம்ப முக்கியம். கொடுக்கல் வாங்கல்ல எச்சரிக்கை அவசியம். வீண் வம்பு வழக்குகள்ல தலையிடாதீங்க. மனசுல அசை போட்டுக்கிட்டு இருக்கற மாதிரியான சம்பவங்கள் நடக்கும். திடீர் அதிர்ஷ்ட வாய்ப்புகளும் வரலாம்.



**சிம்மம் :** *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

உங்க புத்திசாலித்தனம் வெளிப்பட்ற நேரம். எடுத்த காரியத்தை எப்பாடுபட்டாவது முடிச்சிடுவீங்க. பண நடமாட்டம் அதிகமா இருக்கும். கலைத்துறையைச் சேர்ந்தவங்களுக்கு வாய்ப்புகள் தேடி வரும். பார்ட்டி, பிக்னிக்னு சுத்தறதுக்கு வாய்ப்பு இருக்கு. புது பொருள்கள் ஏதாவது வாங்குவீங்க. வெளிநாட்டுல இருந்து நல்ல செய்தி ஒண்ணு வரும். பேச்சுல நிதானம் அவசியம். மனசுல சின்னச் சின்னக் குழப்பம் வந்து இம்சை பண்ணும். கண்டுக்காதீங்க.

# அக்டோபர் 25 முதல் 31 வரை



**கன்னி** : *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*

இந்த வாரம் உங்க முகத்துல புதுப்பொலிவு ஏற்படும். எந்த விஷயத்தையும் தலைகீழா நின்னாவது முடிச்சாதான் உங்களுக்குத் தூக்கம் வரும். கொடுக்கல் வாங்கல்ல லாபம் கொழிக்கும். இருந்தாலும் கொஞ்சம் கவனமா இருங்க. ஏமாத்தறதுக்கு வாய்ப்பிருக்கு. வீட்ல விஷேசம் நடக்க சந்தர்ப்பம் வரும். கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு முன்னேற்றம் நிச்சயம். பாராட்டும், மதிப்பும் ஏறும். அலைச்சலைத் தவிர்த்திடுங்க. இல்லைன்னா உஷ்ண சம்பந்தமானப் பிரச்னைகள் வந்து இம்சிக்கும்.



**துலாம்** : *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம், 3-ம் பாதம் வரை)*

சினிமா, கலைத்துறையைச் சேர்ந்தவங்க முன்னிலைக்கு உயருவாங்க. இதுவரை தள்ளிப் போய்ட்டிருந்த திட்டங்கள் இப்ப நிறைவேறும். பொருளாதார நிலை உயரும். புதுசா பொருள்கள் வாங்க வாய்ப்பிருக்கு. பண நடமாட்டத்துக்குப் பஞ்சமில்லை. பேச்சுல இனிமை, வசீகரம் அதிகரிக்கும். மத்தவங்க பாராட்டைப் பெறுவீங்க. உடல் ஆரோக்கியத்துல கவனம் வைக்கறது நல்லது.



**விருச்சிகம்** : *(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

உங்க திறமை வெளிப்படற நேரம். காவல் இராணுவம், சட்டத் துறைகளைச் சேர்ந்தவங்களுக்குப் புகழ், பாராட்டுக் கிடைக்கும். புதுசா ஏதாவது சொத்து வாங்க வாய்ப்பிருக்கு. கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு உற்சாகம் கரைபுரண்டு ஓடும். பொருளாதார நிலையில எச்சரிக்கையா இருங்க. அதிகமா செலவழிக்காதீங்க. முன்ன பின்ன தெரியாதவங்ககிட்ட அதிகமா பேசாம இருக்கறது நல்லது. யார்ட்டயும் வெளிப்படையா பேசாதீங்க. எதிர்பாராத செலவு வந்து இம்சை பண்ணும். ஜாக்கிரதை.



**தனுசு** : *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*

உங்களோட மதிப்பு, அந்தஸ்து உயரும். நீங்களே ஆச்சர்யப்பட்டுப் போவீங்க. பேச்சுல நிதானம் ரொம்ப முக்கியம். கோபம் உணர்ச்சிவசப்படுதலையெல்லாம் விட்டுடுங்க. பொருளாதாரம் திருப்தியா இருக்கும். அதுக்காகக் கண்டபடி செலவழிக்காதீங்க. அரசியல்வாதிங்களோட செல்வாக்கு உயரும். குடும்பத்துல மகிழ்ச்சி நிலவும். அரசு அலுவலகங்கள்ல வேலை பார்க்கிறவங்களுக்குப் பதவி உயர்வு, இடமாற்றம் வரலாம். சின்னச் சின்னத் தொல்லைகள் வந்து அப்பப்ப தொந்தரவு பண்ணும். கண்டுக்காதீங்க.



**மகரம்** : *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

உங்களோட முகம் திடீர்னு இப்ப அழகா தெரியும். சிற்பிகள், ஓவியர்களுக்கெல்லாம் வரவேற்பு கூடும். கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு இது முன்னேற்றமான வாரம். பாராட்டு கிடைக்கும். வெளிநாட்டுல இருந்து நல்ல செய்தி வரலாம். புது ஃபிரண்ட்ஸ் கிடைப்பாங்க. பயணத்தால நல்ல காரியம் நடக்கலாம். சின்னச் சின்ன இடையூறுகள், குறுக்கீடுகள் வந்து தொல்லை பண்ணும். கவலைப்படாதீங்க. பயணம் போனா கவனம் அவசியம். சிறு விபத்து, திருட்டு நடக்க வாய்ப்பிருக்கு. ஜாக்கிரதை. வீண்வாக்குவாதங்களைத் தவிர்த்திடறது பின்னால உதவும்.



**கும்பம்** : *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

வெளிநாட்டுல இருந்து நல்ல செய்தி வரும். புனிதமான காரியங்கள்ல ஈடுபட சந்தர்ப்பம் வரும். கொடுக்கல் வாங்கல்ல எச்சரிக்கையா ஈடுபடுங்க. அதிர்ஷ்ட வாய்ப்பை இப்ப நம்ப வேண்டாம். இருக்கற பணத்தைக் கண்டபடி செலவு பண்ணாதீங்க. மத்தவங்ககிட்ட பழகும்போது சுமுகமா பழகறது நல்லது. எதிலயும் நிதானம் அவசியம். உடல்நலன்ல கவனம் வையுங்க. விளையாட்டு, போட்டி பந்தயங்களை இந்த வாரம் மூட்டைக்கட்டி வச்சுக்கறது நல்லது. வெளியூர் பயணத்தைத் தவிர்த்திடுங்க.



**மீனம்** : *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

உங்க திறமை பளிச்சிடற நேரம். திடீர்னு அழகா தெரிவீங்க. மனசுக்கினிய நல்ல செய்தி ஒண்ணு வந்து சேரலாம். பொருளாதாரப் பிரச்னை இருக்காது. பெண்களுக்கு உற்சாகமான வாரம். கேளிக்கை, பார்ட்டினு சுத்தறதுக்கு வாய்ப்பிருக்கு. சட்டம், காவல், இராணுவத் துறைகளைச் சேர்ந்தவங்க சாதனை படைப்பாங்க. கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்குப் புகழ் பாராட்டு உண்டு. அரசியல்வாதிகள், நிர்வாகத்துறையில் உள்ளவங்க பொறுப்பா செயல்படறது நல்லது. அலைச்சலைத் தவிர்த்திடுங்க. உஷ்ண சம்பந்தமான உபாதைகள் வரலாம். ●

## அக்னிசர்மா பக்கம்



# காந்தி



தமிழில் 'காந்தி என்றதும் மனசுக்குள் சின்ன போராட்டம். தேசத் தந்தை தமிழ் பேசுவதை ஏற்றுக் கொள்ளலாம் சரி, படத்தில் வரும் வெள்ளைக்காரர்களும் தமிழ் பேசினால் நன்றாகவா இருக்கும்?

படம் ஆரம்பித்ததுமே சந்தேகங்கள் பறந்துபோய்விட்டன! தமிழ் வசனங்களுக்காக இயக்கி, நடித்து, இசையமைத்து, ஒளிப்பதிவு செய்த படமாகத் தோன்றியது அட்டன்பரோவின் காந்தி!

உருவம், உதட்டசைவு, முகபாவம் இவற்றுக்கு மிகப் பொருத்தமாக இருந்தால் மட்டுமே ஒரு டப்பிங் படம் வெற்றி பெறும். காந்தி படத்தில் அதை தொண்ணூற்றொன்பது சதவீதம் சாத்தியமாக்கி இருப்பதில் ரியல் இமேஜ் மீடியா நிறுவனத்தின் உழைப்பு தெரிகிறது. இயக்குனர் வஸந்த், நடிகர் விக்ரம் ஆகிய இருவரது குரலும் படத்தில் காந்தியாக வாழ்ந்திருக்கும் பென் கிங்ஸ்லியின் உருவத்திற்கும் உதட்டசைவிற்கும் அற்புதமாய்ப் பொருந்தி விடுகிறது. தென்னாப்பிரிக்க பிரிட்டிஷ் ஆளுநர், இந்திய வைசிராய் என்று எல்லோரும் 'நல்ல தமிழ்' பேசினாலும் நெருடல் இல்லை. வசனங்களில் கால கட்டம் சிதையாத தொனியைக் கையாண்டிருக்கும் வலம்புரி சோமநாதன், அருண் வீரப்பன் இருவருமே உயிரைக் கொடுத்திருக்கிறார்கள். தமிழ் காந்தியைப் பார்க்கிறபோது பதினெட்டு ஆண்டுகளுக்கு முன்பு வந்த படம் என்று நம்புவது கடினமாகத் தோன்றுகிறது. கூடுதலாக டி.டி.எஸ். சவுண்ட் கலவையுடன் டப் செய்யப்பட்டுள்ளது.

தொழில்நுட்ப அற்புதங்களால் மட்டுமே ஒரு திரைப்படம் மனத்தைத் தொட்டுவிட முடியாது. 'தமிழ் காந்தி' வாழ்வது அந்தத் தொழில்நுட்ப அற்புதங்களைத் தூக்கிச் சாப்பிட்டு விடும் நிரந்தர அற்புதமான மோகன் தாஸ் கரம்சந்த் காந்தி பாத்திரத்தால்! படத்தில் உழைத்த அனைத்து கலைஞர்களும் அவரை பயபக்தியுடன் அணுகிப் புரிந்து கொண்டிருப்பதால்.

**- விஷ்ணுவல்தாசன்**


**Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi**
**Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.**
**Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623;**
**Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.**
**Annual Subscription : India : Rs. 275/-; Overseas : Rs. 2000/- (Air Mail)**
**Half Yearly Subscription : India : Rs. 140/-; Overseas : Rs. 1000/- (Air Mail)**

Registered with the Registrar of Newspaper of India
No. 1041/57 * Registered No. TN / Chief PMG-141 /
Licensed to post without prepayment under PMG's L
No. WPP 37 * Registered as a Newspaper in Srilan